1934

சிவமயம்.

மறை ஞானசம்பந்த நாயனார்

வடமொழியினின்றும் மொழிபெயர்த்தருளிய

# சிவதருமோத்தரம்

## மூலமும் - உரையும்.



இச்சாஸ்திரம்

சைவாகமம் இருபத்தெட்டினுள்

இருபத்து நான்காவதாகிய

**சந்தான சர்வோத்தமத்தின்**

உபபேதம் பதினொன்றினுள்

எட்டாவதாயுள்ளது

மதராஸ் ரிப்பன் பிரஸ் பதிப்பு,

நெ. 20, ஸ்டேன்ஸ் ரோட், P. B. மதராஸ்.



இதன் விலை]    1938    [ரூபா 3—0—0

சிவமயம்

# முகவுரை



வேதப்பொருள்களை மயக்கற விளக்கும் சைவாகமங்கள் இருபத்தெட்டு. அவை ஆகௌகப்பிரகார மென்றும், பிரதிசம்ஹிதாப் பிரகாரமென்றும் இரண்டு வகையாய்க் கூறப்படும்.

காமிகமுதல் சுப்ரபேதம்வரை பத்தாகமங்களும் சிவபேதமான ஆகௌகப் பிரகாரமாம்.

விஜயாதி வாதுளாந்தம் பதினெட்டும் ருத்ரபேதமான பிரதிசம்ஹிதாப் பிரகாரமாம்.

ஆக, காமிகமுதல் வாதுளம் ஈறாகவுள்ள ஆகமங்கள் 28 இவற்றின் விரிவைச் சித்தாந்த சாராவளி முதலிய நூல்களிற் காண்க.

இவற்றுள், ஈசானமுகத்திற் றோன்றி, வரிசைக் கிரமத்தில் 24-வதாயும், ருத்திரபேதமாயும் விளங்குவது சந்தான சர்வோத்தமம். அது இலிங்கத்திரக்ஷம், சூக்ஷம் ... சங்கிரதந்திரம், மஹேஸ்வர ஆகமம், அசங்கியா தந்திரம், அநிலாகமம், தவந்துவாகமம், சிவதருமோத்தரம், வாயு ப்ரோக்தம், திவ்ய ப்ரோக்தம், ஈசாநியம் என 11-பிரிவுகளையுடையது.

இப் பதினொரு பிரிவில், 8-வதாகிய சிவதருமோத்தரம் குமாரஸ்வாமியார் அகஸ்தியர் வினவிய சிவதருமத்திற்கு உத்தரமாய்க் கூறப்பட்டதால் சிவதருமோத்தர மெனக் கூறப்பட்டது.

இச் சிவதருமோத்தரத்தில் பதி பசு பாச இலக்கணங்களும், சரியாதிபாத இலக்கணங்களும், சாலோகாதிபத இலக்கணங்களும் கூறப்படுகின்றன.

இதனைச் சைவ சமயாசார அநுஷ்டானபரர்கள் சிந்திக்கவேண்டியது அவசியம்.

சிவதருமோத்தர

# இயலின் அட்டவணை.


| எண் | இயலின் பெயர். | பாடற்றொகை | பக்கம். |
|---|---|---|---|
| | பாயிரம் ... ... | 15 | 1–10 |
| 1 | பரமதருமாதியியல் ... | 37 | 11–29 |
| 2 | சிவஞானதானவியல் ... | 83 | 30–69 |
| 3 | ஐவகையாகவியல் ... ... | 34 | 70–87 |
| 4 | பலவிசிட்டகாரணவியல் ... | 61 | 88–113 |
| 5 | சிவதருமவியல் ... ... | 35 | 114–128 |
| 6 | பாவவியல் ... ... | 107 | 129–169 |
| 7 | சுவர்க்கநரகவியல் ... | 224 | 170–241 |
| 8 | சனனமரணவியல் ... | 101 | 242–279 |
| 9 | சுவர்க்கநரக சேடவியல் ... | 49 | 280–299 |
| 10 | சிவஞானயோகவியல் ... | 128 | 300–363 |
| 11 | பரிகாரவியல் ... ... | 105 | 364–431 |
| 12 | கோபுரவியல் ... ... | 228 | 432–521 |
| | ஆக இயல் 12-க்குப் பாடல்கள் | 1207 | |

## சிவதருமோத்தரத்துள்
## மேற்கோளாகக் காட்டப்பட்ட நூல்களின் பெயர்.

1. அகப்பொருள் விளக்கம்
2. காஞ்சிப்புராணம்
3. கொடிக்கவி
4. சிவஞான சித்தியார்
5. சிவஞான போதம்
6. சிவப்பிரகாசம்
7. தண்டியலங்காரம்
8. திருக்குறள்
9. திருமந்திரம்
10. திருவருட்பயன்
11. திருவாசகம்
12. தேவாரம்
13. தேவிகாலோத்தரம்
14. தொல்காப்பியம்
15. நன்னூல்
16. வீரசோழியம்

# சிவதருமோத்தரத்துள்

## மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கும்

# செய்யுள்களின் முதற்குறிப்பு அகராதி.


| செய்யுள். | பக்கம். |
| --- | --- |
| அ | |
| அட்டமாசித்தி | 345 |
| அருகமருந்தமிழ் | 35 |
| அவையடக்கிய | 5 |
| அவையகம் | 337 |
| அவ்வுடனுவ்வு | 15 |
| ஆ | |
| ஆகமாசாரஞ் | 147 |
| ஆயிரமுகத்தா | 10 |
| இ | |
| இருக்கோசுவே | 54 |
| இரும்புயர்ந்த | 33 |
| இருவிதஞ்சந்த | 35 |
| ஈ | |
| ஈயுமாரிட | 147 |
| ஈரும்வாளுயிர் | 236 |
| உ | |
| உயர்ஞான | 30 |
| உவப்பினும் | 51 |
| எ | |
| எட்டுமூர்த்தி | 33 |
| எவரேனுந் | 407 |
| ஒ | |
| ஒத்தமைந்த | 35 |
| ஒருமையுளாமை | 339 |
| ஒருமொழி | 451 |
| ஒளிக்குமிருளுக் | 311 |
| க | |
| கடவுளுமுனிவ | 4 |
| கண்டியிற்பட்ட | 406 |
| கருவிதனித்தனி | 338 |
| கருவிற்றுயர் | 458 |
| கல்லாதார் | 74 |
| ,, நெஞ்சி | ,, |
| கற்றல்கேட்ட | ,, |
| கா | |
| காட்டுபைசாச | 147 |
| காரேகூதிர் | 266 |
| காலமுண்டாக | 123 |
| கு | |
| குளகம்பலபாட் | 23 |
| கோ | |
| கோமூத்திரியே | 520 |
| கோலமாகரி | 510 |
| ச | |
| சங்கரனுடிய | 45 |
| சந்தஞ்சோதிட | 54 |
| சருக்கமுடிவினு | 27 |
| சூ | |
| சூத்திரத்து | 10 |
| செடிகணே | 75 |
| ,, | 406 |
| செயப்படுபொரு | 98 |
| த | |
| தன்னுற்பிறராற் | 458 |
| தா | |
| தானம்யாகம் | 510 |
| து | |
| துன்னுமிராக்கத | 147 |
| தொ | |
| தொம்பதந் | 357 |
| நா | |
| நால்வேரியற்கை | 471 |
| நாவாரம்பனே | 33 |
| நீ | |
| நீராடியபின் | 375 |
| நு | |
| நுட்பமவ் | 10 |
| நே | |
| நேரடிநான் | 520 |
| ப | |
| பன்னேயுமோ | 355 |
| பனியாலிடி | 458 |
| பா | |
| பார்ப்பாராசர் | 451 |
| பி | |
| பிரமங்கன்னியை | 147 |
| பிரமம்பிராசா | 146 |
| பிறந்தநாள் | 359 |
| பை | |
| பையஞ்சுடர் | 316 |
| பொ | |
| பொழிப்பேயகல | 10 |
| ,, பொ | ,, |
| பொன்னும்வெள் | 224 |
| ம | |
| மருவுபிராசா | 147 |
| மா | |
| மாச்சீர்முன்வரு | 361 |
| ,, ,, | 430 |
| மு | |
| முடிவிலாற்றலை | 33 |
| முறைமையாழி | 147 |
| மெ | |
| மெய்ப்பால்வெண் | 3 |
| மோ | |
| மோகஞ்சுகந் | 366 |
| வ | |
| வஞ்சித்தென் | 363 |
| வணக்கமதிகார | 10 |
| வழங்குதெய்வம் | 147 |
| வழியெனப்படுவ | 6 |
| வா | |
| வாராக்காலத்து | 321 |
| வி | |
| வித்தைகள் | 337 |
| வினையினீங்கி | 6 |
| வீ | |
| வீற்றுப்பேதமு | 202 |
| வெ | |
| வெளிப்படு | 4 |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவதருமோத்தரவுரை

## பாயிரம்

### கடவுள் வாழ்த்து

விநாயகர் வணக்கம்

கலிநிலைத்துறை

மலைக்குமகள் பெற்றமக னைக்கயமு கத்தனைம
னத்தெழுதியான்
அலற்பிணிபி றப்பறவ னுக்களைய கத்தியமு
னிக்கருளினான்
உலப்பில்கரு ணைக்கடலு ருத்திரனு ருத்தனிலு
தித்தகுமரன்
இலக்குமிய லைக்கலியி னைக்கவுமு ரைப்பனுல
கிட்டமுறவே.

(இதன் பொருள்.) யான், மலையரையன் மகள் பெற்ற மைந்தனாகிய யானை முகத்தையுடைய விநாயகனை மனத்திலே தியானித்து வற்றாத கிருபாசமுத்திரமாகிய உருத்திரனது திருமேனியிற் றோன்றிய பிள்ளையார் தமதருளினா லான்மாக்களுக் காணவாதியா லுண்டான பிறவிநோய் தீர்த்தற்பொருட்டு அகத்திய முனிவருக் குபதேசித்த சிவதருமோத்தரத்தைக் கலிவலி கெடவும் உலகங் கதி பெறவு முரைக்கின்றேன்.

(விசேஷவுரை.) யானென்னு மெழுவா யுரைப்பலென்னு மல்லீற்றுத் தன்மை யொருமை வினைமுற்றொடு முடிந்தது. 'அனுக்களை''என்னு மையுருபு ஈண்டு நான்கனுருபாய் மயங்கிற்று. இலக்கல் - விலக்கல்; ஈண்டு உபதேசப்பொருட்டாய் நின்றது.

## சிவபெருமான் வணக்கம்

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

திருமாலும் போதினனுந் தேவருமா முனிவருமே
செறிந்து போற்ற
மருவாரும் பொழினிலவுந் தில்லைமணி மன்றுடன்
மகிழ்வான் றன்னை
உருவாகித் தானுயிர்கட் குருவாக்கி யளித்தடக்கி
யுய்யச் செய்யும்
பெருமானை நிருமலனைச் சிவனையடி பணிந்துளத்திற்
பேணு வாமே.

(இ - ள்.) நாரணனும் பிரமனுந் தேவரு முனிவரு நெருங்கி நின்று துதிசெய மணநிறைந்த சோலைகள் சூழுந் தில்லைமணி மன்றின்க ணின்று நிருத்தஞ்செய்ய மகிழ்வோனுமாய்த், தானே திருமேனி தரித்து ஆன்மாக்களைச் சிருட்டித்துத் திதித்துச் சங்கரித்து அனுக்கிரகஞ்செய்யும் பெருமானுமாய், அனாதிமல முத்தனுமாயிருக்கிற சிவனை யவனது ஸ்ரீபாத கமலத்தில் யாம் வணங்கி யெமதுள்ளத்தில் தியானிப்பாம்.

(வி - ரை.) ஓகாரம் - அசைநிலை. (க)

சின்மயனைச் சிவனைமல வலிதொலைய விஞ்ஞான
கலர்க்குஞ் செப்புஞ்
சொன்மயனைத் துகளிலியைத் துலையிலியைப் புலியரவுஞ்
சுரர்க்கொப் பாரும்
பொன்மயனும் புகழவருள் புரிவானை யனைத்துயிரும்
பொருந்திப் பேத
மின்மயனைப் பதம்பணிவா ரெணியவர வெணியபடி
யெய்துவாரே.

(இ - ள்.) ஞான மயனுமாய் மலவலி கெடப் பிரணவர் முதலிய விஞ்ஞானகலர்க்கு மருளிச்செய்த திவ்யாகமத்தை வடிவாயுடையனுமாய், மலரகிதனுமாய், ஒப்பிலாதவனுமாய், வியாக்கிரபாத பதஞ்சலிகளும்-தேவர்களுக்கொப்பாகிய தில்லை மூவாயிரவரும்-இரணியவன்ம மகாராசரும் பணிய அவர்களுக் கனுக்கிரகஞ் செய்வோனுமாய்ச், சருவான்மாக்களிடத்து மிரண்டற வியாபித்துப் பேதமற்றிருப்போனுமா யிருக்கிற சிவனை யவனது ஸ்ரீபாத கமலத்திற் பணியுமவர்கள் கருதின வாத்தைக் கருதினபடியே பொருந்துவார்கள்.

(வி - ரை.) 'சொல்' என்ப தாகுபெயரா யாகமத்தை யுணர்த்திற்று. 'விஞ்ஞானகலர்க்கும்' என்ற வும்மையால் மண்டலர் முதலிய பிரளயாகலர்க்கு மென்பதூஉங் கொள்க. விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னு மூவகை யான்மபேதங்களையுந் தத்துவப்பிரகாசம் உஎ-ம் பாட்டிற் கண்டுகொள்க. (உ)

## சத்தி வணக்கம்

‡ அப்பாலைக் கப்பாலைக் கப்பாலா யறிவரிய
வமலை தன்னை
யப்பாலுந் தானாகித் தொழிலைந்து மியற்றாதே
யியற்று வாளை
முப்போது மலர்தூவி முடிசாய்த்து மனத்தகத்து
முன்னு வாரைத்
தப்பாதே பிறப்பறுக்குஞ் சிவகாம சவுந்தரியைப்
பணிவாந் தாண்முன்.

(இ - ள்.) மாயை பெருமாயை யெனக் கூறிய விரண்டினுக்கு மப்பாலாய், ஆன்மாக்க ளறிதற்கரிதாய், மலமில்லாத சிவசத்தியுமாய்ச், சருவ வியாபியுமாய், ஐந்தொழிலுந் தான் செய்யாமல் தன் சந்நிதிமாத்திரத்திலே காரியப்படுத்துமவளுமாய்த், தனது சீபாதங்களின் மூன்று காலங்களு மலர்களைத் தூவி யிதய கமலத்திற் றியானித்து வணங்கு மடியவர் பிறப்பை நிச்சயமா யறுப்பவளுமாகிய சிவகாம சவுந்தரியை சீபாத கமலம் பணிவாம். (ங)

## காரைக்காலம்மை முதலாயினோர் வணக்கம்

ஆலவனத் தமலனடங் கண்டுவந்த காரைக்கா
லம்மை தன்னைப்

---

‡ "மெய்ப்பால்வெண் ணீறணிந்த மேனியானை
வெண்பளிங்கி னுட்பதித்த சோதியானை
யொப்பானை யொப்பிலா வொருவன்றன்னை
யுத்தமனை நித்திலத்தை யுலகமெல்லாம்
வைப்பானைக் களைவானை வருவிப்பானை
வல்வினையேன் மனத்தகத்தே மன்னினானை
யப்பாலைக் கப்பாலைக் கப்பாலானை
யாருரிற் கண்டடியே னயர்த்தவாறே."

என்று ஆளுடையவரசு அருளிச்செய்ததனு மறிக.

பாலருந்தி யுமைமுலையிற் பதிகவிதம் பலபகர்ந்த
பாலன் றன்னைச்
சூலையினைச் சிவனருளாற் றுடைத்தானைத் தடுத்தாண்டான்
றோழன் றன்னை
மாலைமணி வாசகனை மற்றையடி யரையுமடி
வணங்கு வாமே.

(இ-ள்.) திருவாலங்காடென்னுந் திருப்பதியின்கண் பரமசிவன் முஞ்சிகேசமுனி கார்க்கோடராகிய நாகராசரிவர்களுக்குத் திருநடஞ்செய்யு மூலதாண்டவத்தைத் தெரிசித்துச் சந்தோஷித்த காரைக்காலம்மையையும், சீகாழியிற் றிருநிலைநாயகியார் திருமுலைப் பாலை யமுதுசெய்ததனாற் றிருஞானமுண்டாய்ப் பல சந்தத்தாற் றிருப்பதிகங்களை யருளிச்செய்த திருஞான சம்பந்தப் பிள்ளையாரையும், வீரட்டேசுர னருளினாலே சூலைநோய் நீங்கிய திருநாவுக்கரசரையும், தடுத்தாட்கொள்ளுஞ் சிவனுக்குத் தோழரான சுந்தரமூர்த்தி சுவாமிகளையும், இரத்னமாலைபோன்ற வாசகத்தையுடைய வாதவூராளியையும், சண்டேசுரர் முதலாகிய பத்தர்களையும், அவர்கள் சீபாதத்தில் வணக்கஞ் செய்வாம். (ச)

## வாழ்த்து

வானவரும் பூசுரரு மாதவருங் கோதனமு
மன்னி வாழ்க
கானமதி னடமாடி யடியார்க்கும் பதமருத்துங்
கருணை யாரும்
ஊனமற வோங்கிடுக வுலகிதனை மனுமுறையா
லோம்பு மன்னர்
தானவினை யொடுதழைக திங்கடொறு மும்மாரி
பொழிக தானே.

(இ-ள்.) வெளி.

(வி-ரை.) சூத்திரம்

"வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா கிளத்தல் வேண்டும்"

என்பதனா லறிக.

"கடவுளு முனிவரும் பசுவும் பார்ப்பாரு
மரசரு மறையு நாடு மென்ப."

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனா ராதலா லிக்கருத்தேபற்றி யிவ்வாசிரியரும் வாழ்த்துக் கூறியதென் றறிக. (ரு)

## அவையடக்கம்

சீரியருஞ் சீரியரை யல்லாரைத் தனச்சிறுமை
செப்பு வாரே
யாரியரு மாரியரை யல்லாரைக் குலப்பழுது
மறைவ ரேயோ
வீரியரும் வீரியரை யல்லாரை வலியின்மை
விளம்பு வாரே
கூரியருங் கூரியரை யல்லாரைச் சொற்றவறுங்
கூறு வாரே.

(இ-ள்.) உடையாருமில்லாரை சிறுமையுடையீரென்று சொல்லுவர்களோ; குலப்பெருமை யுடையார் அங்ஙன மில்லாதவர்களைக் குலப்பழுதுஞ் சொல்லுவர்களோ; வெற்றிப்பாட்டினையுடைய சூரர்களும் அங்ஙனமில்லாத கோழையரை யேழையென்று சொல்லுவர்களோ; ஆகவின், பஞ்சவிலக்கண முதலியவற்றைக் கற்றுக் கூரிய அறிவுடையார் அங்ஙன மில்லாத வெம்போல்வார் சொன்ன சொல்லுக்குக் குற்றஞ் சொல்லுவர்களோ சொல்லார்கள்.

(வி - ரை.) ஆரியர்-அறிவுடையோர். ஏகார ஓகாரங்கள் ஈண்டெதிர்மறைக்கண் வந்தன.

சூத்திரம்

"அவையடக் கியலே யரிபறபத் தெரியின்
வல்லுரர் கூறி வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே."
என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும் என்க. (௬)

[இந்நூற் சிறப்பும் வரலாறுந் தொகுத் துணர்த்துகின்றார்.]

ஆதிநடு வந்தமிலா னமலனுயிர்க் கழுக்கறுக்க
வறைந்த வாய்மை
வேதமுத லுணர்ந்தருகன் விரைமலர்த்தா ளகத்தியன்றான்
வியந்து போற்றிப்
போதகனே யனைத்துயிர்க்கும் புலமாக்கு நெறிபுகலா
யென்னக் கந்தன்
ஓதியருள் சிவதருமோத் தரநூலைத் தொகைசெய்து
முரைப்பா மோர்ந்தே.

(இ-ள்.) யாம், முதனடு வீறில்லாத நின்மலனாகிய சிவன், உயிர்களுக்கு ஆணவ முதலிய பாசங்களை யறுக்கும்பொருட்டு அருளிச்

செய்த வேதாகம முதலிய வுண்மைஞானத்தை யுணர்ந்த பிள்ளையார் மணம்பொருந்திய செந்தாமரைபோன்ற சீபாதங்களை வணங்கி, "ஞானசாரியனே! சருவான்மாக்களுக்கு மறிவுண்டா மார்க்கத்தை அருளிச்செய்யவேண்டும்" என்று அகத்தியன் விண்ணப்பஞ் செய்யப், பிள்ளையார் அருளிச்செய்த சிவதருமோத்தரமென்னுஞ் சிவாகமத்தை யுற்றுநோக்கித் தொகுத்துத் தமிழாற் சொல்லாநின்றேம்.

(வி - ரை.) 'தொகைசெய்தும்' என்ற வும்மையால், வகுத்து மென வருவித்துரைக்கப்பட்டது. அகமாகிய விந்திய பருப்பதத்தைக் கீழ்ப்படுத்துகையால் அகத்தியனெனப் பெயராயிற்று.

சூத்திரம்

"வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்."

என முன்னூலைப் பார்த்து மொழிபெயர்த் துரைக்கையா லிது வழிநூலெனப் பெயர்பெறும்.

சூத்திரம்

"வழியெனப் படுவ ததன்வழித் தாகு
மதுவே தானு மீரிரு வகைத்தே
தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப."

என்பதனுள் இஃது தொகை வகையென் றறிக. ஆக்கியோன் பெயரை முதற்கட் கூறாது நூற்பெயரைக் கூறிய தென்னுதலிற்றோ வெனின், எல்லாரும் பிரமாணமாக வங்கீகரிக்க வேண்டுகையாலென்க.

ஆக்கியோன் பெயர் முதலியன வருமாறு:—

ஆக்கியோன்பெயர்-மறைஞான சம்பந்தநாயனார்.
வழி - சிவாகமத்தின் வழி.
எல்லை - தமிழ் வழங்கும் நிலம்.
நூற்பெயர் - முதனூலாற் பெற்ற பெயர்.
யாப்பு - தொகைவகை.
நுதலியபொருள் - சிவதருமம் சிவஞானதான முதலாயின.
கேட்போர் - அவர் மாணக்கர்.
பயன் - வீடுபேறு, என்றறிக. (எ)

[கயிலாயத்திலிருக்கும் பிள்ளையாரை யகத்தியர் வணக்கஞ்செய்து வினவு முறையை வகுத்து ஏழு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

மாதவ னகத்தியன் மலைக்குமகள் பெற்ற
போதகனை வெள்ளிமய மாகிய பொருப்பின்
வேதமுணர் சண்முகனை வித்தகனை யுற்றே
பாதமலர் முன்றுதி விதத்தொடு பணிந்தே.

(இ - ள்.) மகத்தாகிய தவத்தினையுடைய அகத்தியர் வெள்ளி மயமாகிய கயிலைமலையின்கட் சென்று மலையரையன் மகள் பயந்த வுபதேச குரவனும் வேதத்தை யுணர்ந்த அறுமுகனுகிய பிள்ளையாரைப் பலவிதமாகிய துதிகளினு லெதிர்பணிந்து.

(வி - ரை.) ஏகாரம்-ஈற்றசை. (அ)

நின்னதடி கண்டிடினு நீசர்வினை நீங்கிப்
பொன்னுலக மெய்தியத னன்பொருள் புணர்ந்தே
இன்னிசை யிருக்குமொழி யந்தணர்க ளென்னப்
பின்னணைவ ரென்னறைவன் மற்றையவர் பேறே.

(இ - ள்.) "பொல்லாத சாதியிற் றோன்றிய நீசரேயாயினுந் தேவரீர் சீபாதத்தைக் கண்டார்களாயின் தீவினை நீங்கிச் சுவர்க்கத் தினை யடைந்து ஆண்டுண்டாகிய நல்ல போகங்களை யனுபவித்து அது தொலைந்தவாறே பூமியின்கண் இனியவோசையையுடைய இருக்குமுதலிய மறைமொழிகளை அதிகரிக்கும் பிராமணராய் வந்து பிறப்பர். ஆகலின், நற்குலத் துள்ளோராய் வந்து நினது திருவடிகளைத் தெரிசித்தால் அவர்களடையும் பல னெங்ஙனஞ் சொல்லுகேன். (கூ)

என்றினிய வாய்மைக ளியம்பியிறை கூற
அன்றுமை தனக்ககில நீதியு மறிந்தாய்
இன்றுயிர் தனக்குறுதி நீயருளெனக்கே
ஒன்றியரு ளின்றமைபி னுன்றெடுர வோனே.

(இ - ள்.) மகா பலத்தையுடையவரே! முன்னாள் பார்வதியார்க்குப் பரமேசுரன் திவ்வியாகமங்களை யருளிச்செய்ய வப்பொழு தெல்லாவற்றையுங் கேட்டறிந்தீர்; தேவரீர் சிவனது கிருபையுடன் பொருந்தி யிருக்கையா லிப்பொழு துயிர்க் குறுதியான நூலை யெனக்கு அருளிச்செய்வீர்!" (க0)

என்றுமுனி சண்முகனை யேசறவு பேசி
நின்றுபினு மாதரவு நீடநிறை கூட
அன்றுவின வுந்திறம னைத்தையு மதித்தே
யின்றறைவல் பாசவிரு ளீடற வினைத்தே.

(இ-ள்.) அகத்தியமுனிவர் இப்படியேகருதிப் பிள்ளையாரைத் தோத்திரஞ்செய்து நின்று பின்பு சிரத்தை மேன்மேலும் வளர்ந்து செல்ல அறிவு நிலைபெற்று வணக்கத்துடன் பொருந்தி யன்றுவின விய திறமெல்லாவற்றையும் விசாரித்து ஆன்மாக்கட்குப் பாசவிருண் மெலிந்து கெடும்படிக்கு இப்பொழுது சொல்லாநின்றேன். (கக)

உத்தம சுரர்க்கதிப னானவினை யோட்டும்
வித்தக விசாகமயில் வாகனவின் மேவும்
புத்தியொடு முத்திதரு போதகபு லானுஞ்
சத்திதர யான்வினவல் கேட்டுவிடை சாற்றாய்.

(இ - ள்.) வெளி. (கஉ)

தக்கசிவ தன்மநெறி தன்னுளரி தாய
மிக்கசிவ தன்மநெறி யாதுவிப ரீதம்
உக்குணர் வுதித்திட வுரைக்குமுறை யாதோ
நக்கனடி யர்ச்சனையும் யாதிவை நவிற்றாய்.

(இ - ள்.) தகுதிப்பாட்டினையுடைய சிவ புண்ணியங்களுக் குட் பிறரறிதற் கரிதாய மிக்க பலனைக் கொடுக்கும் சிவதன்மத்தின் முறைமை யாது? வாக்கியங்க ளனேக முளவாயினும் ஐயந் திரி பின்றி மெய்யுணர்வு தோன்ற நவிலும் வாக்கியம் யாது? சிவனது திருவடியிற் பூசைசெய்யு முறைமை யாது? இவைக ளெல்லா மெனக்கு அருளிச்செய்! (கங)

நாடரிய ஞானதர தானமு நவிற்றாய்
பீடுபெறு பேதமுமெ னக்குமுறை பேசாய்
ஈடுபெற வீயுமுறை யீபவ ரிரப்பார்
கூடுபய னதியவை னைத்துமுறை கூறாய்.

(இ - ள்.) ஆன்மாக்க ளறிதற்கரிய விசிட்டமான சிவஞான தான விதியையும், பெருமையினையுடைய ஞானதானஞ் செய்யு மதற்கு மண்டபம் அதிவாதம் பூசைமுதலிய விதியையும், பெருமை பொருந்தத் தானங் கொடுக்கும் விதியையும், அதனைக் கொடுக்கு மவர்கள் வாங்குமவர்க ளடையும் பலனையும், இவைகளெல்லா மெனக் கடைவாக அருளிச்செய்!

(வி - ரை.) 'அனைத்தும்' என்பதனாற் கன்மயாக முதலிய ஐவகை யாகத்தையும், பல விசிட்ட காரணத்தையும், சிவதரும பேதத்தையும், பாவவினைத் திறத்தையும், ஆன்மாக்கள் சுவர்க்க நரகங்களையடையு முறைமையையும், அவர்கள் சனன மரணப்பட் டுலகத்திற் றுயருறு முறைமையையும், நரகத்தில் வினைப்பயனை யனுபவித்துச் சேடமாய் அதற்கேற்ற அடையாளத்தைப் பூமியின்கண் வந்து பொருந்து முறைமையையும், சிவஞானயோகத்தின் முறைமையையும், சித்தியமுதலிய கன்மலோபத்துக்குப் பரிகாரஞ்செய்து அதனைத் தீர்க்கு முறைமையையும், பசுக்கணிற்குஞ் சிவலோகத்தின் வளத்தையும் உணர்த்தியதென்றறிக. இதனைப் பரமதருமோபதேசமென்னுஞ் செய்யுளாற் பின்னர் முடித்துக் கூறப்படு மாண்டுக் காண்க. (கச)

[மேற் பிள்ளையார் திருவாக் குணர்த்துகின்றார்.]

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

என்றுமுனி வினவுதலு மிரக்க மெய்தி
யெழிலுடைய குமரன்று னிணையி லீசன்
றுன்றுகழ லடிநினைந்து துயக்க நீங்கச்
சொல்லுவங்கேண் முனிவரனே தூகளி லீசன்
அன்றருள்செய் சிவதருமோத் தரமெ னாலி
னறமதனை யறிந்துசில ரதனை யாக்கிச்
சென்றணையச் சிவபுரியைத் தெருண்டு தம்மைச்
சிவனடியைச் சிலரடைய மலமுந் தேய்த்தே.

(இ - ள்.) அகத்தியமுனிவர் இவ்வாறு வினவியவளவி லழகினையுடைய பிள்ளையார் கிருபையோடு ஒப்பிலாத சிவனது நெருங்கிய வீரக்கழலினையுடைய சீபாதங்களைத் தியானஞ்செய்து பின்பு "முனிவரனே! நின்மலனாகிய சிவன், பக்குவான்மாக்களிற் சில சிவதருமங்களை யறிந்தனுட்டித்ததனாற் சிவலோகத்தை யடையவும், அதிபக்குவரிற் சிவஞானத்தினாலே யாணவ முதலிய வாதையைப் போக்கித் தற்சொரூப தெரிசனப்பட்டுத் தனது திருவடியை யடையவும், சிருட்டிகாலத்திற் சிவனருளிச்செய்த காமிகமுதலிய திவ்யாகம மிருபத்தெட்டினுட் சந்தான சருவோத்தமென்னு மூலாகமத்தினுபபேதமாகிய ஈசானம், சிவதருமம், சிவதருமோத்தரம், திவ்யப்புரோக்தம், குபேரம் எனக் கூறப்பட்ட வைந்தனுட் சிவதருமோத்தரமென்னு முபாகமத்தை ஐயந் திரிபு நீங்கச் சொல்கின்றோம் கேள்!"

(வி-ரை.) 'மலமும்' என்ற வும்மையாற் கன்ம மாயை யென்பனவும் கொள்க. ஏகாரம் - ஈற்றசை. இஃது உபபேத மென்பதனை ஆகமத்திற் சருவோத்தத் துபபேதமெனப் பின்னர்க் கூறுகின்றார்.

சூத்திரம்

"வணக்க மதிகார மென்றிரண்டுஞ் சொல்லச்
சிறப்பென்னும் பாயிரமாஞ் சீர்." என்றும்,

"ஆயிர முகத்தா லகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே."

என்றுங் கூறலின் பாயிரமுரைத்து நூலுரைத்தன் மரபென்க. யாதானுமோர் நூற்குப் பொரு ளுரைக்குங்கால் காண்டிகை வகையானு முரைவகையானு முரைக்கப்பெறும். ஈண்டிந்நூற்குக் கூறிய தியாதெனின்,

சூத்திரம்

"சூத்தி ரத்துப் பொருளன் றியுமியாப்
புறவின்றி யமையா தியல்பவை யெல்லா
மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே."

"பொழிப்பே யகல நுட்ப மெச்சமென்
றப்பா ளுன்கே யுரைக்குறுப் பாகும்."

"பொழிப்பே பொருளை யொருப்படுத் துரைத்தல்
விரித்துரை தானே யகல மென்ப."

"நுட்ப மப்பொருட் கேற்ப வுணர்த்தல்
அடுத்த பொருளா யகன்றுநிற் பதனை
யெடுத்துரைப் பதுவே யெச்ச மாகும்."

என்றதனால்,

பொழிப்பென்பது - தொகுத்துணர்த்தல்.

அகலமென்பது - விரித்துணர்த்தல்.

நுட்பமென்பது - கடா விடை கூறல்.

எச்சமென்பது - கடாவறத் துணிந்தபொருள்.

இதனானே ஒரோவழியாற் சிறப்புப்பாயிரங் கூறியதென்றறிக.

பாயிர முற்றிற்று.

சிவமயம்.

## முதலாவது

# பரமதருமாதியியல்



[இவ்வோத்தென்ன பெயர்த்தோவெனின், பரமதருமமாகிய சிரத்தை முதலிய விதியைக் கூறுகின்றாராகலிற் பரமதருமாதியியலென்னும் பெயர்த்து. சூத்திரம்: "இயலே சாயலுந் தமிழ்நடையுமாகும்" என்பதனு லிதனைத் தமிழ் நடையாற் கூறுதலான் 'இயல்' என்றார். மேல் இத்தலைச் செய்யு ளென்னுதலிற்றோவெனின், திருத்தமுறையானே சிவதருமத்துக்கு மூலஞ் சிரத்தையென்று உணர்த்துத னுதலிற்று.]

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

ஆதரவே பரமான வறம தாகு
மாதிநடு வந்தமிவற் றனைத்து மாகு
மாதரவற் றவரீகை யறமே யாகா
தாதலினு லாதரவே மூல மாகு
மாதரவே பிரகிருதி யான்மா வீச
னெனும்பொருளு மறிவிக்கு மமலன் றானு
மாதரவே யடைவிக்கு மாத லாலே
யனைத்தினுக்கு மாதரவே மூல மாமே.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) சிரத்தைக்குப் பரியாயப் பெயர்: பத்தியெனவும், பாவமெனவும், பரமப் பிரீதியெனவும், சிவதர்மத்தி னெருப்பாடெனவும், பிரதிபத்தியெனவும் ஐந்து விதப்படும். அவைகளையாண்டாண்டு வந்துழி வந்துழிக் காண்க. ஆதரவு என்பது சிரத்தை.

[மேலதனை வற்புறுத்தி யுணர்த்துகின்றார்.]

மகவினையா லாகத்தின் வருத்தந் தன்னன்
மாநிதியான் மற்றுமுள பொருள்க ளானுந்
தகைபெறுவா னவரானுங் காத லின்றேற்
சாதிக்கப் படுவதல தருமங் காணே

யுவகையுற வாதரவாற் சிறிதே தேனு
முதவியிடு மறமதனாற் பெரிதுண் டாகு
மகநெகலு மாதரவே யரிய பேறென்
றறியாதா ரென்பெறுவ ரன்னோ வன்னோ.

(இ - ள்.) யாகாதி கன்மத்தினாலேயாதல், கிருச்சிர சாந்திராயண முதலியவற்றாற் சரீரத்தை வாடுதல் செய்தாதல், மிகுந்த திரவியத்தாலாதல், நவரத்னமுதலிய பொருள்களினாலாதல், சிரத்தையில்லாதவிடத்துத் தகைமைப்பாட்டையுடைய தேவர்களாலுஞ் சிவதர்மங்கள் சாதிக்கப்படுவதல்ல; யாதொருவர் சிரத்தையுடனே யற்ப மேதாயினுந் தானஞ் செய்யி னதனாலே மிகுந்த பலத்தைக் கொடுக்குந் தர்மமுண்டாம். ஆதலான், மனநெகிழ்ச்சியுடைய வாதரவே பெறற்கரிய பேறென் றறியமாட்டாதார் என்ன பலத்தை யடையப்போகிறார்கள்? ஐயோ! ஐயோ!!

(வி - ரை.) வானவராலும் பெறற் கரியதெனவே யேனையோராலுஞ் சாதிக்கப் பெறாதென்பதாம். ஏகாரம்-ஈற்றசை. 'அன்னோ வன்னோ' என்பது இரக்கத்தின்கண் வந்த குறிப்பு. (கஎ)

[சிவவாக்கியத்தினது விசிட்ட முணர்த்துகின்றார்.]

முனிவரனே சிவதரும மூலஞ் சொன்னோ
மொழிந்திடுவம் வாக்கியங்கேண் மோகம் போகப்
புனிதமுற மனமொருமைப் புந்தி தானும்
பொய்யகல மெய்யகலப் பொள்ள லாக்கைத்
துனிதொலையத் தனையிணையில் சோதி பாதஞ்
சூடியிடச் சிரம்படர்ந்து தொடர்ந்து நின்ற
வினைவிளிய விழைவுறவே கேட்பார் தங்கள்
விளக்கெனமெய்ப் பொருளையது விளக்க வுள்ளே.

(இ - ள்.) முனிகளுக்குட் சிறப்பினை யுடையவனே! சிவதர்மத்துக்குச் சிரத்தைதானே மூலமென்று சொன்னோம். சிவனருளிச்செய்த சிவவாக்கியத்தை யாசையுடன் கேட்போருடைய சுக துக்கங்கண் முற்றுதலா லுண்டாகி மோகங் கெடவும், மனங் கலராது நிச்சயிப்பிக்கும் புத்தியுமென்னவே யந்தக்கரணங்கள் சுத்திபெறவும், பொய்யானது அவரைப் பொருந்தாமல் விட்டுப்போகவும், மெய்யானது அவரிடத்திற் பொருந்தி யெங்கும் பரம்பவும், நவத்துவாரத்தினையுடைய சரீரத்தை யெடுக்குந் துக்கமொழியவும், தனக்கொப்பொருவரு மில்லாத சிவனது சீபாதத்தைத் தலையிற் றரிக்கவும், பிரவாகா னாதியாய செனனங்கடோறும் தொடர்கின்ற கன்ம க்ஷயம்

பிறக்கவும், விளக்கானது விசுவத்திற் பதார்த்தங்களை விளக்குவது போலப் பக்குவான்மாக்களுடைய விதயகமலத்திற் பதி பதார்த்த முதலிய பொருள்களை விளக்கவும், அந்தச் சிவவாக்கியத்தைச் சொல்லாநின்றோம்; அதனைக் கேள்! (கஅ)

[கபிலர் பதஞ்சலி முதலாயினோர் வாக்கியங்கள் பிரமாணமன்றோ வெனின், அவர் மலத்தோடு கூடினவராதலின் அவர் வாக்கியம் ஆப்தமான பிரமாணமன்று. அற்றாகலின் சருவஞ்ஞனான சிவனது திருவாக்கே போக மோக்ஷங்களைக் கொடுக்குமென் றுணர்த்துகின்றார்.]

அமலவா னருளியசொல் வாக்கியமே யதுதா
னருத்தத்தா லக்கரத்தா லதிக மற்பஞ்
சமலருரை யதுபோல விபரீதஞ் சிறிதுஞ்
சாற்றாதே யுள்ளபடி சாற்றுஞ் சாற்று
மமலனையு மணுக்களையு மண்ட பேத
மனைத்தினையு மறிவிக்கு மாத லாலே
பவமொருவு நெறிதன்னைப் பயக்கும் போகம்
பாலிக்குந் தானமுதற் பகர்த லாலே.

(இ - ள்.) மலரகிதனாகிய சிவனருளிச்செய்த திருவாக்கே விசிட்டமான வாக்கியம்; அந்த வாக்கியமானது எழுத்தினாற் சுருக்கமும் பொருளினாற் பெருமையுமா யிருக்கும்; அஃதன்றி இராகத் துவேஷத்துடனே கூடிய ஆன்மாக்கள் வசனம்போல விபரீதஞ் சிறிதுஞ் சொல்லாம லுள்ளபடியே சொல்லும்; அஃதன்றிப் பதியையு மான்மாக்களையும் பாசமாகிய அண்டபேத மனைத்தினையு மறிவிக்கும்; இதில் தானம் யாக முதலியவற்றைச் சொல்லுகையாலே போகத்தையுங் கொடுக்கும்; அந்தப் போகம் பொசித்துத் தொலைந்த பின்னர்ச் சனன மரணப்பட் டுழலாமற் பரமமான மோக்ஷத்தையுங் கொடுக்கும்.

(வி - ரை.) உள்ளபடியே சொல்லுவ தியாதெனின், சூ. பா-கணிதத்து மந்திரத்துங் காண்க. சுசடின்மை, என்பதுபோல மற்றெல்லாம் எனவறிக. வாக்கியமாவது, ஆகாம்க்ஷை முதலிய விலக்கண முடையது.

ஆகாம்க்ஷை, யோக்கியதை, சந்நிதி இம்மூன்றும், வாக்கியப் பொருளுணர்ச்சிக்கேது.

ஆகாம்க்ஷை என்பது அவாய்நிலை.

யோக்கியதை என்பது தகுதி.

· சந்நிதி என்பது அண்மை.

அவாய்நிலை-ஒருபதம் தன்னை முடிப்பதொரு பதமில்லாதவழி முடிவுபெறாது நிற்றல்.

தகுதி - பொருட்கு வாதையின்மை.

அண்மை - பதங்களை யொருதொடராக விரையக் கூறுதல்.

இவற்றின் விரிவெல்லாந் தருக்கசங்கிரகவுரையிற் காண்க. ()

[இங்ஙனஞ் சிவவாக்கியப் பிரமாணங் கூறி அதனுட் சொல்லும் மந்திரத்தின் விசிட்டமான மந்திர மீதென் றுணர்த்துகிறார்.]

ஆதிதனி லோமென்னும் பதம தாக
வந்தமதிற் சிவாயவொலி யணைந்து நிற்க
வோதியவா றெழுத்தினையு முடைத்தே யிந்த
வோமென்னும் பதப்பொருட்டா னுயிர்கட் கெல்லாம்
போதகனைப் பொருவிலியாய் நிற்கு மீசன்
புனிதனவன் சத்திவித மைந்து மற்றை
யேதமிலா வஞ்செழுத்தின் பொருளை யெண்ணி
யிருபயனு முயிரடையு மிவற்றா லென்றும்.

(இ - ள்.) அந்தச் சிவவாக்கியத்துட் கூறிய பஞ்சாக்கரம் ஆதியிலே ஓமென்னும் பதமும், அந்தத்திலே சிவாயவென்னும் பதமும், நடுவின் நமவென்னும் பதமுநிற்க, உச்சரிக்கின்ற வாறக்கரத்தையு முடையதாம். இந்த ஓமென்னும் பதத்தின் பொருளை விசாரிக்கிற் சருவான்மாக்களுக்கும் அறிவை விளக்குமவனைத், தனக்கொப் பொருவரு மில்லாதவனைச், சருவவியாபியாய்,வாச்சியார்த்தமாயிருக்கிற சிவன், குற்றமில்லாத மற்ற அஞ்செழுத்தின் பொருள், அந்தச் சிவனுடைய ஈசானமுதலிய சத்திகளைந்துமாம். இந்தப் பதங்களாலே யந்தப் பொருள்களைக் கருதி யுச்சரிக்கி லான்மாக்க ளெந்தக் காலமும் போக மோக்ஷங்க ளிரண்டையு மடைவர். (உ0)

[அந்தப் பிரணவத்தின் மகிமை யுணர்த்துகின்றார்.]

ஓமென்னும் பதமதனில் வேத மாதி
யுற்பவிக்கு மாலவித்தி னுதிக்கு மாபோ
லோமென்னும் பதமதனை யுரைத்தார் தாமே
யோதினர்கள் வேதாதி யுரைக ளெல்லா
மோமென்னும் பதப்பொருளை யுணர்ந்தார் தாமே
யுணர்ந்தாரும் வேதாதி யொருமை கூற

வோமென்னும் பதமொழித்தஞ் செழுத்து மநுதர்க்
கொழுங்குடைய சூத்திரர்க்கு முரைக்க லாமே.

(இ - ள்.) ஆலம் வித்திலேநின்றுஞ் சாகோபசாகைகள் தோன்றுமாறுபோல, ஓமென்னும் பதத்திலே வேதமுதலாய நூல்களெல்லாந் தோன்றும்; ஆகையால், ஓமென்னும் பதத்தை யுச்சரித்தவர்களே வேதமுதலாய நூல்களெல்லோ மோதினவர்கள். அந்தக் காணங்க ளொருமிக்க, ஓமென்னும் பதத்தினின்ற பொருளாகிய சிவத்தை யறிந்தவர்களே வேதமுதலாகிய நூல்களிற் சொல்லும் பொருள்களெவையு முணர்ந்தவர்கள். ஆதலாற் பார்ப்பார் முதலிய நாலுவன்னத்துண் மாதருஞ் சற்சூத்திரரும் அந்த வேதமாதாவாகிய பிரணவத்தை நீக்கி நின்ற அஞ்செழுத்தையுமே யுச்சரிக்கலாம்.()

இதுவுமது

இருளுலகி லறவுலவு மிரவி யின்றே
விசையாது பொருளொடுகண் ணொளியுண் டேனும்
பொருவரிய வோங்காரப் பொருளொன் றின்றேற்
பொறியிலங்கா தனைத்துயிர்க்கும் பொறியுண் டேனு
மருளதனை யணுக்களுக்கு மாற்றி யென்று
மதியருளும் பரமசிவன் வாக்கைக் கூறுங்
குருபரனு மோங்காரப் பொருளேயென்று
கொண்டாரே மும்மலமும் விண்டார் தாமே.

(இ - ள்.) பூமியின்க ணந்தகாரங் கெட வுலவுகின்ற வாதித்தனில்லையாயிற் கண்ணனது தனக்கென வொளியுண்டாயினும் பொருளொடு பொருந்திக் காணமாட்டாது; அதுபோல, ஒப்பில்லாத சூக்கும பஞ்சாக்கரமாகிய வோங்காரம் பிரமன்முதலாயினரை யதிட்டித்துக்கொண்டு மனமுதலியவற்றை * அகாமுதலிய வக்கரங்களைக்கொண்டு காரியப்படுத்தாவிடத்து ஆன்மாக்கள் கருவி காணங்களுடன் கூடியிருந்தார்களாயினும், அந்தக் கருவி காணங்கள் சீவியாதாதலால் ஆன்மாக்களுக் காணவ விருளை நீக்கி யென்னாளு மறிவை

* [சிவஞான சித்தியார், ௨-ம் சூத்திரம், ௬-ம் கவி.]
"அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யாங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதஞ் சித்தமோ டுள்ள மாகு
மொவ்வெனு மெழுத்தா மைந்து முணர்வுதித் தொடுங்கு மாறு
பவ்வமுந் திரையும் போலும் பார்க்கிலிப் பண்புந் தோன்றும்."
என்பதனு லறிக.

விளங்கப்பண்ணும் பரமசிவன் திருவாக்கை உபதேசிக்கு ஞானு சாரியனு மந்தப் பிரணவத்தின் பொருளேயென் றுட்கொண்டவர் களே மலமாயா கன்மங்களை நீங்கினவர். (உஉ)

[முதற்கட் டொகுத்துப்போந்த ஆசிரியர் சிவதர்மம் பரி பாலன மாகையின்பொருட் டரசனுக் குபதேசிக்கு மியல்பு மவனது சிறப்பு முணர்த்துகின்றார்.]

ஐயமற விபரீத மறுவு மீச
னருண்மொழியை யாராய்ந்த வனக ஞசான்
வையகமு முய்யவுனிச் சைவ தன்ம
மன்னவனுக் களிக்கவவன் மருவு நீதி
யெய்தியிடு முலகச்ச மெய்த லானு
மெல்லோரு மிருபயனு மெய்த லாலே
சைவநெறி தனையரையற் களித்த வாசான்
சகத்தினுக்குந் தேசிகனே சாற்றுங் காலே.

(இ - ள்.) சிவனருளிச்செய்த வேதாகமங்களை யையந் திரிபற வுணர்ந்து பாவமில்லாத ஆசிரியரானவரும், உலகத்திலுள்ள ஆன் மாக்க ளீடேறும்படி கருதிச் சிவதர்மங்களை விசாரித்து அரசனுக் குப் போதிக்க, அந்தவரசன் சாம பேத தான தண்டமென்னு நீதி யைப் பொருந்தி நடப்பான்; அவன் நீதிவழி நடக்கவே யுலகத்தி லுள்ள ஆன்மாக்களு நீதிவழி நடவாதோரைத் தண்டிப்பனென்னும் பயம்பொருந்தி யறத்தின்க ணொழுகுவர்; அங்ஙன நீதிவழி நடக்கு மரசனு மான்மாக்களும் புத்தி முத்திகளை யடைதலால் அரசனுக் குச் சிவதீக்கையைச் செய்து சிவதர்மத்தின்வழி நிறுவின வாசிரி யன் மகிமையைச் சொல்லுமிடத்து அவனே யுலகத்துக்கெல்லா மாசிரியன்.

(வி - ரை.) 'வையகமும்' என்ற வும்மையா லரசனு மென வறிக. 'அச்ச மெய்தலானும்' என்ற வும்மையா லியல்பானும் பத்தி யானு மென வறிக. (உ௩)

[அந்த வரசன் உலகத்துள்ளோரை நீதிவழி நடத்துமுறை யுணர்த்துகின்றார்.]

பூபதியு நூன்முறையிற் புவியு ளோரைப்
புரிவிக்க வழுவாது புரிந்தார் தாமும்
பூபதியைச் சிவனெனவே புந்தி செய்வர்
பொருந்திடுவர் தன்மார்த்த காமம் பூமேற்

பூபதியு மித்தகைமே புரிவார் தம்பாற்
பொருள்கொள்க வொருகூறு புவிக்கைக் தாங்கிப்
பூபதியை நிரையத்திற் பொருந்துந் தீயார்
பொருளவரை முறைநிறுவிற் பொருந்தா றுங்கே.

(இ - ள்.) அரசன் பூமியின்கணுள்ள ஆன்மாக்களை மனுநீதி வழியே யவரவர் சாதிக்கொத்த அறங்களைச் செய்விக்கக்கடவன். அங்ஙன முறைபிறழாது அறங்களைச் செய்த ஆன்மாக்களு மந்த வரசனைச் சிவனென்றே புத்தி பண்ணக்கடவர்கள். அப்படி புத்தியண்ணினோர்க ளிந்தப் பூமியிலேதானே யறம் பொரு ளின்பங்களைப் பெறுவர்கள். அரசனு மிந்த மனுநூன்முறையே யொழுகு மவரிடத்துப் பொருளை யாறு கூறாக்கிக் குடிகளுக் கைந்துகூறுந் தனக்கொரு கூறுமாகக் கொள்ளக்கடவன். அறநெறியி னொழுகாத தீவினையோர்பாற் கொள்ளும் பொரு ளரசனை நரகத்தில் விழும்படி செலுத்துமாதலாற் பொருளனைத்துங் கொள்ளக் கருதாம லந்தத் தீவினையோரைக் குற்றத்துக்குத் தக்க தண்டஞ்செய்து வாங்கி யறநெறியினிறுத்துவனுயி னவ்வரச னரகினை யடையான். (உச)

[குரவன் அரசனுக்குத் தர்மபுத்தி வருவிக்கு முபாயமு
மந்தக் குரவனுக் கிவன் செய்யுங் கைம்மாறு
வேறில்லை யென்பது முணர்த்து
கின்றார்.

பார்த்திபனுங் காமத்திற் பொருளிற் சாலப்
பற்றுடைய னெனிற்குரவன் பரிவு கூர்ந்து
தீர்த்திடுக மந்திரத்தா லவுட தாதித்
திறத்தினுமே யறத்தினவன் சிந்தை செல்லப்
பார்த்திடுக பரயோகம் பின்பு நல்கப்
பரையோக மளித்துவினைப் பகைசா ராமற்
காத்தகுர வனுக்கிவன்செய் கைம்மா றுண்டோ
காசினியும் பொருளனைத்துங் கைம்மா றன்றே.

(இ - ள்.) அரசன் காம விகாரத்திலுந் தனந்தேடுவதிலு மிகுந்த ஆசையையுடையனுகிற் குரவ னரசனுக் கிப்படி பொல்லாத புத்திவந்ததேயென் றிரங்கி அது போம்படி மந்திரவாதத்தாலும், மருந்து முதலியவற்றாலும் தீர்த்து, அவ்வேந்தனது மனம் அறத்தின்கட் செல்லும்வண்ண முணர்த்திப் பின்பு மேலான ஞானபோகங்களை யுபதேசித் திரட்சிக்கக்கடவன். அங்ஙன ஞான யோகத்தை யளித்து வினைப்பகை யேறுவண்ண மிரக்ஷித்த வாசிரியனுக் குலகமு முல

கத்தி லுண்டான பொருள்களுங் கைம்மா றல்லவே யாதலா லவற் கரையன் செய்யும் பிரதியுபகார மில்லை.

(வி - ரை.) ஒகாரம் வினாவின்கண் வந்தது. 'ஔடதாதி' என்பதனுன் மணியுமெனக் கூட்டுக. (உரு)

[வேதாகமங்களின் முறைமையு மவற்றை யுணராதார் பயன் பெறுமையு முணர்த்துகின்றார்.]

அற்பாயு நரர்க்கென்றே யமலன் வேத
மாதிதனைத் தொகுத்தறைந்தா னாய்கி லாது
நிற்பாருஞ் சிலர்நில்லாக் குரம்பை தன்னை
நிலையெனவே கருதியவப் பசுநூ றன்னைக்
கற்பாருஞ் சிலரமலன் கழறும் வாக்கைக்
கருதாதே யவனதடிக் கமலந் தன்னைப்
பொற்பாருங் கருணையினுன் மற்றை நூலாற்
பொருந்துதலு மரிதுமலம் போக்க லுனும்.

(இ - ள்.) நின்மலனாகிய சதாசிவ தேவ நாயனார் பரதகண்டத்தி லிருக்கு மாணிடர்க்கு வாணா ளற்பமென்று வேதாகமங்களைச் சுருக்கித் தமது பஞ்சவத்திரத்தாற் காமிகாதி திவ்யாகமங்களையும் அருளிச்செய்தார். இப்படிச் சுருங்கச் சொல்லியிருக்கவும் அதனை யோதி யதன் பொருளை யறியாம லிருப்பாருஞ் சிலருளர். நீர்க்குமிழி போல நிலையில்லாத சரீரத்தை நிலையென்று கருதிப் பிறப் பிறப்புக் கேதுவாகிய பொல்லாத பசுநூலையே பொருளென்று கற்பாருஞ் சிலருளர். ஆதலாற் சிவன் அருளிச்செய்த வேதாகமங்களைப் பொலிவு பெற்றிருக்கிற திருவருளினாலே யாராயாது அதற்கன்னியமான பசுநூலை யாராய்வதனாற் சிவனது திருவடித் தாமரைகளை யடைதலு மும்மலங்களை நீக்கலு மரிது. (உசு)

[பதி முதலிய பதார்த்தம் அனாதியென் றுணர்த்துகின்றார்.]

ஆதியல செம்பினுக்குக் களிம்பு தானு
மாராயி லதற்கதுவு மனாதி யாகு
மாதியல் மூலமல மணுக்கட் கெல்லா
மாணவமு மாருயிர்கட் கனாதி யாகு
மாதியல பசுபாச மரிக்க வல்ல
வமலனுமா ருயிர்களுமே யனாதி யாகு
மாதியல வுலகத்தை யடக்கித் தன்பா
லாக்குவதும் வினையுமுயிர்க் கனாதி யாமே.

(இ - ள்.) செம்பினுக்குக் களிம்பு மாதியல்ல, அதனை விசாரிக்குமிடத்து அநாதியே. அதுபோல, ஆன்மாக்களுக் கெல்லா மாணவமு மொரு காலத்தி லுண்டாயதன்று. அதுவும், வியாபியாயிருக்கின்ற வுயிர்களுக்கு அநாதியே. பக்குவான்மாக்களுடைய பாசத்துக்கு வயிரியாயுள்ள சிவனு மான்மாக்களு மாதியல்ல, அநாதியே. தன்னிடத்திலேநின்றும் வியாத்தியாத்மிகமாக வுலகத்தை யுண்டாக்கி மீளவுஞ் சத்தியாத்மிகமாகத் தன்னிடத்திற் காரிய வுருவங்களையொடுக்கு மிருவித மாயையு மாதியல்ல, அநாதியே. கன்மமு மாதியல்ல, செனனந்தோறுந் தொடர்ந்து தொடர்ந்து வருகையாற் பிரவாகாநாதியாயே வரும்.

(வி - ரை.) ஆதி யென்பது ஒருகாலத் துண்டாயது. அநாதி யென்பது சகசம். (உஎ)

[அந்தச் சிவவாக்கியத்தைப் பக்குவான்மாவுக் குணர்த்தாது அபக்குவர்க் குணர்த்திற் குற்ற முணர்த்துகின்றார்.]

போதகனு மும்மலமும் போக்கித் தன்னுட்
பொருவரிய பரம்பொருளைப் புணர வெண்ணு
மாதவனுக் கறைகவிறை யமலன் வாக்கை
மற்றையவர்க் கறையற்க மனத்துக் கெட்டா
வாதியருள் வாக்கியத்தை யருத்தந் தன்னை
யருநிதியாற் புகழ்முதலா லயர்த்துங் கூறிற்
பாதகனே போதகனு மவர்க ளோடும்
பற்றிடுவ னெரிநிரைய மங்கார் பற்றே.

(இ - ள்.) ஆணவ முதலிய மலங்களை நீக்கித் தன்னிடத்தில் வியாத்தியினாலே யன்னியமாய் நிற்கும் ஒப்பில்லாத சிவனை யடைதற்கு விரும்பும் பெரிய தவத்தினையுடைய மாணாக்கர்க் காசிரியன் கருத்தாவாகிய சிவனது திருவாக்கை யுபதேசிக்க! அல்லாத அபக்குவர்க் குணர்த்தக்கடவ னல்லன். அவர்களுக்கு மனோவாக்குக் கெட்டாத சிவனருளிச்செய்த திவ்யாகம வாக்கியத்தைத்தான் அதிற் சொல்லும் பொருளைத் தான் ஐசுவரிய நிமித்தமாகவும் புகழ்முதலிய நிமித்தமாகவு மறந்து முறைப்பானாயி னந்தப் போதகனு மிருந்த பாவான்மாவேயா யந்த மாணாக்கரோடே தானு மெரிவாய் நிரையத்தை யடைவன்; அதினின்று மவர்களைக் கரையேற்றுவார் யார்?

(வி - ரை.) 'புகழ்முதலால்' என்பதனால், மக்கள் சுற்றமென்னும் காதலாலும் - அரையன் முதலியோர் பயத்தாலும் - மாறுகோளாலுமென வறிக. (உஅ)

[சிவபூசைக்கு வேண்டு முபயோகங்களுக்குட் டலைமை யாகிய பஞ்ச கௌவியத்தின் முறைமை உணர்த்துகின்றார்.]

வேறு

அறைந்தன மமலன் வாக்கை யானிடை யாறுஞ் சொல்வாஞ்
சிறந்தறி சிவபூ சைக்குத் தேடரும் பொருள்க ளென்றே
யிறந்தவ ரென்போ டாமை யீண்டெழின் மார்பிற் பூண்டு
புறம்புனத் தாடி பொற்றாள் புரிந்துமா தவபோ தத்தில்.

(இ - ள்.) மிகுந்த தவத்தினை யுடையானே! சிவனது திருவாக்கின் மகிமையைச் சொன்னேம்; மேற் பசுவின்கணுளவாகிய கௌவியங்களாறினையுஞ் சொல்லாநின்றோம்; இவற்றைச் சங்காரகாலத்தி லிறந்துபோன அரி யயன் முதலானோ ரெலும்புட னாமை யோட்டையு மெழில்வாய்ந்த மார்பின்க ணணிந்து சுடலையின்க ணாடுகின்ற சிவனது பொற்பாதத்தை விரும்பிச் செய்யுஞ் சிவார்ச்சனைக்குத் தேடு மரியபொருளென்று நின்னறிவின்கட் சிறப்பினோடு மறியக் கடவை. (உக)

அமரரு மசுரர் தாமு மமிழ்துணக் கருதி வெற்பைத்
தமதுயர் வலத்தாற் றாங்கிக் கடைந்தபாற் கடலிற் றங்கிப்
பவமுறு மரிய தேனுப் பஞ்சகம் பரம னாலே
யவன்முடிக் கருக மான வாறுமவ் வைந்தி னாமே.

(இ - ள்.) தேவர்களு மசுரர்களு மமிர்த முண்ண விரும்பித் தங்களுடைய அதி பலத்தினாலே மந்தாகிரியை மத்தாக வெடுத்து வாசுகி யென்னுங் கயிற்றாற் கடையப்பட்ட திருப்பாற்கடலினின் றுஞ் சிவனருளினாலே: நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை யெனக் கூறிய வைவகைப் பசுவுந் தோன்றிப் பின்பு பூமியின் கண்ணே சிவபூஜையின்பொருட்டும், யாகாதி கன்மங்களின்பொருட்டு முதித்தன; அந்த வைந்தும் பசுவின்கட் சிவனது திருமுடிக் குரிமையான கோசலம், கோமயம், பால், தயிர், நெய், கோரோசனை யாகிய கௌவியங்களாறும்.

(வி - ரை.) பஞ்சகம்-ஐந்தின் கூட்டம். கௌவியம்-பசுவின்கணுண்டாயது. (௩௦)

இதுவுமது

உத்தம ரோச னாந்த முறைத்திடு மாறு மோரின் [று
வித்தகப் பொருள்கள் வேண்டும் பலத்தினை விளக்கு மென்

மத்தனை யமலன் றன்னை யாதரிப் பாரு மார [மே.
வித்திறத் திசையத் தோன்றும் பொருள்களு மியம்பு வா

(இ-ள்.) பான்முதற் கோரோசனை யீறுக வுரைத்தவாறினையு மாராயிற் சுத்தமாகிய பொருள்களே. செகத்பிதாவாகிய சிவனை யர்ச்சிக்கு மவர்களுக்கும் புசிக்க வவரவர் விரும்பிய போகங்களை யெக்காலமு முண்டாக்கும். இப்படிக் கூறப்பட்ட கௌவியங்க ளாறினும் பொருந்தி நின்று தோன்றும் பொருள்களையு மேற் சொல்லுவாம்.

(வி - ரை.) கோரோசனை ரோசனை யெனத் தலைக் குறைக்கப் பட்டது. கோசலத்துக்குத் திருவுண்டாகையாலும், கோமயத்துக்கு வியாதி போகையாலும், நெய்க்கியாவரானு மிக்க பூச்சிய முண் டாகையாலும், கோரோசனைக்கு வயது அதிக முண்டாகையாலும், 'வேண்டும் பலத்தினை' எனச் சிறப்பித்தார். (கக)

[மேற் கூறியவற்றைச் சத்காரியமாக விசாரித் துணர்த்துகிறார்.]

கோமய மதனில் வில்வங் குறுமுறி கூடத் தோன்றும்
பூமக ளந்த வில்வம் புரிந்ததிற் பொருந்து மாற்றாற்
றூமமார் வில்வந் தானுஞ் சீபல மென்பே சாற்று
நாமமும் புணரு மீசர் திருமுடிக் கணியெந் நாளும்.

(இ - ள்.) கோமயத்தினின்றும் வில்வந் தளிருடன் றோன் றும். அந்த வில்வத்தைத் திருமகள் விரும்பி யதன்கண் ணிருக்கு முறையாலே மாலையாகக் கட்டப்படும். இந்த வில்வஞ் சீபலமென் னும் பெயர்பெற்றுச் சிவனது திருமுடிக் கெக்காலமு மணிதற் குரியதாய் விளங்கும்.

(வி - ரை.) மற்றுமுள்ள புட்பசாதிகளைப்போலக் காலகற் பனையின்றி யெக்காலமுஞ் சாத்துதற் குரித்தாகையால் 'எந்நாளும்' எனச் சிறப்பித்தார். (கஉ)

இதுவுமது

உற்பல கமல மூலம் பின்பதி லுதிக்கு நீரிற்
பொற்புறு குங்கு லியம் பொலிந்தெழும் புரிய யாரு
மற்புதன் றனக்கு மற்றை யனைவர்க்கு முணவ தாகக்
கற்புறு செந்நெல் பாலிற் கதிரொடு கலந்து தோன்றும்.

(இ - ள்.) வில்வந் தோன்றிய பின்னர் நீலோற்பலக் கிழங்குந் தாமரைக்கிழங்கு மந்தக் கோமயத்தின்க ணுண்டாம். கோசலத்தி

னின்று மெழுின்மிக்க குங்கிலியமான தெல்லாரும் விரும்ப விளங்கித் தோன்றும். பாலினின்றுஞ் சிவனுக்கு மற்றுந் தேவ - மானிடர் முதலிய யாவர்க்கு முணவாகிய செஞ்சாலி முதலிய சாலிபேதங்கள் கதிரோடு பொருந்தி யுற்பவிக்கும். (கக)

இதுவுமது

சந்தன முதலா யுள்ள மங்கலந் ததியி னுரு
மந்தரத் தமர ருண்ணு மமிழ்தமு நவநீ தத்தாஞ்
சிந்தையார் சித்தி பேதஞ் சிறக்கரோ சனையுஞ் செய்யு
மந்திவான் வண்ணன் மேனிக் கருகமிவ் வாறு மாமே.

(இ - ள்.) தயிரினிடத்தே சந்தனமுதலிய மங்கல பதார்த்தங்கள் தோன்றும். வெண்ணெயினின்றும் விண்ணிலுள்ள தேவர்களருந்து மமிர்தமுண்டாம். கோரோசனை யாவரும் விரும்பிய சித்தி பேதங்களைத் தலைமைபெறத் தோற்றுவிக்கும். இங்ஙனங் கூறிய வாறுஞ் செக்கர் வானம்போன்ற நிறத்தையுடைய சிவனது திருமேனியி லாட்டிப் பணிதற் குரியனவாம்.

(வி - ரை.) 'சந்தனமுதலாய்' என்பதனால், அகில் குங்கும முதலியன கொள்ளக்கிடந்தன. நவநீதம்-வெண்ணெய். (கஉ)

[நிறுத்த முறையானே சிவனை யவைகளா லர்ச்சிக்கு முறை யுணர்த்துகின்றார்.]

ஆதலா னெய்யாற் பாலா லாமில மற்று மற்றுங்
கோதறு ததியி னாலுங் குழகனன் முடிமே லாட்டிச்
சீதம தகன்ற நீராற் றினைப்புற வாட்டிச் சேர்ந்த
வாதர வதனா லாட்டி யாமல காதி யாவும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) இதனுள், ஆமிலமென்பது புளிப்பு. மற்றுங் கோதறுததி என்பது பால் காயாம லாலிழைவது, நீண்டு நாறுவது முதலிய குற்றங்களில்லாத தயிர். சீதமகன்றநீர்-இளஞ்சூடான் வெந்நீர். 'ஆமலகாதி' என்பதனால்: நெல்லிக்காப்பு, மாக்காப்பு, மஞ்சட் காப்பு முதலியன கொள்க. 'யாவும்' என்பதனால்: இளநீர், பஞ்சாமிர்த முதலாயின கொள்க. (கங)

[இச்செய்யுண் முதல் எனத் துதியம்பு மென்னுஞ் செய்யுளீறாகக் குளகமாக உணர்த்துகின்றார்.]

சீதள நீரு மாட்டித் திகழ்திரு மேனி யீரம்
பேதம தாக வாடை பிணைத்தரி தாகப் பெற்ற

கோதில்கோ ரோச னாதி குங்குமக் குழம்புங் கூட்டிக்
காதலால் வில்வந் தன்னைக் கசடறக் கண்ணாற் கண்டே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கண்ணாலே புழுக்கடியுறப் பார்த்து என்று கொள்க.

"குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்."
என்று தண்டியாசிரியர் கூறலானு மறிக. (கசு)

உற்பல கமலத் தோடு முவகையாற் சாத்தி நெய்யாற்
குற்குலு வதனாற் றூபங் கொடுத்தொளி கொடுத்தா னெய்
பொற்புறு பாய தானம் புளிப்புறு ததியின் போனஞ் [யாற்
சர்க்கரை தேனெய் கூட்டிச் சமைத்தவோ தனமுந் தாமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) இதனுள், உற்பலம் - செங்கழுநீர். குற்குலு-குங்கிலியம். ஒளி-தீபம். பாயதானம்-பாலன்னம். (கஎ)

நிறைந்துறை நேயத் தோடு நிவேதனஞ் செய்க மற்றுஞ்
சிறந்துள வுபசா ரங்கள் செய்துசெய் முறைக டம்மிற்
குறைந்துள வரைய மீச பொறுத்தரு ளென்று கூறித் [தே.
திறம்பல வலமுஞ் செய்து தெண்டனப் பணிந்து சேர்ந்

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) இதனுள், 'உபசாரம்' என்றார்: பஞ்சோபசாரம், தசோபசாரம், சோடசோபசார மென்பனபற்றி. (கஅ)

அண்டங்க ளனைத்து மாக்கு மலர்மிசை யயனே போற்றி
யண்டங்க ளனைத்துங் காக்கு மரியெனு மதிப போற்றி
யண்டங்க ளனைத்து மாற்று மதிபல வரனே போற்றி
யண்டத்தின் பேதத் தப்பா லனாதியே யமல போற்றி.

(இ - ள்.) வெளி. (கக)

ஆருயி ரனைத்து மீன்ற வன்னையே யத்தா போற்றி
யாருயி ரனைத்து நீங்கா வரும்பெரும் பொருளே போற்றி
யாருயிர்ப் பந்த பாச மறுத்தரு ளநுல போற்றி
யாருயிர்க் கமிழ்த மான வன்பனே போற்றி போற்றி.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) 'ஈன்றல்' ஆன்மாக்க ளனாதியுமாய் நித்தியமுமாகையால் விஞ்ஞானகலருட் டலைமையாய அணுச்சதாசிவர் முதலாயி

ஞர்க்குத் தனுவாதிகளைக் கொடுத்தலென்றறிக. 'அமிழ்தமான அன்பன்' என்பது, அமிர்தம்போ லினிமை செய்யு மன்பனெனப் பொருள் கொள்க. அதுலம்-சமானமின்மை. (௪0)

எனத்துதி யியம்பும் பத்தர்க் கிட்டமிம் மையினுஞ் செய்வ
றனக்குயர்ந் தாரொத் தாரை யிலன்சிவன் சகளத் தாற்று[ன்
னினைத்தருச் சனைசெய் தும்ப ரேயர்க ளாத லாலே
வினைப்பகை வெல்வார் செய்க வருச்சனை விதியி னாலே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மேற்கூறிய வினையெச்சங்க ளெல்லா மியம்பு மென்னும் பெயரெச்ச வினையொடு முடிந்தன. இம்மையினு மென்ற வும்மை, மறுமையும் விளங்கிநின்றது. இச்செய்யுள் யாவர்க்குந் தோன்றாது நிட்களனாய் நின்ற சிவன், சகளீகரித்து அடியவர் பொருட்டுத் தியானாதிகளுக்கு எளியனாவன். ஆதலாற் பிறவித்துயா நீங்கவேண்டினோர் அருச்சனை செய்து பிழைக்கவெனப் புத்தி கூறிய தாயிற்று. (௪க)

[சிவபூசை செய்வாரும் அதற்குப் பத்தியுடன் ஏவல் செய்வோரும் பெறும்பய னுணர்த்துகின்றார்.]

முற்றவத் தாலே பூசை முற்றிய பத்தர் மூவேழ்
சுற்றமுஞ் சுவர்க்க மெய்தத் துன்னுதற் கரிதே யாய
வற்புத னுலகந் தன்னைத் தாமடைந் திருப்ப ரன்பாற்
சொற்பணி செய்தார் தாமுந் துரிசறு நெறியி னாலே.

(இ - ள்.) முற்பிறப்பிற் செய்த புண்ணிய பலத்தினாலே விருப்பத்துடன் சிவபூசைசெய்த அன்பராயினார் தங்குலத்தினுள்ள மூவேழ் சுற்றமுந் தேவலோகத்திற் செல்லத் தாம் பிறராலணுகுதற் கரிய சிவலோகத்தைச் சேர்ந்திருப்பர். அதற்கன்பினாலே ஏவற்றொழில் செய்தோர்களும், பிறவித் துயர்தீர்க்கு நன்னெறியாகிய ஞானத்தொடுகூடிச் சிவலோகத்தை யடைவர்.

(வி - ரை.) அடைந்திருப்பரென்பது, இடைநிலைத் தீவகம். மூவேழ் சுற்றம் என்பது மாதுர் வர்க்கம்-எ, பிதுர் வர்க்கம்-எ, தன் வர்க்கம்-எ, ஆக உக. (௪௨)

[அருச்சனைக்கு உபயோகமான தருக்கண் முதலியவும் அருச்சனையைத் தெரிசித்தோர் பெறும்பலனு முணர்த்துகின்றார்.]

அர்ச்சனைக் குபயோ கங்க ளாகிய தருக்க ளாதி
கற்புறு சிவலோ கத்தைக் கலப்பதே திண்ணங் கண்டோ

ரற்புதன் பூசை தன்னை யருவினை யறுவ ரன்பாற்
றற்பரன் பூசை கண்டோர் சிவபுர மதனைச் சார்வார்.

(இ - ள்.) வெளி. (சங)

[மேலதனைக் கேட்டோர் விரும்பினோர் அடையும் பல
னுணர்த்துகின்றார்.]

கேட்டுளார் மகிழச் சொல்வார்
கிடைக்குமோ வெமக்கு மென்று
வேட்டுளா ருபகா ரங்கள்
விளைத்துளா ரிவரு மெய்ய
ரூட்டுளார் பிறக்கி லிம்மண்
ணுயக ராவ ராகித்
தேட்டுளார் சிவதன் மங்கள்
வாதனை திகழ்த லாலே.

(இ - ள்.) சிவார்ச்சனையின் பெருமையைக் கேட்டுளோர், கேட்போருள்ள மகிழ அதனைச் சொல்வோர், நமக்கு மிப்படி சிவார்ச்சனை செய்யும் பேறு கிடைக்குமோவென்று விரும்பினோர், சிவ பூசைக்கு உபகரணங்கள் கொடுத்துள்ளோர், இவர்களெல்லாருஞ் சிவ லோகத்திற் சேரன்றுமவர்களாம். அங்ஙனஞ் சிவலோகத்திலுள்ள போகங்களை யனுபவித்து மீண்டும் பூமியிலே தோற்றி இந்த உலக மெல்லாந் தானே யாளு நீதிவேந்தராய்த் தோன்றுவர். தோன்றியு முற்பிறப்பிற் கேட்டல் வேட்ட லுபசரித்தலாகிய நல்ல வாதனை விளங்குகையினாலே சிவதர்மங்களையே விருப்பத்துடன் றேடிச் செய்வார்கள்.

(வி - ரை.) 'இவரும்' என்னு மும்மை இறந்ததுதழீஇயது. 'பிறக்கில்' என்றமையாற் சிவலோக போகத்தை விரும்பாமையாற் புசித்தவர்க ளாண்டிருந்து தானே பரிபக்குவராய்ப் பாகதி யடைவ ரென்பது விளக்கிநின்றது. (சச)

[இங்கிதையே பரமமான தர்மமென் றுணர்த்துகின்றார்.]

திமக்கப ராத பேதஞ்
சதமுறச் சாதித் தார்க்கு
மிமைப்பொழு தெனினுந் துன்ப
மியற்றிடா வினிமை தன்னை
யமைத்துறு விதமி தென்றே
யறைந்திடு மதனை யாதி

சமைப்பதே தலைமை யான
தருமமென் றறிக தக்கார்.

(இ - ள்.) வேதாகம நூல்கள், தமக்கு யாதாமொருவர் வேறு வேறாக எண்ணிறந்த குற்றஞ் செய்யினு மவர்களுக் கொருகாற் கண்ணிமை கொட்டுமளவாயினுந் துக்கத்தைச் செய்யாம னன்மை யே செய்யு மின்பத்தையே பொருளாகப்படுத்தி யிதுவாயிருக்கு மித மாவதென்று சொல்லாநிற்கும். ஆகையினாலே யந்த நன்மையை முற்படச் செய்தலே மேலான அறமென்று தகுதியை யுடையோ ரறியக்கடவர்.

(வி - ரை.) அமைத்துச் சொல்லுமெனக் கூட்டுக. (சகு)

[சிவதர்மத்தின் விசிட்ட முணர்த்துகின்றார்.]

செப்பிய வொப்பி லாத சிவதரு மங்க டம்மைத்
தப்பற நினைப்போம் யாமுஞ் சந்திக டோறும் யாரு
மிப்படி யெண்ணு வார்முன் னீட்டிய வினைக ளோட்டி
யொப்பிலா வுமையாள் பாகன் புரத்தினி துறைவ ரன்றே.

(இ - ள்.) அகத்தியனே! இங்ஙனங் கூறிய நிகரில்லாத சிவ தர்மங்களை நாமும், காலை உச்சி மாலை என்னு முப்போதுந் தப்பாம னினைப்போம். எம்போ லிப்படி கருதுவார் யாவரு முற்சனனங்களி லார்ச்சித்த பாவங்களைப் போக்கி இணையிலாத வுமையை யொருபாக த்திலேயுடைய சிவனது உலகத்திற் போகங்களைப் புசித்திருப்பர்.

(வி - ரை.) 'யாமும்' என்னு மும்மை மற்றுள்ள தேவர்க ளிருடிகண் முதலாயினாருமெனக் குறிக்கின்றது. (சஎ)

[வேதத்துள்ளு மிச்சிவ தர்மமே சிறப்பென் றுணர்த்துகின்றார்.]

ஒப்பிலி யனாதி முத்த னோதிய வேதத் துள்ளுஞ்
செப்பிய சிவதன் மங்கள் சிறந்தனே ரியவே தேறுந்
தப்பிலாப் பலத்தி னாலே தடவரை நிகர சான்றோர்
வைப்பென விவற்றைக் கொள்வர் மகற்பல வாஞ்சை யாலே.

(இ - ள்.) தனக்கு ஒப்பாரு மில்லானும் அனாதியே நின்மலனு மிருக்கிற சிவனருளிச்செய்த வேதத்தினு மிச்சிவதர்மங்களே தலை மையையுடையனவா யதிசூக்குமங்களா யிருப்பனவென்று தெளியப் படும்படி யதிசூக்குமங்களா யிருப்பினுந் தப்பாமற் றோற்றுவிக்கும் பலத்தினாலே மகமேருவைப்போலப் பெருத்திருப்பன; ஆதலி னறி வுடையோர் மகத்தான பலங்களினுள்ள விருப்பத்தாலே யவையிற்

றைத்தரு மிந்தச் சிவதர்மங்களே யென்று அதனைச் சேமிக்கும் பொருள்போலக் கைக்கொள்வர்.

(வி - ரை.) மகற்பலம் - வடமொழிச் சிதைவு. (சஎ)

["முடிந்தது முடித்தல்" என்னுந் தந்திரவுத்தியா லுணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

என்றுபர மானதரு மாதிக ளிசைத்தான்
குன்றுவர் மடக்கொடி தனக்கருள் கொடுத்தான்
வென்றுபுல னைந்தினையும் வெய்யவினை நைய
நின்றமுனி யன்றுணர நிர்க்குண னினைந்தே.

(இ - ள்.) வேடர்மகளாகிய வள்ளிநாயகிக்குத் தண்ணளி செய்து மகிழுங் குமாரக்கடவுள் குணாதீதனான சிவனைத் தியானஞ் செய்து பஞ்சேந்திரியங்களையும் வென்று, கொடிய கர்மங்கள் கெடும் படித் தவத்தின்கணின்ற அகத்தியமாமுனி யறியும்வண்ணம் பரம மான சிவதர்மங்க ளிப்படியென்று அருளிச்செய்தான்.

(வி - ரை.) சூத்திரம்

"சருக்க முடிவினு மிலம்பக முடிவினும்
விருத்த நடையது வேறிசைப் பாவே."

என்னும் இலக்கணத்தாற் சிவத்துதி யியமகத்தா லுணர்த்துகின்றார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆனிடை யைந்தினை யாடினனே!
அம்பர மன்றினு மாடினனே!
கானிடை வேடனு மானவனே!
காசியென் மாநக ரானவனே!
வானிடை முப்புர மாற்றினனே!
வார்சடை மேல்வரு மாற்றினனே!
யானெனு மாசுமி லாதவனே!
யேனைய மாசுமி லாதவனே!.

(இ-ள்.) பசுவினிடத் துண்டாகிய பான்முதலிய கௌவியங்க ளைந்தினையு மாடாநின்றவனே! ஞானம்பரமென்னும் பொதுவி னடம் பண்ணினவனே! விசையன் தபோபலத்தை யளத்தல்பொருட் டுக் காட்டகத்து வேடவடிவு கொண்டவனே! காசியென்னும் பெரிய திருப்பதியையுடையவனே! பூமி, அந்தரிக்ஷம், ஆகாசமென்னு மூவி டத் துண்டாகிய முப்புரத்தை யெரித் தொழித்தவனே! நீண்ட

சடையின்மே லாயிரமுகத்தோடு வந்திழியுங் கங்கையாற்றினை யுடையானே! யானென்பதற்குக் காரணமான ஆணவ விருளில்லாத ஞானநித்தனே! மற்றமுள்ள மாயா கர்மங்களு மில்லாதவனே!. ()

இதுவுமது

அலைகட னஞ்ச மருந்தினனே!
ஆணவ நோய்க்கு மருந்தினனே!
தலைகல னுகத் தரித்தவனே!
சார்ந்தவர் பாசத் தரித்தவனே!
சிலைசிலை யாக்கிய தெள்ளியனே!
தீப்புரைக் காய்ந்துள தெள்ளியனே!
விலையிலி யானவெண் ணீற்றினனே!
விபரித மற்றவெண் ணீற்றினனே!.

(இ - ள்.) தேவர்களாலே மந்தரகிரியை மத்தாக்கிக் கடையுமிடத்து அலைகின்ற சமுத்திரத்தி லெழுந்த விடத்தை யுண்டவனே! ஆணவ முதலிய பிணிக்கு மருந்தாயிருப்பவனே! அயன் சென்னியை யாபரணமாகப் பூண்டவனே! திருவடி நிழலைப் பலகாற் றினைத்தோருடைய பாசங்களை யறுத்தவனே! மகமேருவை வில்லாக்கின வலியையுடையோனே! தாரகன், தாருகாக்ஷன், வித்தியுன்மாலி என்னும் கொடியவரை யெரித்தவனே! விலையில்லாத தவள நிறத்தையுடைய திருநீற்றை யணிபவனே! ஐயந் திரிபில்லாத வேதாந்தத்து முடிவாயுள்ளவனே!.

(வி-ரை.) 'எண்' என்பது உரையென்னு மளவை என்க. ()

[குமரக்கடவுள் திருவாக்கின் பெருமை கூறுகின்றார்.]

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மலத்தை வல்வினை தனைமணை வலியை
வதைக்க வலலநன் மதியினை யுதவுந்
துலக்க வெண்பிறை யணிசடை முடியன்
றுணைப்ப தந்தொழு மடியவர் றுணைவன்
மலைக்கு நன்மகண் மதிநுதல் கணவன்
மலர்ப்ப தம்பெறு முறவினு நிறுவு
மலக்க ணண்டர்க ளறவொரு கரமுன்
னமைத்த சண்முக னருளிய மொழியே.

(இ - ள்.) தேவர்க ளசுரர் செய்யும் வாதையா லடைந்த மனக் கலக்கந் தீரும்படி யவர்களெதிரே யொரு திருக்கை யமைத்தருளிய

சண்முகனென்னுந் திருநாமத்தையுடையான் அருளிச்செய்த திருமொழி யான்மாக்களுக்குச் சகசமான ஆணவ மலத்தினையும், வலியினையுடைய கன்மத்தையும், மாயாகாரியமான மனமுதலிய அந்தக்காணங்களின் வல்லபத்தினையுங் கெடுக்கவல்ல நல்ல அறிவினைக் கொடுக்கும். அஃதன்றி விட்டு விளங்கும் வெள்ளிய விளம்பிறையினை யணியுஞ் சடாமகுடத்தை யுடையானுமாய்த் தனது சீபாதங்க ளிரண்டினையும் வணங்கும் அடியவர்களுக் குயிர்த்துணைவனுமாய்ப் பர்வதராச புத்திரியான பிறைபோலு நெற்றியையுடைய உமாதேவிக்கு நாயகனுமாயிருக்கும் சிவனது சீபாதமலர்களைப் பெறும் ஐக்கியத்தினு நிறுத்தும். (௩௪)

[அகத்தியனை வணங்கென்று மனத்தினுக் குணர்த்துகின்றார்.]

இதுவுமது

நினைத்த நன்பல மெளியதின் முடியு
 நெருக்கி யண்டர்கள் முனிவர்கள் பணியத்
தனத்த னந்தன தனதன தனவென்
 சதிக்கி சைந்திட நடமிடு சதுரன்
முனைத்தெ ழுந்தவர் புரமொரு நொடியின்
 முருக்கி வென்றவ னருளிய மொழிக
ளனைத்தை யுந்தரு மருமுனி யனக
 னகத்தி யன்றிரு வடிநினை மனமே.

(இ-ள்.) நெஞ்சமே! இந்தியங்களை முனியுமவனும் பாவமில்லாதவனுமாயிருக்கும் அகத்தியனது திருவடிகளை நினைக்கக்கடவை! நினைத்தா னீயெண்ணிய நல்ல காரியங்களெல்லா மெளிதாகவே முடியும். அஃதன்றித் தேவர்களு மிருடிகளு நெருங்கி நின்று வணங்கத் தனத்தனந் தனதன தனதனவென்னும் இராகதாளவொத்துக் கேற்ப ஆனந்த நிருத்தத்தைச் செய்பவனும் பகைத்தெழும் தீயோர் முப்புரங்களையு மொரு கணப்பொழுதின்கண் எரித்தழித்த வெற்றியை யுடையானுமாகிய சிவனருளிச்செய்த திவ்வியாகமங்க ளனைத்தையும் அறிவிக்கும்.

(வி - ரை.) முடியும், தரும் என்பன முற்றுவினைகள். (௩௫)

## முதலாவது பரமதருமாதியியல்

முற்றிற்று.

# இரண்டாவது

# சிவஞானதானவியல்.

[மேல் இவ்வோத்து என்னபெயர்த்தோவெனின், நிறுத்தமுறை யானே சிவதரும முதலியவற்றை மேலை யோத்தினுட் கூறி, அச் சிவதருமத்தை உணர்த்துவிக்கும் சிவஞான தானாதியைக் கூறுகையானே சிவஞான தானாதி இய லென்னும் பெயர்த்து. * அச்சிவஞானம் பரஞானமெனவும், அபரஞான மெனவும் இருவிதமாம். இதனுள் பரஞானமாவது: சிவனோ டிரண்டற்று அபேதரூபமாயிருப்பது. அபரஞானமாவது: காமிக முதலிய திவ்வியாகமங்களென்றறிக. இத்தலைச் செய்யு ளென்னுதலிற்றோவெனின், ஈதலியற்கை கூறுவாமென் றாசிரியர் கருதியவா றுணர்த்துதனுதலிற்று.]

கலிவிருத்தம்

அரிய ஞானத்தை யையமு மையலும்
பிரிய வேறொளி யாகிய பெற்றியைப்
பருவ முற்றவர் பாலுப தேசிக
னுருகி யோர வுரைப்பது மோதுவாம்.

(இ - ள்.) போதகாசாரியன் ஆன்மாக்களிடத்து வைத்த நேயத் தாற் றன்னுள்ள முருகி ஐயந் திரிபாகிய விருணீங்குதற் கழகிய தீப மாய் விளங்கு மியல்பினை யுடைத்தாய்ப் பிறருணர்தற் கரிதாயிருக் கும் ஞானசாத்திரத்தை யுணரும்படி பக்குவரான மாணாக்கரிடத் துபதேசிக்கு முறையுஞ் சொல்கின்றோம்.

(வி - ரை.) 'ஐயம்' என்பது ஒன்றோ விரண்டோ வெனக் கருதல். 'மையல்' அல்லது திரிபென்பது முன்னர் ஒன்றென்று

---

* ஞானம்: பரஞானம், அபரஞானமென் றிருவகை என்பதை, உமாபதி சிவாசாரியரும், "உயர்ஞான மிரண்டாமாறு மலமகல வக லாத மன்னுபோதத், திருவருளொன் றொன்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே" எனச் சிவப் பிரகாசத்தும் அருளிச்செய்தலானுமறிக.

துணிந் திரண்டென்பதும், இரண்டென்று துணிந் தொன்றென் பது மென்க. இவற்றை வடநூலார் சந்தேக விபரீத மென்ப. 'ஐயமு மையலும் பிரிய' என்பதனை ஏரொளிக் கடையாக்குக. 'உரைப்ப தும்' என்ற வும்மை கேட்கு முறையுங் கூறுவதும் விளக்கலி னெச்ச வும்மை என்க. (க)

[பிள்ளையா ரகத்தியனை விளித்துச் சிவஞான விசிட்ட முரைத்த வதனை இரண்டு செய்யுளால் உணர்த்துகின்றார்.]

சிந்தை செய்க வகத்திய! தீவினைப்
பந்த மும்பசு பாசமு மாயையு
மந்த மாயையி னுக்கிய வாக்கையு
நைந்து போகநல் லார்க்கு நரர்க்கரோ.

(இ - ள்.) அகத்தியனே! பக்குவான்மாக்களுக்குச் சஞ்சித மாகாமியமான கன்மபேதமும், பசுத்துவமென்னும் பெயரினை யுடைய வாணவ பந்தமும், மாயா பந்தமும், அந்த மாயையினா லுண் டாகிய தேகாதி பந்தமுங் கெடும்படி நீ சிந்தைசெய்.

(வி - ரை.) அரோ-அசை. (உ)

விதவெ னப்படுந் தாதுவின் வித்தையி
னுதைய முமுயிர் கட்குயி ராகிய
பதித னக்குரு வம்மது பக்குவர்
மதித னக்கு விளக்கென வாய்த்ததே.

(இ - ள்.) விதக் ஞானேயென்னும் வடமொழித் தாதுவிற் றோற்றிய ஞானப்பிரகாசமும், அந்த ஞானந்தானே யான்மாக்களுக் குப் பிராணனுயிருக்குஞ் சிவனுக்குத் திருமேனியும், அந்த ஞானந் தானே பரிபாகத்தையுடைய ஆன்மாக்கள் புத்திக்குத் தீபம்போலப் பிரகாசிக்குந் தன்மையுடையது ஆதலின் நீ அதனை யறி.

(வி-ரை.) 'அது' வென்பதனை யீரிடத்துங் கூட்டுக. 'பதிதன க்கு உருவம்' என்பது பாரஞானத்தை யுணர்த்திய தென்றறிக. ஏகா ரம்-ஈற்றசை. (ங)

[ஆரியன் மாணுக்கற்கு ஞானசாஸ்திரத்தை யுபதேசிக்கு முறைமை யுணர்த்துகின்றார்.]

பருவ முற்றிய பாவக மோர்ந்துபின்
னுருகி யோதுக வோதரு முண்மையை

மருவி வாய்வரு பாடையின் வல்லவர்க்
கரிய வாரியத் தானு மறைகவே.

(இ - ள்.) ஆசிரியன் நான்கு சாதியினு முள்ளோர்பாற் பருவ முதிர்ச்சியினாலே யுண்டாம் பத்தி சிரத்தை முதலியவற்றை யறிந்து பின்னர் தன்னுள்ளங் கசிந்து அபக்குவர்க்குச் சொல்லப்படாத ஞானசாஸ்திரத்தை உபதேசிக்க! அஃதெவ்வாற்றா னெனின், பதினெண் பூமியிலுள்ளாரும் பயின்று வசனிக்கும் பாஷா பேதங்களுள் யாதேனுமொரு பாஷை வல்லோர்க் கந்தந்தப் பாஷையினானும் வடமொழி வல்லோர்க்குப் பெறுதற்கரிய வடமொழியினானு முபதேசிக்கக்கடவன்.

(வி - ரை.) 'ஆரியத்தானும்' என்ற வும்மையாற் பிராகிருதம், சவுரசெனி, மாகதம், பைசாசம், சூளிகாபைசாசி, அவப்பிரங்கிசம் தேசி என்பனவமையும். (௪)

[இப்படி உபதேசஞ்செய்யு மாசிரியனை மாணாக்கன் சிவனெனச் சிந்திக்கு முறைமையை உணர்த்துகின்றார்.]

ஒப்பி லாவொரு வன்சிவ னேதிய
வொப்பி லாவுரை தன்னை யுரைத்தகத்
தொப்பி லாவுணர் வாக்கிடு முத்தம
னொப்பி லாவர னேயென வோர்கவே.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) இதனுள் 'ஒப்பி லாவுணர் வாக்கிடு முத்தமன்' என்றார், இணையில்லாத ஞானத்தை யுண்டாக்கிய வாசிரியன் என்பது கருதி. (௫)

[பக்குவனுக்கும் அபக்குவனுக்கும் ஞானநூலுணர்த்திய வாசிரியரடையும் பலமுணர்த்துகின்றார்.]

பருவ முற்றவர் பானுப தேசிகன்
பரம னுக்குள வெண்குணம் பற்றுவன்
பருவ மற்றவர் பானுப தேசிகன்
நரகி டைப்படி வானெடு நாளரோ.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) எண்குணமாவன: சருவக்கியனாதல், நிறைந்திருத்தல், ஆனந்தாகிருதி, சுதந்திரதை, எப்போது மிளையாத சத்தி,

அளவில்லாத சத்தி, நிராமயமாயிருக்கை, எப்போதுஞ் சுத்தனு யிருக்கை என்றறிக.

ஆளுடைய அரசும்:

மாறுமாற்றத் திருத்தாண்டகம்

"நாவார நம்பனையே பாடப் பெற்றோ
 நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோ
மாவாவென் றெமையாள்வா னமரர் நாத
 னயனொடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
 சேர்ந்திருந்தான் றென்றிசைக்கோன் றானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
 குணமாகக் கொள்ளோமெண் குணத்து ளோமே."

என்றும்,

தனித்திருக்குறுந்தொகை

:"எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழி
 லெட்டு வான்குணத் தீசனெம் மான்றனை
 யெட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முளே
 யெட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே."

என்றும்,

ஆளுடைய நம்பிகளும்:

திருக்கானாட்டுமுள்ளூர் (பண்கொல்லிக்கௌவாணம்)

"இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
 யிறையவனை மறையவனை யெண்குணத்தி னானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ்
 சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை
யரும்புயர்ந்த வரவிந்தத் தணிமலர்க ளேறி
 யன்னங்கள் விளையாடு மகன்றுறையி னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெ னெருங்கிவிளை கழனிக்
 கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே."

என்றும்,

"முடிவி லாற்றலை தன்வ யத்தனை
 முற்று ணர்ச்சியை போருண்
மடிவி லாட்சியை தூய மேனியை
 மற்றி யற்கை யுணர்ச்சியைப்

படிவி லாவியல் பாக நீங்கிய
பாச நோயை வரம்பிலின்
புடையை யுன்னடி யேங்க னென்றுமு
னக்க டைக்கல மையனே."
என்றுங் காஞ்சிப்புராணத்துங் கூறியவாற்றானு முணர்க. (சு)

[அபக்குவ ரிலக்கணத்தை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஓது வார்க்கிடை யூறுரைப் பாரவர்
வாத பாடணர் வாக்கை மறப்பவர்
வேத மாதிய வோதி விடுப்பவர்
சாதி யாற்றணி யாரெனச் சாற்றுவார்.

(இ-ள்.) ஆசிரியனிடத்தே யாகமமாதிகளை யோது மாணுக்கர்க் கோதுவியாமல் விக்கினஞ் சொல்லுமவரும், ஒருவன் சொல்லாத வார்த்தையைச் சொன்னனென் றவருடன் சொல்லுமவரும், அவர் சொன்ன பொருளைத் தரியாம லுடனே மறக்குமவரும், வேதமுத லியவைகளை யோதியவற்றைப் பலகாலும் பயிற்றாதுவிட்டவர்க ளும், அந்தணர்முதலிய நாற்குலத்தோரன்றி யிழிகுலத்தோரென்று சொல்லப்படுமவரும், (எ)

தன்னின் மிக்கநற் சாதியிற் றோன்றினர்
இன்ன தன்மைய ரென்றறி யப்படார்
பன்னு நூலின் பயன்முறை பற்றிலார்
சொன்ன சொற்பினுஞ் சோர்வுறச் சொல்லுவார்.

(இ - ள்.) தத்தம் வருணத்துக் குயர்ந்த சாதியிற் பிறந்தவர்க ளும், இன்னசாதியென் றறியப்படாதாரும், ஆசிரியரிடத்திற்கேட்ட நூலின் பயனைத் தரிக்கமாட்டாதாரும், அவரிடத்திற் கேட்ட பொருளை யதன்வழி சொல்லாமற் றவறச் சொல்லுமவரும்,

சந்த பேதமுந் தானறி யாரென
விந்த வாறிசைத் தாரெழு வாயினர்
நிந்தை செய்துட னீக்கப் படுமவர்
மந்த ராமவர் தம்மை மதித்துமே.

(இ - ள்.) வடமொழி தமிழ்மொழியாகிய இருவகைச் சந்த பேதங்களை யறியாதாரும், அகங்காரத்தாலே தம்மைப் பெருமையாக எண்ணுபவரும், மந்த புத்தியா யுள்ளாருமென இந்தமுறையிற் சொல்லப்படுமவர் முதலாயினு ரெல்லாரும், அபக்குவரென நிந்தித் தக்கணமே தள்ளப்படுபவர்.

(வி - ரை.) 'எழுவாயினர்' என்பதனால், ஆசிரியர் சொன்ன அருத்தமிருக்கத் தானொன்றைக் கற்பித்துக்கொண்டு சொல்லு மவன், எட்டி லிருந்தவாறு சொல்லாமல் வேறொன்றாகச் சொல்லு மவன், தன்னுடைய சித்தாந்தத்துக்கு விரோதமாகச் சொல்லு மவன், இவர்கண் முதலாயினரென் றறிக. சந்தபேதமாவன - பஃ றொடை வெண்பா.

* "ஒத்தமைந்த சந்தப் பொதுப்பெயராய்ந் துரைப்பி, னுத்த மதியுத்தமத்திம, மொத்தவிலை, நன்னிலைகாயத் திரியுடனுண்டி, யனுட்டுப்பொடுபகுதிபந்தி-வனுப்புச்-சயதி யதிசயதி- சக்குவரி மற் றையதி-சக்குவரியாடி யதியாடி-திருதி-யதி திருதியோடு கிருதி பிரகிருதி-யாகிருதி விக்கிருதி சங்கிருதி-மேலும்-அபிகிருதி யுற்கிரு தியா மெழுத்தாலென்று-ரிருபதின்மேலாறு மிவை" என்றார் வீர சோழியமுடையார். இவ் வடமொழிச் சந்தம் வன்ன விருத்த மெனவு மாத்திராவிருத்தமெனவு மிருவகை. (௬)

[அபக்குவர்க்குப் பொருண்முதலிய ஆசையினான்
ஞானநூல் கூறிற் குற்றமென்
றுணர்த்துகிறார்.]

ஓது விப்பவ னுப்பிலி கற்புரை
பூத லப்பொரு ளைப்பொரு ளென்றெணி
யாத னைப்படு வன்னர கத்திழிந்
தாத னுக்கவண் மிக்குற வாரன்றே.

---

* வீரசோழியம் யாப்பதிகாரம் ௩௩-ம் கவி.

கலித்துறை

"இருவிதஞ் சந்த மிவற்றொன் றெழுத்தா லிலங்குமற்றை
யொருவித மாத்திரை யாலே யொளிரு மொளிருமிது
பொருவரி தாகிய வாரியத் தண்டு பொதியமென்னும்
அருவரை மாதவன் கூறுந் தமிழுக் கருகமன்றே."

என்றும்,

"அருக மருந்தமிழ்க் காரியத் தும்மெழுத் தானுதித்து
வருகின்ற சந்த விதமென் றுளத்தின் மதித்திடுக
வொருவனை யெல்லா வுயிர்க்கு முயிரா யொருவலில்லா
நிருமலன் றன்னைப் பதம்பணிந் தேத்திடு நேயர்களே."

என்றும்,

ஆன்றோர் கூறலானு மறிக.

(இ - ள்.) தனக்கொப் பொருவரு மில்லாதான் திவ்யாகம முதலியவற்றைப் பூமியிலுள்ள தனதானியந் துகின் முதலிய பொருள்களைப் பொருளாகக் கருதி யப் பொருளாசையா லோதுவிக்கு மாசிரிய னரகத்தின்கண் விழுந்து மிக்க வேதனை யுறுவான். அப்படிப் பட்ட அறிவில்லாதவனுக் கவ்விடத்தி லுதவுவாரார்? ஐயோ. (கo)

[பக்குவர்க்கு அதனைப் போதித்த போதகன் பெருமையை யுணர்த்துகின்றார்.]

ஆக்கை நோயென வஞ்சினர்க் கற்புதன்
வாக்கை யோது மதிதிகழ் மாதவ
ஞேக்க மூன்றுடை நோன்மையன் வான்பிணி
போக்கு வாரவ னன்றிப் புவியுளார்.

(இ - ள்.) சரீரத்தை வெறுப்பினாற் பிணியென் றஞ்சிய மாணுக்கர்க் கதிசயனை சிவனது வாக்கியத்தை யுபதேசிக்கின்ற அறிவினால் விளங்கும் பெரிய தவத்தினையுடைய போதகாசிரியன் மூன்று கண்களையும் ஞானவலியினையு முடைய தக்ஷிணமூர்த்தி யவனே யன்றிப் பூமியின்கட் பிறவிப் பெரும்பிணியைப் போக்குமவர் யாவர்?

(வி - ரை.) யார்-ஆர் என மரீஇயது. (கக)

இதுவுமது

ஈசன் ருனு மிவனிடத் தேய்ந்துயிர்ப்
பாசந் தன்னைப் பறிப்பன் பழுதகல்
வாச கஞ்சொல்வன் மற்றிவன் றன்புகழ்
பேசு வாரெவர் பேசரும் பெற்றியால்.

(இ - ள்.) பரமசிவனு மிந்த ஞானுசாரியனை யதிட்டித்துக் கொண்டு ஆன்மாக்களுடைய பாசங்களைத் தீக்கையினுலே சேதித்துப் பின்பு குற்றமில்லாத ஞானத்தை யுபதேசிப்பான். இந்த ஞானுசாரியன் புகழானது யாவராலு மளவிட் டுரைத்தற்கரிய முறைமையை யுடைத்தாகையா லெவர்தா னதனைச் சொல்ல வல்லவர்?

(வி - ரை.) 'பறிப்பன்' என்பது முற்றெச்சம். மற்று-உரையசை. (கஉ)

[மேலெய்தியது விலக்கிக் கொடுப்போன் முறையுங் கொள்வோன் முறையுங் கூறுகின்றார்.]

தடுத்த தண்ணியன் பாற்கொள்க சாத்திரங்
கொடுக்குந் தேசிகன் றங்குலத் தில்லையே

லடுத்த வன்னிய னேயரு கன்றூழிற்
கொடுக்கொ ணுபர மார்த்தங் கொடுப்பதே.

(இ - ள்.) அந்தணராஞேர் ஞானகாண்டத்தை யருளிச்செய்யு மாசிரியன் தன் சாதியின்க ணில்லாவிடத்திற் றம்மிற் கீழாக நீக்கிய வரையரிடத்திற் கேட்கப்பெறும். அவனுந் தன் சாதியின்க ணில்லாவிடத்து வசியனிடத்திற் கேட்கப்பெறும். சூத்திரன் தன் சாதியினுந் தனக்குயர்ந்த சாதியினுங் கேட்கலாம். அரையன் முதன் மூவரு மவரவர்க்கடுத்த மேற்குலத்தோர்க்குக் கருமோபதேசஞ் கொடுக்கப் பெறு. ஞானேபதேசங் கொடுத்தலே யுரித்தாம்.

(வி - ரை.) 'தங்குலத்தில்லையேல்' என்பதனுற் றத்தங் குலத்திற் பெறுதலே சிறப்புடைத்து என்றதென்க.

ஏகாரம் - தேற்றம். சனகன் அரையனு யிருக்கவும், சுகர்முதலிய ,பிரமரிஷிகளுக்கு ஞானத்தைப் போதிக்கையாலும், விதுரர் நாலாம் வருணமாயிருக்க ஞானத்தைத் தருவாசருக்குப் போதிக்கையாலுங் கூறியதென் றறிக. (கங)

["உரைத்தாமென்றல்" என்னுந் தந்திர வுத்தியாற் சிவஞானத்தை யுபதேசிக்கு முறைமை யுணர்த்தி மேலதனை யெழுதிய புத்தகத்தைத் தானஞ்செய்யு முறைமை யுணர்த்துகின்ருர்.]

வேறு

ஒப்பரிய வரனமல னுரைத்தவுரை யுதவுமுறை
செப்பினமெய்த் தவசிறந்த சிவஞான கோசத்தை
யப்பரிசே யருந்தவர்க்கு மடைவிக்கு மடைவினையுஞ்
செப்புவங்கே ளீந்தார்க்கு மிரந்தார்க்குஞ் சிறப்புறவே.

(இ - ள்.) சத்தியமான தவமுடையவனே! தனக்கொப்பொருவரு மில்லாத சிவனருளிச்செய்த திவ்யாகமத்தை யாசிரியன் மாணுக்கர்க் குபதேசிக்கு முறையைச் சொன்னேம்; மேற் சிறப்பினையுடைய சிவாகமங்களை வரைந்த திருமுறையைப் பக்குவராயுள்ள அரிய தவத்தினை யுடையார்க்கு முதவு முறைமையினையும், ஈவோர்க்கு மிரப்போர்க்கு மித்தானமே சிறப்புடைத் தென்னும் வண்ணஞ் சொல்லின்றேங் கேள்!

(வி - ரை.) 'அருந்தவர்க்கும்' என்ற வும்மை ஆசிரியர்க்குமெனு, எச்சவும்மையாயிற்று. (கச)

[சிவஞானகோசதானஞ் செய்வோர் சிவன் முதலாயினோரை யருச்சிக்கு முறை யுணர்த்துகின்றார்.]

பராபரனை முதற்பூசை பண்ணிடுக வதன்பின்பு
பராபரனுக் கொத்தபர ஞானத்தைப் பரிவுறவே
பராபரனைப் போதிக்கும் பரஞானம் பாலிக்கும்
பராபரனைத் தேசிகனை யதன்பின்பு பகர்விதியால்.

(இ - ள்.) சிவஞான கோசத்தைத் தானஞ்செய்வோன் முதற்கட் பராசத்திக்கு மேலான சிவனை யருச்சனை செய்யக்கடவன் அதற்குப் பின்பந்தச் சிவனுக்கு நிகரான பரகதி ஞானமான திருமுறையை யன்பினோடே யருச்சனை செய்யக்கடவன்! அதன் பின்பு சிவனை யறிவிக்கு மேலான சிவஞானத்தை யுபதேசிக்கும் பராபரனா யிருந்துள்ள ஆசிரியனை யாகமத்திற் சொல்லிய குருபூசாப் பிரகாரத்திலே பூசிக்கக்கடவன்!

(வி - ரை.) பூசை பண்ணிடுக வென்பதனையும் விதியால் என்பதனையும் யாண்டும் வருவிக்க. (கஊ)

[வித்யாதானஞ் செய்தற்கு மண்டபவிதி யுணர்த்துகின்றார்.]

பூதலத்து ளவலங்கள் பொருந்தாது குணம்பொருந்து
மாதலத்து ளெண்முழத்தால் வகுக்கமுறை மண்டபத்தை
யீதியற்ற வரிதெனினான் முழத்தானு மியற்றிடுக
கோதொழிந்த நாற்கோணம் வட்டமுமாங் கூறியதே.

(இ - ள்.) பூமியின்கண் அவலமெனக் கூறிய அதம பூமியைப் பொருந்தாமல் அந்தணர் முதலிய நான்கு வருணத்தார்க் கேற்றவன்ன கந்த ரசங்களைத் தனித்தனியே யறிந் தந்தந்தப் பூமியின்கண் வித்யா மண்டபத்தை யெட்டு முழத்தினாலே விதிவழி செய்க! இங்ஙனஞ் செய்யக்கூடாதவிடத்து நான்கு முழத்தினேனும் செய்யக் கடவன்! இந்த மண்டபஞ் செய்யுமிடத்துக் குற்றமற்ற சதுரசிரமாகவும், வட்டமாகவும் செய்யலாம்.

(வி - ரை.) சதுரசிரம் பிறப்பிக்குமிடத்து நான்கு திக்கினும் மற்சியமாகக் கவராயங்கொண்டு பிறப்பித்து அதிற் சதுரசிரம் பிறப்பியாவிடத்து வாய்க்கப்பெறு தாதலாற் கோதொழித்த தென்றதென்க. (கஎ)

இதுவுமது

அதனடுவே யம்புயத்தை வண்சுதையா லமைத்திடுக
விதனயலே யற்றுமுள வலங்கார மியற்றிடுக

விதமுறவே யிதன்மீது விரித்திடுக விரைமலருஞ்
சிதநிறத்த நவவறுவை யதன்மீது சேர்த்துகவே.

(இ - ள்.) அந்த மண்டபத்தி னடுவே யழகிய மாப்பொடி முதலிய வெள்ளையினாலே யெட்டிதழ்த் தாமரையை யிடுக! இந்தப் பதுமத்தின் பக்கங்களிலே மற்றுள்ள வல்லிமுதலிய அலங்காரங்களைச் செய்க! இப்படி யலங்கரித்த பதுமத்தின்மேல் பலவகையான மணமுள்ள பூக்களையும் பரப்பி யதன்மேல் வெண்ணிறத்தையுடைய கோடிப்பரிவட்டம் விரிக்கக்கடவன்! (கஎ)

இதுவுமது

தண்டாள நிரைவிரவு தம்பங்க ளொருநான்கு
கொண்டதனு ணாற்றிசையுங் குறிபெறவே நிறுவிடுக
வெண்டாள விதானத்தை விரித்திடுக மீதுறவே
யொண்டாள மாலைகளுங் கந்துகமு மொழுக்குகவே.

(இ - ள்.) முத்துக்களை யொழுங்குபெற வழுத்திச்செய்த தூண்கணான்கினையும், மண்டபத்துக் கேற்பக்கொண்டு அந்த மண்டபத்தின் நாற்றிசையும் அழகுபெற நாட்டுக! அதன்மேற் பொருந்தும்படி முத்துமேற் கட்டியையுங் கட்டி யொள்ளிய முத்துமாலைகளையும், முத்துப் பந்தினையும், கொடுங்கையிற் கட்டித் தூக்குக! (கஅ)

இதுவுமது

கண்டையுடன் சாமரையுங் கட்டிடுக பட்டினையுந்
துண்டமதி புற்புதம்போற் றர்ப்பணங்க டுலக்கிடுக
திண்டிகழ்கும் போதகத்தைத் திசைநான்குஞ் செறித்திடுக
புண்டரிக வலரதன்வாய்ப் பொருத்துகவங் குரம்புரிந்தே.

(இ - ள்.) கண்டையாகிய மணியையும், சாமரையையும், பலவகையான பட்டுப் புடைவையையும், கொய்சுகட்டுக! அர்த்த சந்திரனைப்போன்ற பிறையையும், நீர்க்குமிழிபோன்ற தட்டையையும், பொலிவினையுடைய கண்ணாடிகளையும், விளங்கும்படி கட்டுக, திண்மை விளங்கிய சலம் பூரித்த சாந்தி கும்பங்களை நாலுதிசையிலுந் தாபிக்க! முதற்கண் அங்குரார்ப்பணஞ் செய்து பின்பு அந்தச் சாந்தி கும்பங்கண்மேற் தாமரைப் பூக்களைச் சாத்தக்கடவன்.

(வி-ரை.) 'மதி, புற்புதம்' என்பன வுவமவாகுபெயர். (கக)

[சிவஞான கோசத்துக்குச் சிங்காதனமு மியந்திரபீடமும்
இயற்றுமுறைமை உணர்த்துகின்றார்.]

அணியுறவே யரிபரிக்கு மாதனத்தை யாக்கிடுக
மணியுறவே மதகரியின் கோட்டாலு மற்றிதுதான்
பணவரிதேற் சந்தனத்தும் பண்ணிடுக வியந்திரத்தைத்
திணமருவு மதகரியின் கோட்டாலுஞ் சிறப்புறவே.

(இ - ள்.) விசுவகன்மிய முதலியவற்றிற் கூறிய பதும முத லிய வாதனபேதத்திற் சிங்கங்க ளழகுபெறத் தாங்கு மாதனமா கிய சிங்காதனத்தை நவரத்தினங்களு மிட்டழுத்தி மதம்பொருந்திய யானைக்கொம்பினாலே செய்க! இந்தச் சிங்காதனம் பண்ணக்கூடா தாயிற் சந்தனமரத்தினாலும் திண்ணிய யானைக்கோட்டினாலு மியந் திர பீடத்தைச் செய்க!

(வி - ரை.) விசுவகன்மியம்-சிற்பநூல். மற்று-வினைமாற்றின் கண்ணது. திணம்-திண்மை. 'கோட்டாலும்' என்ற வும்மையா லாதனங்க ளிரண்டும் பொன், வெள்ளி, செம்பு, பித்தளைகளினு லும், சந்தன முதலிய மரங்களினாலும் செய்தலுமா மென்க. எந்திர பீடஞ் செய்யுமிடத்து முற்கூறியவற்றுள் இயன்ற தொன்றைப் பதினெட்டங்குல நீளமும், இரண்டங்குலச் சுற்றுப்பருமையு முரு ண்டதாதல், சதுரசிரமாயாதல் நாலுதண்டத்தை யுண்டாக்கி அதனுனி களிற் றாமரை முகிழாகப் பண்ணி யதனடுவே துவாரமிட் டதனடு விற் கயிறுகோத்து எந்திரபீடஞ் செய்க! அல்ல திருபத்துநா லங்குல நீளந் தண்டத்தி னுயரமு மதிற் பாதி விசால தண்டங்களுங் கொண்டு செய்க! (உ0)

[இங்ஙனங் கூறிய ஆதனமுந் திருமுறையு மண்டபத்தில் வைக்கு
முறை யுணர்த்துகின்றார்.]

இத்தகைய வாதனத்தை யிலங்குமணிப் பந்தரிடை
வைத்தருவை கந்தமல ரதன்மீதே மலிவிக்க
வித்தகன்வே தகனுதி விளம்பியவாய் மொழியெழுதும்
புத்தகமு மதன்மீது வைத்திடுக புணர்வுறவே.

(இ - ள்.) இத் தகைமையோடு கூடிய சிங்காதன பீடமாதல் எந்திர பீடமாதல் விளங்கும் அழகிய பந்தலினடுவே வைத்து அதின் மேலே பரிவட்டமும் விரித்து மணமுள்ள பூக்களு நிறைக்க! அதன் மேலே சுத்தனுமா யான்மாக்களுக் கறிவிப்பானுமா யிருக்கின்ற சிவ னருளிச்செய்த சிவாகமத்தை எழுதும் வெள்ளேட்டுத் திருமுறை யைப் பொருந்தும்படி வைக்க!

(வி - ரை.) 'எழுதும் புத்தகமும்' என்ற உம்மையா னெழு தின புத்தகமு மென்பதூஉமாம். (உக)

[மேலதனைப் பூசை செய்யுமுறை யுணர்த்துகின்றார்.]

எழுதாத புத்தகத்தி னிருத்தியசொற் புத்தகத்தைப்
பழுதாகா ரோசனையைக் குங்குமத்தைப் பாளிதத்தை
யழகாகப் பூசிடுக வலர்மாலை தனையணிக
வழுவாத மகிழ்வுறவே சாத்திடுக வத்திரமும்.

(இ - ள்.) அலேகத்தின் மேலே வைத்திருக்கிற சிவாகமங்க ளெழுதிய திருமுறையிலே குற்றமற்ற கோரோசனையையும் குங்கு மத்தையும் கற்பூரத்தையும் அழகுபெறப் பூசிப் பூமாலை யணிந்து தவ றற்ற அன்பினாற் பரிவட்டமுஞ் சாத்துக!

(வி - ரை.) அலேகம்-வெள்ளேடு. (உஉ)

இதுவுமது

எத்தொகைய கறியமிர்தின் விதமுளநல் லினிமையுற
வத்தொகைய விதத்துடனே நிவேதிக்க வமிர்தினையும்
பத்திபெறு தீபமுடன் பஞ்சவித தூபத்தை
யுய்த்திடுக மற்றுமுள வுபசார முறையுறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) நாழியரிசிக்கு ஒருபலங் கறி. (உங)

[மேல் நிறுத்த முறையானே ஐவகைத் தூபமும் வகுத் துணர்த்துகின்றார்.]

அவ்வகைய தூபங்க ளாவனதாங் குந்துருக்கந்
துய்யபசுங் கற்பூரந் துன்னியகா ரகில்வெண்மை
யெய்தியசந் தனமினிய குற்குலுவு மெனவறிக
செய்யதனாற் றிருவிளக்கைக் காபிலத்தா னிகழ்த்துகவே.

(இ - ள்.) ஐவகைத் தூபங்களாவன: குந்துருக்கமும், கூடன் கற்பூரமும், வயிரம்பெற்ற அகிலும், வெண்மையான சந்தனமும், இனிமை செய்யுங் குருஞ்சீதாரியும் என்றறிக. சந்நிதியிலிடுந் திரு விளக்கைக் கபிலைப் பசுவினெய்யினாலே யிடுக!

(வி - ரை.) கபிலையைக் 'காபிலம்' என்றார். (உச)

[அதனை வலம்வந்து வணக்கஞ் செய்யுமுறை உணர்த்துகின்றார்.]

வலஞ்செய்து தண்டதனை மானவிதி வழிதழுவத்
தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற் றிருகன்னத்
துலங்குமுகம் வாய்புயங்க ளொனுமெட்டுந் தோயமயி
ரிலங்குசிரங் கரமுழந்தா ளொனுமைந்து மிசைந்திடவே.

(இ - ள்.) வெளி. (உ௫)

[குருபூசை யுணர்த்துகின்றார்.]

இந்தவகை சிவஞான பூசையினை யியற்றியுடன்
கந்தமலர்ப் பூங்கோயி லதற்கயலே கடிதமைக்க
வந்தமலர்த் பந்தரிடைத் தேசிகனைப் யருச்சிக்க
பந்தமறுத் தருள்வானைப் பரமனெனப் பாவித்தே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சிவனுஞ் சிவஞானமுங் குருவுந் தம்மிலொக்கு மோ வென்னிற் சிவனுக்கு யாதொரு மகிமையுண்டு அந்தச் சிவ னிடத்திற் றோன்றிய சிவஞானத்துக்கு மப்படியே. அந்தச் சிவ ஞானத்துக்கு யாதொரு மகிமையுண்டு அதனை அங்ஙனம் அறி விக்கு மாசிரியர்க்கும் அப்படியே. அஃதெக்காரணத்தா லெனிற் சிவ ஞசாரிய மூர்த்தமாயிருந்து ஆன்மாக்கள் பாசத்தைத் தகித்துச் சிவஞானத்தைப் பிரகாசிப்பிக்கையாற் சிவன் முதலிய மூவருக்கும் பூசை செய்த பலமொக்குமென் றறிக. (உ௬)

[ஆசிரியனிடத் தனுமதம் பெறுமுறையும் மேற்செய்யுங் கருமமு மூன்று செய்யுளாற் குளகமாக உணர்த்துகின்றார்.]

பூசித்துப் பரமசிவன் பூசனையைப் போலுளத்து
ளேசற்று வலஞ்செய்து பணிந்துருவித் திருகரமுந்
தேசற்ற தேசிகனே சிவஞான தானவினை
யாசற்று நிறைவேற வனுமதஞ்செய் கெனவறைந்தே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஏசறவு-மனமுதலிய விகாரங்களை யகற்றுதல்; ஆசு-குற்றம். (உ௭)

அற்புதனு மாரியன்ற னனுமதிபெற் றறன்மூழ்கிப்
பொற்புடைய வெண்கலிங்கம் புனைந்தணிந்து வெண்ணீறுங்

தற்பரனை யுண்ணினைந்து தரணிமிசைப் பணிந்தெழுந்து
சொற்பதவா சகமுறையைத் துயக்கறவே விரித்துடனே.

(இ - ள்.) வெளி.

(வி- ரை.) அற்புதன்-அதிசயன். விரித்தல்-சேமநீக்குதல். ()

மற்றைமுறை யதுதன்னில் வரைககவி யொருநான்கெண்
அற்றமுறை தனையொடுக்க வுவகையுற வொருமையுட
னற்புதனைத் தேசிகனை யருத்திடுக வன்றுநி
கற்புடைய விரதியர்க்கும் வேதியர்க்குங் களிப்புறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) விரதியர்-பிரமசாரி; உம்மையாற் சந்நியாசிகளையுந் தழீஇயினார். (உ௯)

[* பூரி போசன முணர்த்துகின்றார்.]

விருத்தர்கிரு பணர்பாலர் மிடியரடு பிணியாள
ரொருத்தரையு மற்றார்க ளூனத்தா ரெனுமிவர்க்கு
மருத்திடுக வுறவினுட னதன்பின்றா னருந்திடுக
பிருத்தியரை யதன் பின்பு பேணிடுக பிறரையுமே.

(இ - ள்.) கிழவர், பேராசையுடையவர், சிறுபிள்ளைகள், தரித்திரர், நோயினால் வாதைப்படுபவர், அனாதர், குருடர் என்றிங்ஙனங் கூறப்பட்ட வெல்லோர்க்கும் அன்னாதிகளைப் புசிப்பிக்க! அதன் பின்பு தாய் தந்தை சுற்றத்தோடு தானும் புசிக்க! அதன் பின்பு தன்னடிமையையும் அக்காலத்திலே வந்த அதிதியரையும் இன்னாரென்று வரையாமற் புசிப்பிக்க!

(வி - ரை.) பிருத்தியர்-அடிமைகள். (௩௦)

[பலியிடு முறையு மதிவாதனமு முணர்த்துகின்றார்.]

அற்றைநிசிக் கணபலியை யமைத்திடுக் துயிலினையும்
பற்றிடுக பிரமசரி யல்லாதார் பற்றொழிக
மற்றையநாண் முதல்யாம மண்டபத்தை யிருமுழத்திற்
கற்புறவே யமைத்திடுக காண்பார்கள் களித்திடவே.

(இ - ள்.) அற்றையிரவு உருத்திரகணமுதற் கேத்திரபாலனீறாயுள்ள கணங்கட்குப் பலியிட்டுப் பின்பு பிரம்சாரியாயி னுறக்கஞ் செய்க! இல்வாழ்வானாயி னுறங்கா தொழிக! மற்றைநாண்

* பூரி - ஈண்டு மிகுதிப்பொருட்டு.

முதற் சாமத்தி லிரண்டுமுழ நீளத்திலு மவ்வள வகலத்திலு மொரு மண்டபத்தை விதிப்படி காணுமவர்கண் மகிழ்ச்சி யெய்தச் செய்க.

[பின்புமோர் விதியாற் சரசுவதி பீடவிதியையுஞ் சிவஞானத்தைப் பூசைசெய்யும் விதியையு முணர்த்துகின்றார்.]

அழகுறவே சரத்தாலு மமைத்தவியந் திரபீடத்
தெழிலுடைய புத்தகத்தை யிருத்தியருச் சனையியற்றிப்
பழுதறநா கரநந்தி முதலிபியைப் பயின்றுவலா
னெழுதிடுக படித்திடினு மருச்சனைதா னித்தகைத்தே.

(இ - ள்,) முற்கூறிய மண்டபத்தின்கண் நாணற்கழி முதலிய வற்றா னழகுபொருந்த விதிப்படி செய்த சரசுவதி பீடத்தி லுறுப் பழ்கினையுடைய மாதிருகையாகிய திருமுறையை யெழுந்தருளப் பண்ணிப் பூசைசெய்து குற்றமற்ற நந்திநாகரந் தேவநாகர முதலாய வெழுத்துக்களை யெழுதித் தீர்ந்தவனே யெழுதக்கடவன்! அதனை நாடோறும் படிக்கும்போது மிந்த முறைமையிற் பூசைசெய்து படிக்க!

(வி-ரை.) 'முதலிபி' என்றதனால் வடமொழி தெலுங்கு முத லாயின படித்திடினு மெனப் போதரலால் உம்மை இறந்ததுதழீஇய வெச்ச வும்மை என்க. மாதிருகை-மாதா. (கஉ)

[மேற்செய்யுங் கன்ம முணர்த்துகின்றார்.]

அந்தமுறி னுபவசியா யமலனடி யருச்சிக்க
செந்தழலை யோம்பிடுக திருமுறையை யருச்சிக்க
பந்தனையை யறுத்தருளைப் பாலிக்குங் குருபரனைச்
சிந்தைமகிழ்ந் தருச்சனையைச் செய்திடுக சிறப்புறவே.

(இ - ள்.) எழுதிமுடிந்த வளவின் வித்யாதானஞ் செய்பவன் நிராகாரியாயிருந்து சிவபூசையு மக்கினி காரியமுஞ் செய்து அங்ஙன மெழுதிய திருமுறையைச் சாந்தி கும்பந் தாபித்திருக்கு மண்டபத் திற் பூங்கோயிலின்கண் வைத்துப் பூசைசெய்து ஆணவமுதலிய பாசபந்தத்தை வேரறுத்துத் திருவருளைக் கொடுக்கும் ஞானசாரி யனை யுள்ள மகிழ்ச்சியினாலே விசேட பூசை செய்க! (கக)

இதுவுமது

அற்றைநிசி யவ்விடத்து வேதாதி யரவத்தான்
மற்றுமுள பாடலினு ளாடகத்தின் வசியாலுஞ்

செற்றிடுக துயிலதனைத் தினகரனைத் தெரிசித்தே
சிற்பமுறத் தேரதனைச் சிறப்பிக்க விதிதெருண்டே.

(இ - ள்.) அற்றை யிரவில் அப்பூங்கோயிலின் முன்னே வேதாகம புராண வொலிகளினாலும், பிராகிருதம் திராவிட முதலிய பாடல்களினாலும், ஆன்மாக்களை வசீகரிக்குங் கூத்துகளாலும் உறக்கத்தினைப் போக்கி விழித்திருக்கக்கடவன்! மற்றைநாட் காலமே சிற்பநூல் விதியை யாராய்ந்து பண்ணப்பட்ட தேரினை யலங்கரிக்க!

நாடகமெனப் பொதுப்படக் கூறினமை:-

வெண்பா

"சங்கா ருடிய தாண்டவமு மாங்குமையா
ளிங்கிதத்தா லர்டு மிலாச்சியமும்—பொங்குதினை
யாழிப் புவியி லகமும் புறவரியுஞ்
சூழுநட னாமென்று சொல்."

என்பதனாலறிக. (கூ௪)

இதுவுமது

இத்தகைய விமானத்து ளிறையறையு மொழிபெழுதும்
புத்தகத்தை புணர்வித்துப் பூசனையைப் புரிந்திடுக
பத்தியுட னாராலே பரிப்பிக்கப் பலர்பரவ
வந்தனம ராலயத்து ணகர்வலஞ்செய் தாக்குகவே.

(இ - ள்.) இச் சிறப்பினையுடைய புட்பக விமானத்திற் சிவனருளிச்செய்த சிவாகமத்தை யெழுந்தருளப்பண்ணிப் பூசைசெய்து அன்பினோடு நாராகிய சீபாதக்காரராற் றூங்கச்செய் தெல்லாருந் துதிசெய்ய நகரை வலமாக வெழுந்தருளப் பண்ணுவித்துச் சிவனெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலிற் கொண்டுசென் றந்த விமானத்தைத் திருமுறையுட னிருத்துக! (கூ௫)

[மேல் வேறுமோர் விதி யுணர்த்துகின்றார்.]

அல்லதுபுத் தகமதனை யானைமுடி மிசையமைத்து
நல்லநகர் வலம்வருக நகரத்தார் நாட்டாரும்
வெல்லையறு வையும்வீக்கி விழைவுடனே புடையடைய
மல்கமிகு மங்கலங்கள் வணங்கிமுனே செலமன்னன்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) வெல்லையறுவை-வெள்ளைப் புடைவை. 'அறுவையும்' என்ற வும்மையானே பாகுசீலை யாபரண முதலியவைகளுங் கொள்க. வீக்குதல்-தரித்தல். (கூ௬)

இதுவுமது

பலியதனைத் திசைதோறும் பண்ணிடுக பார்த்திபனு
நிலவணியுஞ் சடைமுடியார் மாபூசை நிகழ்த்திடுக
கொலைமுதலு மொழித்திடுக நிகளாதி குறைத்திடுக
மலைவில்லிக்கு மாபூசை மனைதோறும் வகுக்கவரோ.

(இ - ள்.) அக்காலத்திலே வீதியிற் றிக்குவிதிக்குக்களி லிந்திரன் முதலிய தேவர் பலியை யாசாரியாரலிடுவிக்க! அரசனுந் தன் திரவியத்தாற் சிவபூசையை விசேடமாகச் செய்வித்துக் கொலை களவு கட் காம முதலிய தொழில்களையுந் தவிர்த்து நெறிமுறையி னில்லாதோரைத் தண்டித்தற்பொருட்டுத் தானிடுவித்த விலங்கு தொழுமுதலியவற்றிற் கிடக்குமவரையும் விட்டு மகமேருவை வில் லாகவுடைய சிவனுக் கில்லங்கடோறும் விசேடபூசை செய்யும்படி கற்பிக்க! (கஎ)

இதுவுமது

பருவமறுங் காலத்தின் முதமதனைப் பரமனுக்கு
மருவுமிக்க விதிமுறையே வர்தனமர் திருவெல்லை
விரைவுடனே விரவியமர் விமானத்துட் புத்தகத்தைப்
பரிவுறவே யருச்சிக்க சயவொலியும் பாங்கெழவே.

(இ - ள்.) திருவிழா நடக்க விதித்தகாலத்தன்றிச் சிவஞான தானங்கமாகச் சிவனுக்குத் திருவுள்ள மகிழ வொருநாளெழுந்தரு ளப் பண்ணுவித்து வேண்டுவார் வேண்டியாங்கு பயக்கு மந்தச் சிவ னெழுந்தருளியிருக்குந் திருவெல்லையை விரைவினோடு வலம் வந்து சந்நிதியிலிருக்கும் விமானத்தி லெழுந்தருளியிருக்கும் சிவ ஞானகோசத்தைச் சயசய வென்னு முழக்கந் திசையெங்கும் விரிந் தெழத் தம்முள்ளத்தி லன்புண்டாகப் பூசைசெய்க!

(வி - ரை.) முதம்-சந்தோஷம்; இது வடமொழி. (கஅ)

இதுவுமது

பரமசிவன் றிருமுன்னே தேசிகனைப் பணிந்தெழுந்து
திருமுறையே நிவேதிக்க திறல்வேந்தன் முதலோர்க்கும்
வாமுறவே யோரியலை யதுதன்னுண் மதித்தறைக
வுரைவிதியுங் காமரமும் வழுவறவே யுணர்ந்தோனே.

(இ - ள்.) சிவஞானதானஞ் செய்பவன், முன்னர் அர்ச்சித்த திருமுறையை மேலான சிவ சந்நிதியி லெழுந்தருளப்பண்ணி வந்த வாசிரியரை வணங்கி யெழுந்திருந் தவர் கையிற் றானஞ் செய்யக்கட

வன்! பின்பு பதச்சேதம், பதப்பொருள், விக்கிரகம், வாக்கியயோசனை, சங்கை யுத்தரமாகிய வுரைகோளைந்தினையும், பூபாளி யைரவி முத்விய காண்பேதத்தையும், குற்றமற வறிந்த வாசாரிய ரந்த வாகமத்தி லொரு படலத்தை யரையன் முதலாயினோர்க்கு நன்மை யுண்டாக்கும் பொருட்டுப் படித் ததன்பொருளை யுணர்த்துக! (௪௯)

[சிவஞானத்தைச் சாதக முதலானோர்க்குத் தானஞ் செய்யு முறையும் அதனை வேந்தன் முதலானோரு மகளிருஞ் செய்தற்கோர் சிறப்புவிதியு முணர்த்துகின்றார்.]

இத்தகையே யருந்தவர்க்கு மீபொழுதி லியற்றிடுக
புத்தகத்தின் பூசனையைப் புரவலர்மற் றனைவருந்தம்
வித்தமது கொண்டிந்த விதியதனை விளைவிக்க
புத்தியினாற் பயில்விக்க தேசிகனாற் பாவையரும்.

(இ - ள்.) அருந்தவராகிய சாதகர்க்கும், புத்திரர்க்கும், சிவஞானதானஞ் செய்யுங்கா லீண்டுக் கூறியபடியே அதனைப் பூசை செய்து கொடுக்கக்கடவன்! வேந்தரு மற்றுமுள்ளாரு நெறிமுறையா லீட்டிய தத்தம் பொருள்கொண் டிந்தச் சிவஞானதான விதியை அன்பினாற் செய்விக்கக்கடவர்கள்! நான்கு வருணத்தின் மகளிரா யுள்ளாருந் தானஞ் செய்யாது ஆசாரியனாலே செய்விக்க! (௫௦)

[சாந்தி கும்பப் புரோக்கண முணர்த்துகின்றார்.]

சாந்திபெறு தோயத்தைச் சமைத்தகுரு பரன்றானும்
வேந்தனது முடிமிரவத் தெளித்திடுக விழைவுறவே
சேர்ந்தவர்க ளனைவர்க்குந் தெளித்திடுக தெளித்ததனாற்
றேய்ந்தழியு மவரவர்தந் தீயவினைத் திறலழிந்தே.

(இ - ள்.) ஆசிரியன் வித்தியாமண்டபத்திற் றாபித்த சாந்தி கும்பசலத்தைக்கொண் டரசனது சென்னியினு மவ்விடத்து வந்து சேவித்த மெய்யடிய ரெல்லார்க்கும் விருப்பத்துடனே தெளிக்கக் கடவன்! அங்ஙனந் தெளித்த நன்மையினா லவரவர் செய்த கொடிய பாவங்களின் வலியழிந்து கெடும். (௫௧)

[ஆசிரியர்க்குப் பூசை யரையர்முதலாயினோர் செய்யுந்திற முணர்த்துகின்றார்.]

ஆசானுக் கருநிதிய முதலளிக்க வடலரசன்
றாசாதி மற்றையருந் தமக்கியன்ற தொகைசெய்க
நேசாரப் பூசையினைப் பூசுரர்க்கு நிகழ்த்திடுக
வீசான னடியார்க்கு மாதுலர்க்கு மிரக்கத்தால்.

(இ - ள்.) வெளி. (௫௨)

[இந்த வித்தியாதானத்தா லுலகு பெறும் பய னுணர்த்துகின்றார்.]

இத்தகையே புரிந்திடிலோ ரிடையூறும் புவிக்கில்லை
யத்தனையே யுளநன்மை வகையனைத்தும் புகழ்மல்குங்
குத்திரருங் குலைந்தகல்வர் கொடுவினையு மடுபிணியு
நைத்தழியு மழைபொழியுந் திங்கடோறு நலமுறவே.

(இ - ள்.) வித்தியாதானத்தை யிப்படியே செய்வாராயி னுலகத்துக்கு இடையூறுகள் சிறிதேனு மில்லையாம். ஆக்கமு மின்பத்திறங்க ளனைத்து முளவாம். கீர்த்தியும் பெருகும். கள்வராயினாருந் தாமே நடுங்கி யொளிப்பர். கொடிய பாவமும் வருத்தாநின்ற நோயுந் தேய்ந்து கெடும். நன்மை பொருந்தும்படி மாதந்தோறு மழையும் பொழியாநிற்கும். (சங)

[மேலதனைத் தானஞ்செய்தா ரடையும் பல முணர்த்துகின்றார்.]

இத்தகையே புத்தகத்தை யீந்தாரு மெழுத்தொன்றற்
கத்தனமர் புரத்துறைவ ராயிரமார் கற்பமுற
முத்தனைய முறுவனகை முளைத்தபிறை வளைத்தநுதற்
றத்தையன மொழிமடவார் தங்கியதேர்த் தானத்தே.

(இ - ள்.) இம் முறைமையிற் சிவஞானத்தைத் தானஞ் செய்தாரு முத்துப்போன்ற நகையினையு மாகாயத்தின்கட் டோன்றிய விளம்பிறைபோன்று வளைந்திருக்கு நெற்றியினையுங் கிளியின் சொல்லைப்போன்ற மொழியினை முடைய வரமாதர்கள் சூழ்ந்திருக்கும் விமானத்தி லேறிச் சென்று ஓரெழுத்துக் காயிரம் பிரமகற்பஞ் சிவலோகத்தி லிருப்பர்.

(வி - ரை.) ஏறிச்சென்று என்னும் வினையெச்சம் விரித்துக் கொள்க. 'ஈந்தாரும்' என்னு மும்மை யிறந்தது தழீஇயது. (சச)

[சிவஞான கோசத்தைச் சேமஞ் செய்தோர் முதலாயினோர்
பல முணர்த்துகின்றார்,]

புத்தகத்தைப் புரந்தாருந் தாய்தந்தை புத்திரருஞ்
சித்தமகிழ் வுறவேவற் செய்தார்க ளெனுமிவரு
மத்தனமர் சிவலோக மடைவார்க ளமருலக
முத்தொகைய சுற்றத்தார் முற்றினர்முன் னற்றவமே.

(இ - ள்.) சிவாகமத் திருமுறையைக் காக்குமவருஞ் சிவ ஞானதானஞ் செய்தார் தாய் தந்தையரு மக்களு முள்ள மகிழ்ச்சி பொருந்த வேவல் செய்தாருமெனக் கூறிய விவரெல்லாருஞ் சிவ

லோகத்தினை யடைவர். முற்பிறப்பி னல்ல தபோபலத்தா லிப்பிறப்பிற் சிவஞானதானஞ் செய்தார் மூவேழ் சுற்றத்தினருந் தேவலோகத்தை யடைந்திருப்பர். (சரு)

[சிறப்புவிதி யுணர்த்துகின்றார்.]

பொருந்துவர்முற் பகர்ந்தபலம் புகழாடிப் பூரணையிற்
புரிந்தவருஞ் சிவஞான புத்தகத்தைப் பூசனையைத்
திருந்துமலர்ப் பந்தரிடைச் சிறப்புறவே வைசகியிற்
புரிந்தவரும் பூரணையிற் சிவஞான பூசனையே.

(இ - ள்.) வெளி. (சகூ)

[சிவாகமங்க ளெழுதும் அலேகங்கள் கொடுப்பார் பெறும்பயனுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

இறைவ னிணையில் வாய்மொழியை
யெழுத விதழா னிசைமுறையைப்
பெறுவ மென்னு மாதரவு
பெற்றார் தமக்குப் பெறுவித்தா
ரறையுங் கழலா னமலனமர்
புறத்தி னதனி னிதமொன்றற்
குறைவ ருகமோ ராயிரமு
முறவே யுவகை யதுபெறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) இதழ் - சீதாளிதாலமுதலியன. (சஎ)

[கம்பை முதலியவு மெந்திரபீடமுங் கொடுப்போர் பெறும் பயனுணர்த்துகின்றார்.]

கம்பை கவினு றெழுத்தாணி
கயிறுங் கொடுப்போர் மையிணையு
நம்பிக் கொடுப்போர் முன்னவின்ற
பலத்திற் பாதி நலம்பெறுவர்
கொம்பி னுனு மதகரியின்
கோணச் சரத்தின் கோலானுந்
தம்பா லுவகை யுறப்பீடஞ்
சமைத்தே யளிப்பா ரவர்தாமும்.

(இ - ள்.) தேக்கு உசிலை முதலிய மரங்களாற் செய்யப்பட்ட கம்பையும், விதிப்படி யழகுநிறைந்த வெழுத்தாணியையும், பட்டு

நூன் முதலியவற்ரு லிருபத்தேழிழையாற் செய்யப்பட்ட கயிற்றை யுங் கொடுப்பாரும், மைக்காப்பினை விரும்பிக் கொடுப்பாரும், யானைத் தந்தத்தினாலுஞ் செவ்விய நாணற்கழியினாலு மெந்திரபீடத்தைச் செய்து தமதுள்ள மகிழ்ச்சியுற்றுக் கொடுப்பாரும், சிவஞானதானஞ் செய்வார்க்கு முற்கூறிய பலத்திலே பாதி நலமாகப் பெறுவர்.

(வி - ரை.) 'கவினு மெழுத்தாணி' எனச் சிறப்பித்ததனால் எஃகினாலே பதினறங்குல நீளங்கொண் டதினடுவே எறும்பி னிடைபோன்ற கணையுமாகச் செய்த நாராசமெனக் கொள்க. (சஅ)

[திருமுறைக்கு வேண்டு முபயோகங்கள் கொடுப்பா ரடையும் பல னுணர்த்துகின்ருர்.]

புத்த காங்க மேதேனும் புரிவோ டீவார் புரையோர்பா
லத்த னமருஞ் சிவலோகத் தமர்வர் போக மனைத்தினொடும்
வத்தி ராதி விதானந்த மகிழ்ந்தே யீவா ரிமையொன்றற்
குய்த்தே யுகமோ ராயிரமு முறவே யுறைவ ருவப்புடனே.

(இ - ள்.) திருமுறையைச் சேர்த்தற் கங்கமான சலாகை தம ரூசி சீவுளி யாதொன்றையேனும் பெரியோர்பால் விருப்பத்துடன் கொடுப்பவர் சிவலோகத்திற் சென்று சகல போகங்களுடனுங் கூடி வாழ்ந்திருப்பர். அதற்குச் சாத்தும் பரிவட்டமுதன் மேற்கட்டி யீருக வுள்ளனவற்றை மகிழ்ந்து கொடுப்பா ரிமையொன்றற் காயி ரம் யுகமுங் குறையாம லகமகிழ்ச்சியுடன் சிவலோகத்தி லிருப்பர்.

(வி - ரை.) 'வத்திராதி' என்றதனு லங்குரக் காற்பானத் தூக்கன் முதலியவுங் கொள்க. (சகூ)

[ஒப்பின் முடித்தலாற் சிவாகமத்தை யோது ஞாதாக்களுக்கு வத்திரதானஞ் செய்பவர் பெறும்பய னுணர்த்துகின்ருர்.]

பரமன் றிருவாய் மொழியதனைப்
பயிற்றும் பரம யோகிதனக்
குருகி யாடை யுகப்புறவே
யுதவு மவர்த முள்ளளவும்
பொருவில் பரம சிவஞான
கோசம் புரிவோ டீந்தபல
மருவு வார்க ளவரன்றே
பத்த ராவார் வரதனுக்கே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) 'கோசம்' என்பது பலபண்டமு மிருக்குமிடம். அதுபோல அறம் பொரு ளின்பம் வீடென்னு நாற்பொருளும் விரிந்திருத்தலான் சிவஞானகோசமென் றுாகமத்துக்குப் பெய ராயது. (௫௦)

[மேலவர்க் கன்னமுதலியவை யுதவினுர் பெறும்பய னுணர்த்துகின்றுர்.]

பரமர் திருவாய் மொழியதனைப் பயிற்றும் பரம யோகிகளு
குருகி யவர்கட் கன்னுதி யைந்து வருட முதவிடுவார் [க்
பொருவில் பரம சிவஞான கோசம் புரிவோ டூந்தபல
மருவு வார்க ளவரன்றோ பத்த ராவார் வரதனுக்கே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) "உவப்பினு முயர்வினும்" என்றதனுற் 'பரமர்' என ஈண் டொருமைப்பால் பன்மைப் பாலாயிற்று என்க.

"உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினு
மிழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே."

என்றுர் நன்னூலாரும். (பொதுவியல்-கூ-உஅ.) (௫௧)

[இவான்றி யெவரேனுஞ் சிவாகமங்களை யாராயுமவர்க்கு அன்னமுதலியவை யுதவினுர் பெறும்பய னுணர்த்துகின்றுர்.]

மைய லறுக்கும் வாக்கியத்தை
வாக்காற் பயிற்றி மனத்தாலு
மைய மறவே யாராய்ந்தார்க்
கன்ன மாடை யளிப்பாருஞ்
செய்ய சடையார் சிவபுரத்தைச்
செறிவார் சிறுவ ரிறுதியரும்
வைய முண்டான் வைகுண்ட
மூவேழ் சுற்ற மருவிடவே.

(இ - ள்.) மாயையினுல்வரு மயக்க விகற்பங்களையும் சிவாக மங்களை யுாசிரியன்பால் நாவினுலே பயின் றையந்திரிபற மனத்தி னுலு மாராய்வார்க் கன்னமுந் துகிலுங் கொடுப்பவர் தந்தைமுதன் மைந்தர்வரையா யுள்ளாரு மிருபத்தொரு சுற்றமு முலக முண்ட திருமாலெழுந்தருளியிருக்கும் வைகுண்டத்தின்மேவத் தாம் சிவந்த சடையினையுடைய தம்பிரானு ரெழுந்தருளியிருக்குஞ் சிவபுரத்தை யடையாநிற்பர். (௫௨)

[சிவாகமங்கள் பயிற்றுமவர்க்கோர் சிறப்புவிதி யுணர்த்துகின்றார்.]

ஏற்க விரண்டு முழத்தாலு
மெல்லை கோலி யதனடுவே
கூர்த்த நான்கு கோணமலாற்
கொள்க வட்டம் வெண்சுதையாற்
சேர்த்த வெண்டா மரையதனிற்
சிறக்க வெழுதி யதன்மீது
பார்க்க வினிய திருமுறையைப்
பரிக்க பீடத் தொடுபரிந்தே.

(இ - ள்.) சிவாகமங்களை யோதுவான் இரண்டு முழத்தினால் விதிபொருந்த வோரெல்லையை வளைத் தவ்வெல்லையினடுவே நாற்கோணமாதல், வட்டமாதல், ஒரு வேதிகைகொண்டு அதன்கண் வெள்ளிய சாந்துப்பொடியினாலே யழகிய வெண்டாமரையைப் பொலிவுபெற வெழுதி அதன்மேற் காணுந்தோறும் மகிழ்ச்சிதருந் திருமுறையை யொருபீடத்தோ டன்பினா லெழுந்தருளப்பண்ணுக!

(வி - ரை.) கோணம், வட்டம் என்பன ஆகுபெயராய் வேதிகைக்காயிற்று. (௫௩)

இதுவுமது.

மற்று முள்ள மங்களங்கள்
வருக்க வரதன் றிருவாக்கைக்
கற்க வளவில் காதலுடன்
கற்பார் தமக்குங் கற்பிக்க
சொற்கள் கேட்க விரும்பினர்க்குஞ்
சொல்லி முடிக்க முடிவளவிற்
கற்பார் பரம காரணர்க்கும்
புரிக பூசை களிப்புடனே.

(இ - ள்.) அச்சிவாகமத்தைச் சூழ நான்கு பருதியை வைத்துக் கந்தபுட்பத்தா லருச்சனைசெய்து ஆசிரியன் கிழக்குமுகமாயிருந்து சிவாகமத்தை யளவில்லாத வாஞ்சையினா லோதக்கடவன்! தன்னிடத் தோதுவாரையும் வடக்குமுகமாகவைத் தோதுவிக்கக்கடவன்! தானோதிய சிவாகமங்களைக் கேட்க விரும்பு மாணவர்க்கு அத்திசையை நோக்கிவைத்துப் பதச்சேத முதலிய வைந்து றுப்புடனந்நூற்குப் பொருளுரைத்து முடிக்க! இப்படியே யோராகமத்தை யோராசிரியர்பா லோதி முடிந்துள்ளளவிற் கற்போர் உபாதான

காரணங்களுக்கெல்லா மேலாயிருக்கும் சிவனுக்குள்ள மகிழ்ச்சி யுடன் பூசை செய்க!

(வி - ரை.) உபாதானகாரணம் - துணைக்காரணம். (௧௪)

இதுவுமது.

புரிக பரம சிவஞான
பூசை நசையாற் றேசிகர்க்கும்
பரம ஞான யோகர்க்கும்
பரிவு பெருகப் பதமுதனு
முருகி யிசைய வூட்டிடுக
வுவகை யவர்க்கு முறவுளத்துட்
பொருவில் பரம புத்தகத்தைப்
பொருத்தும் வலத்தைப் பொருந்துதற்கே.

(இ - ள்.) பின்னர் மேலான சிவஞானபூசையை அன்பினாற் செய்து ஒப்பிலாத சிவஞானதானஞ் செய்யும் பலன் றனக் கெய்தும் வண்ண மோதுவித்த ஆசிரியருக்கும் மேலான ஞானயோகிகளுக் கும் அன்பு பெருகாநிற்ப வுருகி வேண்டியபடி யன்ன முதலியவை களையும் அவர்க் குள்ளக்களிப்புண்டாக வமுது செய்விக்கக்கடவன்!

(வி - ரை.) பதம் - உண்டி. (௧௫)

[மேலதனை யோதுவார் முதலாயினோர், பெறும் பயனை இரண்டு செய்யுளாற் குளகமாக உணர்த்துகின்றார்.]

ஆதி யறைந்த வாகமத்திற்
சந்த மொன்றோ வதன்பாதி
யோது வார்க ளோதுவிப்பா
ருரையை விரிப்பா ருரைகேட்பார்
போத முறவே சிந்திக்கப்
புரிவார் துணிவார் பொருளினையும்
பேத மறவே யெழுதிடுவா
ரெழுது விப்பா ரிவரெல்லாம்.

(இ - ள்.) சிவனருளிச்செய்த சிவாகமத்திற் சுலோக மொன் றாயினும், அதனுட் பாதியாயினும், ஓதுவாரும், அதனை மாணக்கர்க் குப் படிப்பிப்பாரும், அதன் பொருளை விரித்துச் சொல்வாரும், விரித் ததன் பொருளுரைக்கக் கேட்பாரும், அங்ஙனம் கேட்ட பொருளை யறிவி லழுந்தச் சிந்திப்பாரும், அதற்கிதுவே பொரு ளென்று துணிவாரும், அதனைப் பிழைபடாம லெழுதுவாரும், அத

னைப் பொருள்கொடுத் தெழுதுவிப்பாரும், இங்ஙனங் கூறிய விவர்க ளனைவரும்,

(வி - ரை.) சந்தம்-சுலோகம். ஓகாரம்-எதிர்மறை. (௩௬)

கணியின் பேத மனைத்தினையு
மகிழ்ச்சி யுடனே மண்முழுதுந்
துணிவு பெறவே நால்வேதந்
துயக்க மறவே யாறங்க
மெணிய மறையோர்க் கீந்தபல
மியைந்தா ரியலின் பொருளெல்லாங்
கணிய கருத்தார் பலமதுதான்
கற்றா ராலுங் கணிப்பரிதே.

(இ - ள்.) முற்கூறிய வனைவரும் உலகிலுள்ள நவரத்தினங்க ளெல்லாவற்றையும், பூலோகமெல்லாவற்றையும் ஐயந்திரிபறவும், பொருளறிதிப்பாடு பெறவு நால்வேதமு மாறங்கமு முணர்ந்த அந்த ணர்க்கு மகிழ்ச்சியோடு கொடுத்த பலத்தைப் பெற்றவரேயாவ ராத லால் ஒருபடலத்தின் பொருளெல்லாம் உணர்ந்த வுள்ளத்தை யுடை யார் பெறும் பலத்தைச் சகல கலையுங் கற்ற பெரியோராலு மளவிடற் கரிது.

(வி - ரை.) நால்வேதமாவன:—

சூத்திரம்.

"இருக்கே எசுவே சாம மதர்வணாந்
தருக்கினைப் போக்கும் வேத நான்கே."

ஆறங்கமாவன:—

சூத்திரம்.

"சந்தஞ் சோதிடஞ் சிக்கை கற்பந்
தந்த நிருத்தம் வியாகரண மென்றிவை
எந்தை யங்கமா றெனவே யெண்ணுக."

எண்ணியவென்பது 'எணிய' என்றும், கண்ணியவென்பது 'கணிய' என்றும் விகாரப்பட்டன. (௩௭)

[மேற் *கடுத்த முதலாயின உதவுவார் பெறும்பய னுணர்த்துகின்றார்.]

பரமன் மொழியை யெழுதச்சீ
பன்ன மதனுற் சினத்தா

* கடுத்தம்-தோல் முதலியவற்றாற் சேர்த்த புத்தகம்.

னரிய கடுத்தஞ் சமைத்தளிப்பா
 ருதவு வாரும் பலகையினை
யரிய விதழி னலேகத்தை
 யளித்தா ரனைய ரவர்தாமும்
பொருவி லமலன் புரத்துறைவர்
 போகம் பலவும் புணர்ந்தாங்கே.

(இ - ள்.) பரமேசுர னருளிச்செய்த சிவாகமங்களை யெழுதுதற்கு அசினமாகிய மான்றோலினாலேனும் சீலையினாலேனும் கடுத்தத்தை யுண்டாக்கி யதற் கிரண்டுபுறமுஞ் சீபன்னமாகிய குமிழமரத்தினாற் கம்பையாகச் சேர்த்து பச்சையிட் டொட்டிக் கொடுப்பாரும், தேக்குமர முதலியவற்றாற் செய்த வட்டிகைப் பலகை கொடுப்பாரும், பெறற்கரிய பனையோலையாற் சேர்த்தவலேகத்தைக் கொடுத்தவரோ டொப்பர். இங்ஙனங் கடுத்த முதலியவற்றைக் கொடுத்தாருமொப்பிலாத சிவ னெழுந்தருளியிருக்குஞ் சிவபுரத்தி லுண்டாகிய நானு போகங்களையும் பெற்று வாழ்வர்.

(வி - ரை.) ஆல்-அசை. 'அவர் தாமும்' என்ற வும்மை யிறந்தது தழீஇயது. ஆங்கு - அசைநிலை. 'எழுத' என்பதனு லெழுத்தாணியா லெழுதப்படாமையி னெழுதுதற்பொருட்டுச் செப்புச் சட்டியிலே வேப்பம் பிசினிட்டு நீர்வார்த் தூறவைத்துக், கடுநெல்லி-தான்றி-களிப்பாக்கு-காசுக்கட்டி யிவைகளை யந்நீர்வார்த் தரைத் துலர்த்திப், பின்பதனை வேப்பங்கடனை கொண் டந்நீர் வார்த்தரைத் துலர்த்திப், பின்பு மவ்வண்ணம் வேப்பங்கடனையாற் செம்பஞ்சு நீர் வார்த்தரைத் துண்டைபண்ணி யெழுதும்பொழுது நீர்வார்த்துரைத்து நாணற்கழியைத் தூரிகைக்கோலாக்கி யெழுதுக. வட்டிகைப் பலகை - சித்திரப்பலகை. (௩அ)

[சிவஞான கோசதானஞ் செய்தார் சிவலோகத்திற் போகம்
புசித்துத் தொலைந்தவாறே பூமியின்கண் வந்து
பெறும்பய னுணர்த்துகின்றார்.]

போக முடிவின் மனுநீதி
 புரக்கும் புவிவேந் தருமாவர்
யோக மறநால் வேதமுணர்
 முந்நூன் மார்ப ரெனமுளைத்துப்
பாக முறவே மூலமலம்
 பரம னடிக்கன் பருமாவர்
மாகர் பெறுதற் கரியசிவன்
 மலர்த்தா ளிணையை மருவுதற்கே.

(இ - ள்.) சிவஞான கோசதானஞ் செய்தார், சிவபுரத்திலிரு ந்து போகங்களைப் புசித்துத் தொலைந்துள்ளளவிற் பூமியின்கண் மனுநூன் முறையே காக்கு மரையனும் பிறப்பர். பின்னர்த் தேவர்களாலும் பெறற்கரிய பரமேசுரனுடைய தாமரைமலர்போன்ற விரண்டு சீபாதங்களை யடைதற்பொருட் டையந்திரிபின்றி நான்கு வேதங்களையு மாராயு மந்தணரெனத் தோன்றி யாணவமல பரிபாகம் பிறக்க நாடோறுஞ் சிவனது சீபாதத்தை வணக்கஞ் செய்தற்கு நேயமுடையவருமாவர்.

(வி - ரை.) உம்மை-எண். (௩௧)

[முற்கூறிய சிவஞானகோச மெழுந்தருளப் பண்ணுதற் காலய முதலாயின வுண்டாக்கு முறைமை யுணர்த்துகின்றார்.]

கனக மதனுற் பெட்டகத்தைக்
கற்போ டமைக்க கலக்கமணி
புனைக வெள்ளி செம்பாலும்
புரிக வேறும் பொருட்கிசைய
வனைக ஞான வாலய நூல்
வழியாற் சிலையா தியின் மகிழ்வாற்
றனையொப் பரிய வரியரிக்கும்
பீட மதனுட் சமைக்கவரோ.

(இ - ள்.) அந்த ஞானகோச மெழுந்தருளப் பண்ணுதற்குச் சிலைமுதலியவற்றா லாலயத்தை விதிவழியுள்ள மகிழ்வோடுசெய் தந்த வாலயத்து நடுவே தனக்கு நிகரில்லாத சிங்கங்கள் தாங்கு மொரு பீடத்தினைச் செய்திருத்தி யதன்மேற் புத்தக மெழுந்தரு ளப்பண்ணும் பெட்டகத்தைப் பொன்னினாற் செய்து நவரத்னமிட் டிழைத்தாதல், வெள்ளி - செம்பு - மற்றுமுள்ள தாதுக்களாலாதல், தத்தம் செல்வத்துக்கேற்ப விதிவழி செய்க.

(வி - ரை.) அரோ-அசை. விதிவழியாவது-மூன்றுமுழமுதன் முப்பத்து மூன்றுமுழ மீறாக வித்தியா மண்டபத்தின் அகலமும் நீள மைம்பதுமுழ மீறாகவுந் தனக்கும் பொருந்தக் கொண்டதனைப் பிராசாதம் (கோயில்) ஆதல், மண்டபமாதல் செய்விக்க என்பது. 'சிலையாதி' என்பதனாற் செங்கன் மாமுதலியனவு மமையும். சிங்கா தன மேழங்குலந்தொடுத் திவ்விரண் டங்குலமாக வேற்றி யேற்றி முப்பத்திரண் டங்குலமீறாக ஆயாமம் (உயரம்) பொருந்தக்கொண்டு சதுரசிரமாய் தாசிரமாதற் பொருத்தம் வாய்க்க அவ்விதிவழி செய்க. பெட்டகஞ் சமைத்தற்கு மா, பலா, மகிழ், அத்தி, முருக்கு, இவற்

றிஞ வியன்ற தொன்றை மூவிரற் கனப்பலகையாக்கி மூப்பத்தா றங்குல வகலமு மதின் மும்மடங்கு நீளமு மகலத்துக்கொத்த வுயா முங்கொண்டு பெட்டியாகப்பண்ணி யதிலொரு புறத்திலே கதவுந் தாழு மிட்டிசைகளி லிருப்புப்பாளங் கட்டிப் பன்னிரண்டங்குல வுயரத்தில் நாலுகாலமைத்துப் பெட்டியிற் கீழே தைப்பதென்க. நூல்வழியென்பது நடுநிலேத்திவகமாக்கி முற்றுங் கூட்டுக. (௬0)

இதுவுமது.

அணியார் கனகப் பெட்டகத்தை
யரியா தனத்தின் மிசையமைக்க
பணியா பரணன் பகர்மொழியைப்
பதிக்க வதனுட் பாங்குறவே
தணியாக் காத லுடன்பூசை
சமைக்க விதியிற் றவறுதே
யுணவு முணர்ந்த வுயர்ந்தோர்க்கு
முவகை யுறவே யுதவுகவே.

(இ - ள்.) முன்னர்க் கூறிய சிங்காதனத்தின்மே லழகுநிறை ந்த பொன் முதலியவற்ருற் செய்யப்பட்ட பெட்டகத்தினைவைத் ததனுள்ளே பாம்பினைப் பூணக வணிந்த பரமேசுர னருளிச்செய்த சிவாகமத் திருமுறையை யெழில்பெற வெழுந்தருளப் பண்ணி யமையா வன்புடன் விதிமுறை தப்பாமற் பூசைசெய்து கற்றுணர் ந்த பெரியோர்க்கு முள்ள மகிழ்ச்சியோ டுண்டியைக் கொடுக்க!

(வி-ரை.) 'உயர்ந்தோர்க்கும்' என்னு மும்மையா லிழிந்தோர் க்கு மென்பது மமையும். அமைக்க, பதிக்க என்பன முற்றெச்சம்.

இதுவுமது.

என்று மியற்றி யிடயாக
மீக நிதியு மிருநிலனும்
பொன்று முடல மெனவுணர்ந்து
பொருவி லரிய பொருடன்னை
யொன்றக் கருது முளமுடையா
ருய்ய வைய மொப்பிலுரை
நின்று நிலைமை யுடையோர்பா
னெறியை யறிய நிகழ்த்திடவே.

(இ - ள்.) யாக்கை நிலையுத லின்மையா லழியுமென்றறிந் திந்த யாக்கை யிருக்கையிற்றனே யொப்பின்றி யொருவரானும் பெறற்கரிய சிவமாகிய பொருளை யடையக்கருது முள்ளமுடையோ ருலகமெல்லாம் பிழைக்கும்பொருட் டந்த ஞானவாலயத்தி லிருக்

கும் சிவஞான கோசத்துக்கென்றும் பூசை நடத்துதற்குஞ், சிவாக மங்களையெடுத் ததனிற் கூறு முத்திமார்க்கங்களை யனுட்டித்தற்கு நிகரில்லாத வசனத்தின் வழி நின்று நிலைபெறுந்தன்மை யுடையோர்பாற் றனராசியும் பூமியுங் கொடுக்க!

(வி - ரை.) ஈண்டுக் 'கருது முளமுடையார்' என்பதனை யெழுவாயாக்கிப் பொருளுரைக்க. யாகமெனினும் பூசையெனினு மொக்கும். (௬௨)

[சிவாகமங்களினது சீர்ணோத்தாரண விதி யுணர்த்துகின்றார்.]

பழகிப் பழுது பலவிரவிற் பரமர் திருவாய் மொழியிதழும்
வழுவற் றெழுத வல்லாரால் வரைவித் தெழுதி மையிணையு
மழகுற் றதனை யருச்சிக்க வர்சான் பழைய வதுதன்னை
யழலிற் புரிக வாகுதியை யானெய் யுடனே யமலனுக்கே.

(இ - ள்.) ஆசிரியர் தம்பிரானார் திருவாக்கினால் அருளிச் செய்த சிவாகமத் திருமுறை பழகி ஏடுகள் பலவு முரித னெரித லெழுத்துத் தெரியாமை முதலிய குற்றங்கள் பொருந்திற் பிழையற எழுத வல்லாரால் எழுதுவித்து மைக்காப்புஞ் சாத்தி அழகமைந்த வத்திருமுறையை அருச்சனை செய்யக்கடவன்! பின்பு பழகிப் போன திருமுறையை நின்மலனாகிய சிவனுக்குப் பசுவினெய்யிற் றோய்த்துச் சிவாக்கினியி லோமஞ் செய்க!

(வி - ரை.) மையெழுதல்-இடுதற் பொருண் மேலது. (௬௩)

[மேலதற்கு ஞானவாலய முதலாக விங்ஙனங் கூறியவற்றைச் செய்தார் பெறும்பயன் உணர்த்துகின்றார்.]

இந்த விதியி லியற்றினர்கண்
மூவேழ் சுற்றத் தொடுமிறைவ
னந்த வுலக மடைந்தட்ட
குணத்தொ டமர்வ ரவ்விடத்துஞ்
சிந்தைக் கரிய சிவனடியைத்
தினைத்தே யிருப்பர் சிவமாவர்
வந்து பிறப்பர் போகத்தின்
மகிழ்ச்சி யாங்கே வைத்தாரே.

(இ - ள்.) இங்ஙனங் கூறியவாறு சிவஞானத்துக் காலய முதலியவற்றைச் செய்தார் இருபத்தொரு வர்க்கத்தவரோடு சிவ னெழுந்தருளிய சிவலோகத்தை அடைந்து முழுதுணர் ஞானமுத லிய வெண்குணங்களோடுங் கூடியிருப்பர். அவ்விடத்துஞ் சிறந்த

போகங்களி லழுந்தாமே மனத்துக்கெட்டாத சிவனது திருவடியி னிட்டைபுரிந் திருப்பார். மகாசங்காரகாலத்தே பரமமான முத்தியை யடைவர். அஃதன்றி யாண்டுச் சிறந்த போகங்களில் விருப்பத்தை யுற்றே, மீண்டும் பூமியின்கண் வந்து பிறப்பர். (சுச)

[அங்ஙனம் பூமியின்கண் வந்து பிறந்தா ரடையும் பல மீதென் றுணர்த்துகின்றார்.]

போக முடிவிற் புவிதன்னிற்
பிறந்து புரந்து புவியெல்லா
மோக மறவே மறைநான்கு
முறையி னுணர்ந்து முனிந்துடல
மேக னிறைவ னிணையடியை
யிரண்டற் றெளிரு மெழின்ஞான
யோக மடைந்து சிவமாவ ரூன
மனைத்து மொழிந்திடவே.

(இ - ள்.) சிவலோகத்தி லிருக்குஞான்று போகத்தை விரும் பினார், அப்போகம் புசித்துத் தொலைந்தவளவிற் பூமியின்க ணரைய ராய்த் தோன்றி யுலகமுழுதுங் காக்குந் தலைமையெய்திப் பின்னர் ஐயந்திரிபற நாலுவேதங்களையும் உள்ளபடியே யாராய்ந்து சரீரமும் பொருளன்றென்று துறந்து தனிமுதலாய் நிற்கும் பரமேசுரன் திருவடியிணையை வேறறவிளங்கு மழகினையுடைய ஞானயோகத் தைப் பொருந்தி மல மாயா கன்மங்களெல்லாங் கெடும்படி சிவத் தோடு கலப்பர்.

(வி-ரை.) 'ஞானம்' என்பது சிவஞானம். அதனைக் கலத்தல், ஞானயோகம். 'இரண்டற் றெளிருமெழில்' என்பதனை ஞானத்துக் கடையாக்கிப் பொருளுரைக்க. திருவடியே ஞானமாதலாற் றிரு வடியை 'இரண்டற்றெளிரு ஞானம்' என்றார். 'உடலும்' என்ற உம்மையாற்செல்வமு முனிந்தெனக் கொள்க. (சுரு)

[இங்ஙனம் ஞானவாலயஞ் செய்யும் விதி கூறி மேற் சிவாச்சிரமஞ் செய்யும் விதியு முணர்த்துகின்றார்.]

அறைந்தா மமல னருண்மொழியை
யறையு முறையு மதன்விதமுஞ்
சிறந்த வெல்லைச் சிவாச்சிரமஞ்
செய்யு முறையுஞ் செப்பிடுவா
நிறைந்த புகழு நிகராத
போக விதமு நிலவாழ்வை

மறந்து பிறவா வரந்தானுங்
கற்பார் தமக்கும் வாய்ப்பதற்கே.

(இ - ள்.) நின்மலனாகிய சிவனருளிச்செய்த சிவாகமத்தை மாணாக்கர்க்கு உபதேசிக்கு மியல்பினையுடைய சிவஞான தானத்தையு மதன்விதத்தையும் அந்தவியல்லைக் கற்போர்க்கு உலகமெல்லா நிறைந்து நிற்கும் கீர்த்தியும் ஒப்பில்லாத போகபேதங்களும் பூமியில் வாழுஞ்செயலை அவமதித்து நினையா தொழிதலைப்பெற்றொரு ஞான்றும் பிறவாத முத்தியும் உண்டாகும் பொருட்டுச் சொன்னோம். மேற் சிறந்த வெல்லையினையுடைய சிவாச்சிரமஞ் செய்யும் விதியையும் உனக்குச் சொல்வோம்.

(வி - ரை.) இதனு ளிரண் டெழுவாயும் இரண்டு பயனிலையுங் கூட்டுக. 'கற்பார்தமக்கும்' என்ற வும்மையாற் கேட்பார்க்குமெனக் கொள்ளக் கிடந்தது. (கசு)

[மேலதனை விரித்துணர்த்துகின்றார்.]

சிறக்கச் செய்க திருவெல்லை
செறியப் புடையே திருமதிலும்
புறத்தே யெழிலார் பொழிலதனைப்
புரிசை யதனைப் புடையடைய
நிறைத்த மலர்ப்பூம் பொழிற்புறத்து
நிறைநீர்த் தடங்க ளதன்புடையே
பிறக்க லனைய கோபுரத்தைப்
பிரியாய் புரிசை பெறுத்துகவே.

(இ - ள்.) அழகிய வெல்லையின்க ணடுவே சிவாச்சிரமஞ் செய்தற் கெல்லையை நியமித் ததனைச்சூழ ஐந்துமுழ வுயரத்தில் ஒரு திருமதிலையும், அதனைச் சூழப் புறத்தெல்லையிலே அழகு நிறைந்த பூந்தோப்பினையும், அதன்புறத்திலே நீரானிறைந்த பொய்கைகளையும், அதைச்சூழ மலைபோன்ற கோபுரத்தைவிட்டு நீங்காத திருமதிலையுஞ் சிறக்கும்படி செய்க!

(வி - ரை.) பிறங்கல் வலிந்து நின்றது. (கஎ)

இதுவுமது.

உரைத்த புரிசை யுண்ணலா
மொப்பி லமல னுரைத்தவுரை
தரித்தும் விரித்துந் தக்கார்க்குத்
தாழா நிலைமை தலைமையவ

ரிருக்கும் கழக மண்டபமு
மியற்றி யிடுக வெழினுறவே
யரிக்கு மரிக்கு மயன்றனக்கு
மரியா னடியே யடைவாரே.

(இ - ள்.) மாலும், பிறந்திறக்கும் பிரமனும் தேடுதற்கரிய சிவ ஞா சீபாதத்தை அடையக் கருதுவார் முன்னர்க் கூறிய முதலாவரணத்துக்கு நடுவாக நியமித்த வெல்லையிலே திருமடத்தினை மூன்று நிலமாக வெடுத் ததன்மேலே நிகரில்லாத நின்மலனாகிய சிவனருளிச்செய்த சிவாகமங்களைத் தம்முள்ளத்தின்கண் தாரணை (தரித்தல்) பண்ணியு மவற்றின் பொருளைத் தக்கார்க்கு விரித்துக் கூறியு மேலாய நிலைமையையுடைய பெரியோர் எழுந்தருளி யிருக்குங் கல்வி பயில்கின்ற கழக மண்டபத்தையும் அழகுபெறச் செய்க!

(வி-ரை.) 'கழகமண்டபமும்' என்னு மும்மையால், முதனிலமிரண்டாநில மூன்று நிலங்களிலே குகைகள், செபம் - தியானம் செய்யுந் தலங்களுஞ் செய்கவெனக் கொள்க. (சுஅ)

இதுவுமது

அதற்கு மீதாம் பஞ்சமத்தை
யமைக்க வமலற் காலயத்தைக்
குதர்க்க பேத மனைத்தினையுங்
குறைத்தே குறையா மதிகொடுக்கும்
பதத்தைப் பகர்ந்த பரமனுக்குப்
பாச வினைக்கும் பகைவனுக்கு
நதத்தைக் கடந்த நம்பனுக்கு
நாடற் கரிய நாதனுக்கே.

(இ - ள்.) முன்னர்க் கூறிய கல்வி பயில்கின்ற களத்துக்கு மேலான ஐந்தாவது நிலத்தினை யான்மாக்கள் பாசவினைக்குப் பகைவனுமாய் நாதத்தத்துவங் கடந்தவனுமா யாவராலுங் காணொணாத கர்த்தாவுமாய்க் கல்லாலின்கீழ் எழுந்தருளியிருந்து தேவர் இருடிகளுக்கெல்லாம் குதர்க்க முதலிய குற்றங்களை நீக்கி நிறைந்த ஞானத்தை யுதவும் வேதாகமங்களை உபதேசித்த தக்ஷிணாமூர்த்தமாகிய சிவனுக் காலயமாகச் செய்க!

(வி - ரை.) 'பாசவினைக்கும்' என்கிற வும்மையால் ஆணவத் துக்கு மென்பதூஉந் தழீஇ நின்றது. நாதம் குறுகும்வழி குறுகியது.

[இங்ஙனங் கூறிய சிவாச்சிரமத்தைச் சூழ * அபிமுகங்களாகப் பாகசாலை முதலிய எட்டினையும் † விலோமமாக் கட்டுமுறை உணர்த்துகின்றார்.]

அங்கி முதற்றென் றிசையந்தத்
தடுகை மனைசத் திரசாலை
பொங்கு தழலைப் புரிசாலை
பூணும் பணியும் பேணுமிடஞ்
சங்கை தணிக்குங் கொட்டாரஞ்
சமைக்க குடநீர் சமித்துறையு
ளிங்கு வேண்டும் பொருளதிதி
யேவ லோரு மெய்திடமும்.

(இ - ள்.) அக்கினி திசைமுதற் றென்றிசை யீறாகக்கொண்டு அக்கினி திசையிலே திருமடைப்பள்ளியும், கிழக்கே சத்திரசாலையும், ஈசானதிசையிலே சிவபூசையு மக்கினி காரியமுஞ் செய்யும் யாகசாலையும், வடக்கே திருவாபரண முதலியன சேமிக்கும் பொற்பண்டாரமும், வாயு திசையிலே எண்ணைக் கடந்த பெரிய நெற்சேருக்கு மேற்கே திருமஞ்சனம் வைக்கு மறையுளும், நிருதி திசையிலே சமித்துத் தர்ப்பைப்புல்லு விறகு ஆயுதங்கள் வைக்கு முறையுளும், தெற்கில் இம்மடத்துக்கு வேண்டு மாதனம்-கட்டில்-பாதுகை முதலியவைக ளிருத்தற் கிடமும், அதிதிகள்-பரிசாரக ரிருத்தற் கிடமும், செய்க!

(வி - ரை.) 'உறையுள்' என்பதனைக் குடநீரென்பதற்கு மிடமெனக் கூட்டுக. 'எய்திடம்' என்பதனை வேண்டும் பொருள் வைத்தற் கிடமுமெனக் கூட்டுக. உம்மை யெண்ணின்கண் வந்தது. 'சமைக்க' என்னும் வியங்கோள் வினைமுற்று, நடுநிலைத் தீபமா யனைத்திற்கும் பயனிலையாயிற்று. (எ௦)

[இவ்வண்ண மியற்றிய மடத்தின்கண் தக்ஷிணாமூர்த்தத்தைத் தாபிக்குந் திற முணர்த்துகின்றார்.]

விதிநான் முறையே யதிவாத
வினையு மற்றை வினையனைத்தும்
பதியாம் பரமன் றனக்கிசையப்
பண்ணி யிடுக பரிவுடனே

* அபிமுகம் - நேர்முகம்.

† விலோமம் - முறைபிறழ்தல், அஃதாவது அப்பிரதக்ஷணம்.

நிதியுங் கொடுக்க நிலனுடனே
　　நிகழ வென்று நிறைபூசை
துதியுஞ் செய்க தோன்றாத
　　துணையைப் பணிக துகளறவே.

(இ - ள்.) தக்ஷிணாமூர்த்தத்தைச் சிலை முதலியவற்றாற் றிருமேனிகொண்டு பதியாகிய வந்தத் தக்ஷிணாமூர்த்தித் தம்பிரானார்க்கேற்கும்படி சிவாகமங்களில் விதித்தவண்ணம் திவாதகன்மமுமற்றுமுள்ள பிரதிட்டா கன்மங்களும் பத்தியினாற் செய்து ஐந்தாகிலத்திற் ரூபித்து எந்தக்காலத்திலு மகாபூசை நடக்கும்வண்ணம் விளைநிலங்களும், பொன்முதலிய நிதிகளும் கொடுத்துத் தங்களிடத்துண்டாகிய ஆணவமுதலிய குற்றமறும்படி யாவர்க்குந் தோன்றாவெவரவ ருள்ளத்து ணிற்குந் துணைவனைத் தோத்திரமுஞ் செய்து வணங்க!

(வி - ரை.) 'இசைய' என்று சிறப்பித்ததனாற் சிலாபேதமல்லாதவைகளுக்குக் கண்ணாடியி லதிவாதனஞ் செய்கவென்றுணர்க. (எக)

[அந்த வாசிரியர்க்கும் மற்றுமுள்ளார்க்கு முபகரிக்குந் திறம் உணர்த்துகின்றார்.]

குரவன் றனக்கு நிதிமுதலுங்
　　கொடுத்துக் குன்றாக் குணமொழுக்கம்
விரத முடைய வேதியர்க்கும்
　　விழைவாற் பதமு மிசைவிக்க
பரம னடியா ரவர்தமக்கும்
　　பங்கு காலர் பாலருடல்
விரவு நோயர் விழியிழந்தார்
　　விருத்தர் தமக்கும் விருப்புறவே.

(இ - ள்.) பிரதிட்டை செய்தபலந் தனக்கெய்தும்வண்ணமவ்வாசிரியர்க்குந் தனம், அகில் முதலியவை கொடுத்து, ஒருகாலுங் குறைவுபடாத குண மொழுக்கம் விரத மிவைகளையுடைய பிராமணர்க்கும், சிவனடியாரான மாகேசுரர்க்கும், முடவர் - சிறுபிள்ளைகள் - சரீரத்திலே நோயையுடையவர்கள்-குருடர்-விருத்தத்தன்மையோர் இவர்க்கு மன்னம் விரும்பும்படி யாதாவினாலே புசிப்பிக்க! ()

[சிவபுராஞ் செய்தார் பெறும்பய னுணர்த்துகின்றார்.]

செய்தார் சிறக்கச் சிவபுரத்தைச்
　　சிற்ப வுரையிற் றிகழ்விதியா

செய்தார் பிறப்பிற் சிவலோக
மெய்திப் போக மினிதருந்தி
வெய்தாம் வினையு மாணவமும்
வீயா மாயை யொடும்விடவே
மெய்யாம் பரம வித்தையுற
விமலன் கமலம் விரவுவரே.

(இ - ள்.) பூமியின்கண் விளங்கும் சிற்ப சாத்திரத்தின் விதியினாற் சிவபுரத்தைச் சிறக்கும்வண்ணஞ் செய்தார் மீண்டும் பூமியின்கண் பிறவாமற் சிவலோகத்தை யடைந் தினிதாய போகங் களை யருந்திப் பின் கெடாத மாயையோடு கொடிதாய கன்மமு மாணவமும் விட்டு நீங்க மேலாகிய சத்தியஞான முண்டாக நின்மல னாகிய சிவனது சீபாத தாமரையை யடைவர்.

(வி - ரை.) இச்செய்யுளிற் சிவாச்சிரமத்தைச் சிவபுரமெனக் கூறிய தென்னெனிற், சிவாச்சிரமமும்-சிவதலமும்-மடமும்-திருக் கோயிலு மொக்குமென்பதனாலெனக் கொள்க. ஆகலின், மேல் வருஞ் "சிவனற்புரி" என்னுஞ் செய்யுண்முதலிய செய்யுளெல் லாஞ் சிவாச்சிரமத்தோடு சிவத்தலங்களையுந் தழுவக் கூறுகின்று ளவற்றினையு மாண்டாண்டு பிரித்துப் பயன் கொள்க. (எஉ)

[சிவபுரஞ் செய்த தச்சன் முதலாயினோராகிய வுயர்திணையு மதற் குபகாரணமாகிய வஃறிணையு மடையும் பல முணர்த்துகின்றார்.]

சிவனற் புரியைச் சென்றடைவர்
சிந்தை மகிழச் சிவபுரிசெய்
தவதி முதலோர் தருமுதலுஞ்
சாரும் பூணி யொடுமற்றும்
புவலோ கத்தின் மிசைப்புகுவர்
பொருள்கொண் டேவல் புரிந்தாருங்
கவரா வொருமைக் கருத்தினொடு
கணிகை யவருங் களிப்புறவே.

(இ - ள்.) கண்டோருள்ள மகிழும்வண்ணஞ் சிவபுரியைச் செய்த சிற்பி முதலானோரும், சிவபுரி செய்தற் குபகாரணமான மரஞ் சிறுசெடி முதலியனவும், செங்கல்-கல்-முதலியன பூட்டிவருதற் கமைந்த எருது கடாவினுடன் மற்று முபயோகமானவைகளு நல்ல சிவபுரத்தைச் சென்று பொருந்துவர். மனம் வேறுபடா தேவற் றொழில் செய்யவுஞ் செய்விக்கவும் பெற்றோரென்னு மொருமைப்

பாகின்ன கருத்துண்டாமேயாயிற் கூலிவாங்கி யேவல் செய்தவர்களு முருத்திரகணிகைமார்களு மகிழ்ச்சி யமையப் பூலோகத்துக்கு மேலாகிய புவலோகத்திற் சென்று போகம் புசித்திருப்பர்.

(வி - ரை.) 'தவதிமுதலோர்' என்பதனால், எற்று நூல் பிடிப்பார் முதலானோரு மமைக. 'தருமுதலும்' என்பதனாற் சிலையு மெனக் கொள்ளக்கிடந்தது. 'பூணியொடு மற்றும்' என்பதனால் ஒட்டக முதலியவுங் கொள்க. 'கணிகையரும்' என்ற வும்மையாற் றேவதாசிகளு மென்ப தமைக. உருத்திரகணிகை முதல் குறைந்து நின்றது. (எச)

[அச் சிவபுரத்துட் சனனமுதலிய வடைந்தோர்
பெறும் பய னுணர்த்துகின்றார்.]

சிறந்து செறிவர் சிவபுரத்தைத்
தெரிதற் கரிய சிவனகருட்
பிறந்தார் பிறழா நிலைமையினைப்
பிரியா தொருமைப் பெருமையுட—
னுறைந்தா ருறையு மவர்க்கனமு
முதவு வார்க ளுறையுள்ளு
மிறந்தா ரிறக்க வெண்ணுநர்க
ளென்னு மிவர்க ளெல்லோரும்.

(இ-ள்.) அளவைகளா னளவிடற்கரிய சிவனகருட் பிறந்தவரும், நின்ற நிலை தவறாத வொருமைப்பாட்டின் பெருமையுட னுறைந்தாரும், அச்சிவபுரத்தி லிருப்போர்க் கன்னமு மில்லமுங் கொடுத்தாரும், அத்தலத்தின் மரித்தாரும், அத்தலத்தி லுடல் விடவேண்டுமென்று கருதினாரும், ஆகக் கூறிய விவரெல்லாரும் யாவருக்கு மேலோராந் தலைமை யெய்திச் சிவலோகத்தை யடைவர். (எரு)

[மேலதனைப் பணியுமவர் முதலியோர் பெறும் பயன்
உணர்த்துகின்றார்.]

பணிவார் பரவிப் பரமேசன்
பதிக டம்மைப் பணிதற்கே
துணிவார் வழியிற் றுணைச்செல்வார்
தொடர்ந்து கூடித் தொழுவாரென்
றெணியா ரிவர்க ளெல்லோரு
மிறைதன் புரத்தி லிருப்பதற்கே
யணியா ரவல வினையனைத்து
மறுப்பார் சமனைக் கறுப்பாரே.

(இ - ள்.) யார்க்கு மேலாய சிவ னெழுந்தருளியிருக்குந் திருப் பதிகளைத் துதித்து வணங்குபவர், வணங்குதற்கு நியமித்தவர், வணங் கச் செல்வோர்க்கு வழியின்கட் டுணையாகச் செல்லுபவர், உடன் சென்றவருடன் கூடிப் பணியுமவ ரென்றெண்ணப்பட்டா ரிவரெல் லாரும் சிவலோகத்திலே யிருந்து வாழ்வதற் குரியார். அவர்களே தீவினை முழுதும் போக்குவர். அவர்களே தங்கள்பால் வரு மியமனைக் கோபிப்பவர். (எசு)

[அச் சிவத்தலங்களிற் சென்று சிவபூசை முதலாயின செய்தார்
பெறும்பயனு மதிலிருக்குந் தபோதனர்கள் சரீரத்திற்
பிணிகளை மருந்து முதலியவற்று,லொழிக்குமவர்
பெறும்பயனு முணர்த்துகின்றார்.]

சிவனைப் பூசை செய்விப்பார்
சிவனற் புரியைச் சென்றடைவ
ரவனைப் பருவத் தறிவிக்கு
மாசா ரியனை யன்பரையுந்
தவரைத் தமிக்கும் பிணிதனையுந்
தணிப்பார் தாமுந் தனித்தேமே
யெவரிப் பிணியைத் தணிப்பாரென்
றிளைப்பா ரிளைப்புக் கிளைப்பாரும்.

(இ-ள்.) சிவனையும்-அவரவர் பக்குவத்துக்கீடா யந்தச் சிவனை யறிவிக்கு மாசிரியனையும் - சாதகர் முதலிய அன்பரையும் பூசை செய்விப்பாரும், தபோதனரை வருத்தும் பிணிகளை மருந்து முதலிய வற்றா னீக்குபவரும், சிவத்தலங்களை வணங்குநிமித்தமா யவ்விடத் தில் நோயாய்த் தனித்துவிட்டோமே யிதனை யெவரழிப்பரென்று வருந்து மநாதரராயுள்ளார் வருத்தத்தைக் கண்டு துக்கிப்பவரும், சிவ லோகத்தைச் சென்று பொருந்துவர்.

(வி - ரை.) 'பிணிதனையும்' என்ற வும்மையாற் பசி குளிர் தணிப்பாரு மென்பதூஉம் கொள்க. (எஎ)

[மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றார்.]

ஆக்கை யாலோ தனத்தாலு
மருநோ யதனை யருந்தவர்க்குப்
போக்கு விப்பா ரவர்தாகும்
பொருந்திப் போகஞ் சிவபுரியு

ணீக்கிப் பிறந்து நிலமிசையே
நில்லா துடல மெனநினைந்து
நோக்கற் கரிய பரமசிவ
னொன்று ளடைவர் நோயறவே.

(இ-ள்.) அரிய தபோதனர்க்கு எய்திய நீங்குதற்கரிய நோயைத் தம் காயத்தொழில்களினாலு மன்னத்தினாலுந் தாமேனு மொருவரைக் கொண்டேனும் போக்குவிப்பாரும், சிவலோகத்திற் சென்றிருந்து போகங்களைத் துய்த்து அது தொலைந்தவாறே பூமியின்கண் வந்து பிறந்து யாக்கை நிலையுதலின்மை யென்றுணர்ந்து தம்மை யநாதியே தொடர்ந்துவரு மாணவமுதலிய பிணிக ணீங்கும்வண்ணம் யாவரானு நாடுதற்கரிய பரமசிவனது வலியினையுடைய சீபாதங்களை யடைவர்.

(வி - ரை.) 'ஓதனத்தாலும்' என்ற வும்மையால், அவுடதத்தினாலு மென்பதூஉ மமைக. (எஅ)

கலிவிருத்தம்

என்றுசிவ ஞானவித் தானமுமி சைத்தான்
குன்றவர் மடக்கொடி தனக்கருள் கொடுத்தான
வென்றுபுல னைந்தினையும் வெய்யவினை நைய
நின்றமுனி யன்றுணர நிர்க்குண னினைந்தே.

(இ - ள்.) வெளி. (எகூ)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆருயிர் வேரென வாயவனே!
யாரண மோதிய வாயவனே!
சாரணர் நாடிய சற்பொருளே!
தனையொழிந் தின்மைய சற்பொருளே!
பூரண னாகிப் பொருவிலியே!
புரமவை மாளப் பொருவிலியே!
யாரு மெனுந விடத்தினனே!
யருந்திய வால விடத்தினனே.

(இ - ள்.) எவ்வுயிர்க்கு மூலமாயிருந்தவனே! ஈசானமொழிந்த தற்புருட முதலிய நான்கு திருமுகத்தானு நான்கு வேதங்களையு மோதினவனே! திகம்பரரால் தியானஞ் செய்யப்படும் நல்ல மூர்த்தியே! தானேயன்றி வேறின்றி விளங்கு முண்மைப் பொருளே! எல்லா ஆன்மாக்களிடத்தும் பரிபூரணமா யொப்பில்லா திருப்பவனே! தாரு

மூகத்தின்கண் ணுள்ள வாக்கினாலும், அழுக்கினையுடைய காயத்தினாலு முண்டாகிய பாவங்களெல்லா மொழியும்வண்ண மிப்போதுனக்கு மகா பாதகரைச் சொல்லுகின்றே மதனை விரைவிற் புத்திபண்ணிக் கேட்பாயாக!

(வி - ரை.) 'கேட்போர்க்கும்' என்ற வும்மை படிப்பவர் முதலியோர்க்கு மெனவுங் கொள்ளக்கிடந்தது. (உக)

[பஞ்சபாதக ரிவரென்ப துணர்த்துகின்றார்.]

கொன்றான் மறையோன் றனைமதுவைக்
குடித்த மறையோன் சோரத்தாற்
சென்றே பிறர்செம் பொனைக்கொண்டான்
றினைத்தான் குரவன் றேவிதனை
யின்று னிவரோ டெனவைவர்
மாபா தகரே நிரயத்துட்
சென்றார் விரையச் செல்லலுற
மீளு நாளுஞ் சிலவலவே.

(இ - ள்.) பிராமணனை வதைத்தவனும், மதுபானம் பண்ணின பிராமணனும், பிறருடைய திரவியத்தைக் களவினாற் சென்றெடுத்துக்கொண்டவனும், ஆசிரியன் மனைவியைப் புணர்ந்தவனும், இங்ஙனங் கூறிய நால்வரோ டிணங்கித் திரிபவனுமாகிய விவர்கள் ஐவரு மகா பாதகர்களாகும். அவர்களே வருத்தமுறும்படி விரைவிலே நரகத்திற்சென் றடைந்தவர்க ளாவார்கள். அதினின்று கரையேறு நாளுஞ் சிலவல்ல. நெடுங்காலஞ் செல்லும். (உச)

[மேன் மகாபாதக துல்லியரை யுணர்த்துகின்றார்.]

அறைந்தா மகபா தகமதனுக்
கணிய தணிய பாதகமுஞ்
சிறந்த பொதியிற் சிவமுனிவ
தெரிப்பாம் விரையத் தெளிந்திடுக
மறந்து புரிந்த வல்வினையு
மறவா தியன்ற வல்வினையு
மிறந்து பிறக்க வினியவினை
யிதனை யுணர விசைந்தார்க்கே.

(இ - ள்.) மேலாகிய பொதியமலையிலிருக்கு நன்மை பொருந்திய அகத்தியமுனிவனே! மகா பாதகரைச் சொன்னோம். மேலிதற்கடுத்த துல்லிய பாவவகைகளையுஞ் சொல்லுகின்றோம். இதனை

யறிய விரும்பினவர்க் கறிந்து செய்த தீவினையு மறியாது செய்த தீவினையுங் கெட்டு நல்வினை யுண்டாம்படி நீ யிதனை விரைவிலே கேட்டுத் தெளியக்கடவை! (உ௩)

[மகா பாதக துல்லியருட் பிரமகத்தி பண்ணினவருக் கொத்தாரை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

வெறுப்பான் மிகுந்த கோபத்தால்
வேட்கை மிகையால் வெருட்சியினால்
ஒறுப்பா முரையந் தணர்க்குரைப்பா
னொப்பான் பிரமக் கொலையர்க்கே
யறப்பே ரறிவே யுளமெனவே
தன்னை மதிக்கு மறிவிலியுஞ்
சிறப்பாங் குரவ னொடுவிருத்தஞ்
செய்யு மறியாச் சிறுவனுமே.

(இ - ள்.) வேண்டாமையாலாதல் - மிக்க கோபத்தாலாதல் - திரவிய முதலிய ஆசை மிகுதியாலாதல் - அச்சத்தாலாதல் - பிராமணரைப் பொறுத்தற்கரிய கொடுஞ் சொற்களைச் சொல்லுவோனும், மிகவும் பேரறிவுடையோன் யானென்று தன்னை உயர்வாகவெண்ணும் அறிவில்லாதவனும், மேலான ஆசிரியரோடு விரோதம் பண்ணிக்கொள்ளும் அறிவில்லாத அற்பனும், பிரமகத்தி பண்ணினவனுக்கு நிகராவார்கள். (உ௪)

உண்ண வறன்மேற் செலுமாக்க
ளினையுந் தடுத்தே யொறுப்பானு
நண்ணி யிரப்பத் தருவலென
நயந்து கூறி யவர்வரவி
லெண்ண மிழந்து தரும்பொருளு
மிலமே யெனவு மிசைப்பானுந்
தண்மை யுரையைத் தகுதியரைச்
சாற்று மவனுஞ் சபைநடுவே.

(இ - ள்.) தண்ணீருள்ளவிடத்திற் குடிக்கச் செல்லும் பசுக்களையு மறித்துத் தண்ணீர் குடியாதவண்ணம் வாதை பண்ணுகிறவனும், தம்மிடத்தில் வந் தொருபொருளை இரந்தபோது 'தருகிறேன்' என்று நேர்ந்து முன்னே கூறிப் பின்பவர் தம் வீட்டில் வந்தபோது அக்கருத்தைவிட்டு 'உமக்குத் தரும்பொருளும்யாமுடையோமல்லம்' என்று சொல்லுகிறவனும், அறிவான் மிக்கவனைச் சபை

கடுவே இழிவான வசனங்களைச் சொல்லுகிறவனும், பிரமகத்தி பண்ணினவனுக்கு நிகராவார்கள்.

(வி - ரை.) 'ஆக்களினையும்' என்னு மும்மை மற்றுள்ள விலங்கு, புட்களையுமென விளக்க வந்தது. மேல்வருஞ் செய்யுளிற் பிரமக்கொலையர்க் கிணையென்பதை இச்செய்யுளோடுங் கூட்டி யுரைக்க. (உஎ)

அரசன் செவியிற் பிறர்குறையை
யறிவிப் பவனு மந்தணர்க்கும்
பரசு பாணி முதலோர்க்கும்
பாங்கா நிலனைப் பறிப்பானு
மொருவும் வகையை யுரைப்பானு
மதனுள் விளைவை யுண்பானும்
பிரம கொலையர்க் கிணைமதுவைப்
பீதற் கிணையும் பேசுவமே.

(இ - ள்.) பிறர் குற்றங்களை அரசன் செவியிற் சொல்லி அறிவிப்பவனும், பிராமணர்க்கும்-மழுவைக் கையிலேந்துஞ் சிவன் முதலாயுள்ள கடவுளர்க்கும்-உரிமையான பூமியைக் கட்டிக்கொள் வானும், அந்நிலம் அவர்களுக்காகாமற்போம் வண்ணஞ் சூட்சி சொல் லுகிறவனும், அந்நிலத்திற் போகங்களை எடுத்துக்கொண் டுண்பவ னும் பிரமகத்தி பண்ணினவர்க் கொப்பாவார்கள். மதுபானம் பண் ணினவர்க் கொப்பாரையு மேற் சொல்லுகின்றேம். (உஅ)

[மகா பாதகத் தல்லியருண் மதுபானம் பண்ணினவர்களுக் கொப்பாரையும், பொன்றிருடினவருக் கொப்பாரையு நான்கு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஆதி யமல னருளாள
னநக னருள்செ யாகத்தை
யோதி யதனை யொழிப்பானு
மொளிசே ரழலை யோம்பானு
மாதா வுடனும் பிதாவுடனு
மாறு யவர்சொன் மறுப்பானு
மோதா வுரையை யுரைத்தரனென்
றுற்றே நடுவா யுரைப்பானும்.

(இ - ள்.) எவற்றிற்கு முதல்வனுமாய் - நின்மலனுமாய் ஆன் மாக்களிடத்திலே இரக்கத்தை யுடையவனுமாய்ப் - பாவமில்லாதவ னுமாயிருக்கிற சிவனருளிச்செய்த ஆகமத்தை யோதி அதனை யிடை

யிலே விட்டவனும், ஒளி பொருந்திய அக்கினிகாரிய நாடோறுஞ் செய்துவந்து பின்பதனை யிழந்தவனும், மாதாபிதாவுடனும் விரோதித்து அவர் கூறிய சொற்களை மறப்பவனும், ஒருவன் சொல்லாத வார்த்தையைச் சொன்னானென்று சபையில் வந்து நடுச்சொல்வோனும், (உகூ)

தோழன் றனக்குத் துயரத்தைத்
துய்ப்பிப் பவனுந் துரிசறுக்கு
மேழை பாக னடியாரை
யிடரைச் செயவு மிசைந்தானும்
பாழென் றறநூல் பழித்தபொருள்
பண்ட மெனக்கொண் டுண்டானும்
வாழும் வனத்தா மாக்களையும்
வருத்து மவனு மயலுறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஆமாக்கள் - பசு, மான், மரை முதலிய விலங்கினங்கள். 'ஆமாக்களையும்' என்னு மும்மை பறவைகளையு மெனவிளக்கின்றது. (ங0)

ஆக்க ளணையு மார்க்கத்தி
லடவி யதனு ளரும்பதியுட்
பார்க்குண் மதித்த பட்டினத்தும்
பழுதே யழலைப் படுப்பானு
நீக்கு மதுவை யுண்டானை
நிகரே வறியார் நிதிமுதலுங்
காக்கு மனையோ கரிபரிதேர்
கவினர் மணியுங் கவர்ந்தானும்.

(இ - ள்.) பசுக்கணிற்குங் கொட்டகை வாசலினும், வனங்களினும், அரிய சிவத்தானங்களினும், பூமியுண் மதித்துச் சொல்லப்பட்ட பட்டினங்களினும், ஒருகாரணமின்றித் தீயை வைப்பவனும், இவர்களெல்லாம் அறநூலி லாகாதென்று நீக்கு மதுபானம் பண்ணினவருக்கு ஒப்பாவார்கள். வறியவராயுள்ளவருடைமை முதலாயினவுங் - காவல் பெற்றிருக்கு மனைமாத்திரமோ - யானை குதிரை தேர் இவைகளையும்-அழகுநிறைந்த ரத்தினத்தையுங் காந்து கொண்டவனும்,

(வி - ரை.) 'வறியோர் நிதிமுதலும்' என்னு மும்மையாற் பெரியோர் நிதிமுதலு மென்றதூஉங் கொள்க. (ங௧)

கதலி யெழுவாய் கரும்பிறுவாய்
கந்த மலிசந் தனமுயர்ந்த
பொதியி லகில்குங் குமமாதி
புனைய வினிய துகிலாதி
பதமே பாணி பயில்வனவும்
பற்றி னூனும் பழுதுறவே
பிதமாங் கனகந் தனைச்சோர்விற்
பெற்றாற் கிணையே பேசுங்கால்.

(இ-ள்.) வாழைமுதல் கரும்பீறா யிருக்கிற உண்டிப் பொருள்களும், மணமிக்க சந்தனமும், பொதியமலையி லோங்கி வளர்ந்த அகில் குங்கும முதலிய சுகந்தப் பொருள்களும், உடுத்தற் கினிய ஆடை முதலியனவுங், காலினுங் கையினு மணியப்பட்ட வாபரண மாயுதங்களுமான விவற்றை யுடையோர் வருந்தும்வண்ணம் அபகரித்தவனுஞ் சொல்லுமிடத்துச் சிவந்த நிறத்தையுடைய பொன்னைக் களவினு லெடுத்தவனுக்கு ஒப்பாவார்கள்.

(வி-ரை.) பீதம் 'பிதம்' எனக் குறுகும்வழி குறுகிற்று. (கஉ)

[மகா பாதக நல்லியருட் குரு மனைவியைப் புணர்ந்தவருக் கொப்பாரை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

பெறுதற் கரிய பாத்திரத்தைப்
பெற்றும் பெற்ற கன்னிகையைச்
செறிவித் திடுதல் செய்யானுஞ்
சிறந்த புதல்வன் மனைவியொடு
மறிவிற் பரிந்தா னகத்தினொடும்
பகினி யுடனு மணைந்தானும்
பொறையிற் பயந்த புதல்வியொடும்
புலைச்சி யுடனும் புணர்ந்தானும்.

(இ-ள்.) வெளி.

(வி-ரை.) அறிவிற் பரிந்தான்-தோழன், பகினி-உடன்பிறந்தான். (கூ)

அறிந்து மனையா ளவலத்தை
யவளைத் துறவா தணைவானுஞ்
சிறந்த குரவன் மனைவியொடுஞ்
செறிந்தார்க் கிணையே செப்பியவித்
திறந்தான் மகபா தகமதனிற்
சிறுமைத் ததனாற் பாதகமென்

றறைந்தா மிதனுக் கணித்தான
வுபபா தகமு மினியறைவாம்.

(இ - ள்.) தன் மனைவியானவன் பிறர் முகம் பார்க்குங் குற்றத்தைக் கண்டும் அவளைத் தள்ளிவையாமல் கூடுகிறவனும், இவர்களெல்லாரு மேலாகிய குருவின் மனைவியோடு கூடினவர்களுக்கு ஒப்பாவார்கள். இங்ஙனஞ் சொல்லிய கூறுபாடுகளெல்லா மகாபாதகத்துக்குத் துல்லியமாயிருக்கும். ஆகையினாலே யிவற்றிற்குப் பாதகமென்று பேர்கொடுத்துச் சொன்னோம். மேல் இதற்கடுத்த வுபபாதகத்தையுஞ் சொல்லுகின்றோம். (கூச)

[முற்கூறிய வுபபாதகத்தை விரித்துணர்த்துகின்றார். இச்செய்யுண்முதல் 'எனவே யிசைத்த' என்னுஞ் செய்யுளீறாக விருபத்தொரு செய்யுளு மொரு தொடர்க் குளகம்.]

மறையோர்க் கெனவே வைத்தபொருண்
மதியா ததனை வெளவினனு
நிறையாற் பெரியோர் நிதியதனை
நிரந்து கவர்ந்த நிலையிலியும்
பிறரா லதனுக் கிடையூறு
பேணு மவனும் பெருங்குலமு
மறிவு மருளு முடையமெனு
மகந்தை யுடைய வவலனுமே.

(இ - ள்.) பிராமணர்களுக்கென்று நியமித்துவைத்த பொருளையவரை யவமதித் தெடுத்துக்கொண்டவனும், வேதாகமங்களின் வழியேற்றக் குறைச்ச லில்லாமல் நின்ற நிலைமையான் மிக்கவரான நல்லவர்கள் திரவியத்தைக் கலந் தபகரித்த நிலையில்லாதவனும், பிறராலே யவர்களுடைய திரவியத்துக் கிடையூறு விளைப்பவனும், எல்லாரினும் பெரியசாதியு மறிவு மிரக்கமும் யாமே புடையோமென்னு மகங்காரத்தை யுடைய பொல்லாதவனும், (கூரு)

விடைத்துத் தவரை வெருள்வானும்
விடம்ப முளத்துள் விரவினனு
மிடுக்கண் கெடுத்த வினியாரை
யெண்ணு வவலத் திண்ணியனுந்
தடுக்கத் தரியா வாசையுடன்
போக விதத்தைத் தரிப்பானுங்
கொடுக்கச் சிறிதுங் குறியாது
கொள்ளுங் கருத்தே யுள்ளானும்.

(இ - ள்.) தவசிகளைக் கடுகிக் கோபிப்பவனும், உள்ளம் பிறி தொன்றாயிருப்பப் பிறர் மதிக்க விரத முதலியவற்றைச் செய்ய விரும் பினவனுங், தனக்கு வந்த இடையூறுகளை நீக்கின நல்லவர்களை யவ மதித்த பொல்லாத கன்னெஞ்சனுங், தடைபடாத ஆசை மிகுதியி னாலே போகவகைகளை யனுபவிப்பவனும், அற்பமு மொருவருக்குக் கொடுக்க எண்ணாமல் பிறர்கையி லுள்ளவற்றை வாங்குங் கருத்தை யுடையவனும்,

(வி - ரை.) விடம்பம்-உள்ளொன்று புறம்பொன்று. (௧௬)

மாறா வுளத்த வஞ்சகனும்
வயிர முடைய மனத்தினனும்
பூணார் முலையை மணஞ்செய்து
புணர்ந்தா னிருக்கப் புலனிழந்த
பாணார் மொழியைப் பைங்கிளியைப்
பணைத்தோ ளிணையைப் பயின்றதனா
லேனா னென்னு மிரண்டினையுங்
கண்ணா வெண்ணா வெளியனுமே.

(இ - ள்.) உள்ளத்தி லமைவுபடாத வஞ்சனையை யுடையவ னும், ஒருவ னொரு குற்றஞ் செய்தா லதனை யக்கணமே மறவாம லெந்நாளு நினைத்திருக்கு மாச்சரியத்தையுடைய வுள்ளத்தையுடைய வனும், ஒருத்தியைக் கலியாணஞ் செய்து அவளுடைய வாபரண மணிந்த முலைகளைக் கூடிய கணவ னிருக்கவும் அந்த விசை யமைந்த மொழியை யுடையவளாகிய பசுங்கிளிக் கொப்பானவ ளுடைய மூங்கில்போன்ற தோளிணையில் அறிவில்லாமல் புணர் ந்து பெருமை நாண் என்னு மிரண்டையுந் தனக்குக் கண்ணாக விசாரித்தறியாத எழையும், (௧௭)

கொழுநன் றனையே தெய்வமெனக்
குறித்துத் தரும நெறிகோணா
தொழுகும் விரத வுத்தமியை
நொய்ய ளெனவே யுளத்துன்னு
மிழுதை தானு மிவளெளிய
ளென்றே யவட னிணைத்தோளைத்
தழுவக் கருதுங் கன்னியனுங்
[illegible] தரிப்பானும்.

(இ - ள்.) மேவ்கள். (௧௮)

கரிசு சிறிதுங் கருதாத
கவினர் மரபிற் கன்னிகையைத்
துரிசு முடைய சிவனென்று
சொல்லு மவலத் தார்ச்சனனு
மொருவன் சிவனுண் டென்றுணர்ந்த
பனவன் றனைத்தேர்ந் துதவாதே
பரிவு மறிவு முடையனைமற்
றொருவற் குதவும் பழியினனும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பனவன்-பிரமசாரி.

தரும மணமே பிரமாதி
நான்குந் தலைமை யிடைமணந்தா
னொருவ னொருத்தி யெனுமிவர்த
மொப்பிற் பரிவுற் றுறும்புணர்ச்சி
கருதிற் கடைமூன் றசுரமுன்
கடையென் றவற்றைக் கழியாதே
விரைய விழைந்து புணர்ந்தறத்தை
விதித்த மொழியை விடுத்தாரும்.

(இ - ள்.) பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தைவமாகிய இல்லறத்திற்குரிய மணநான்கு முத்தமம்; நாயகனு நாயகியுமான இருவருந் தம் மனப் பொருத்தத்தா லன்புற்றுப் புணருங் காந்தருவப்புணர்ச்சி யிடையாகிய மணமாம்; ஆசுரம், இராக்கதம், பைசாசம் ஆகிய மூன்று மாராய்ந்தால் கடையாகிய மணமாம்; இவற்றுட் கடையென்று கூறிய ஆசுரமண முதலியவற்றை நீக்காம லாசைமிகுதியினாலே விரும்பி விரைவிலே வேட்டுப் புணர்ந் தில்லறநெறியை விதித்துக் கூறிய வேதாகம வசனத்தை விட்டவரும்,

(வி - ரை.) காந்தருவ முதலிய மூன்று மத்திம மெனவும், பைசாசம் அதமமெனவுங் கூறுவாரு முளர்.

எண்வகை மணம்.

சூத்திரம்.

"பிரமம் பிராசா பத்திய மாரிடந்
தைவங் காந்தருவ மசுர மிராக்கதம்
பைசாசமென வேதத் தெண்வகை மணமே."

(க) பிரமம்.

"பிரமங் கன்னியைப் பெருங்கல னணிந்தே
பிரம சாரியா யிருப்பா ஞெருவனுக்
குரிய வன்னிமுன் னுதவுதன் மருவும்."

(உ) பிராசாபத்தியம்.

"மருவு பிராசாபத் தியமகட் கோடற்
குரிய கோத்திரத் தார்மக ளுசவென
விருமுது குரவரு மியைந்தே யீதல்."

(ங) ஆரிடம்.

"ஈயு மாரிட மாவுமா னேறும்
வாங்கித் தீமுன்னர் மகள்வழங் குதலே."

(ச) தைவம்.

"வழங்கு தெய்வம் வேள்வி யாசாரியற்கு
முழங்கு தீமுன மகட்கொடை முறையே."

(ரு) காந்தருவம்.

"முறைமை யாழி னிறைகந் திருவ
மொப்புப் பற்றுத் தப்பில வாகித்
தாமே கூடுந் தகுதிய தாகும்."

(சு) ஆசுரம்.

"ஆகு மாசுரஞ் செருவில் லேற்றியுந்
திரிபன் றியினைத் தெரிவுற வெய்து
மின்னன பிறவும் பன்னிய செய்துங்
கன்னியை மன்னுதல் துன்னு மென்ப."

(எ) இராக்கதம்.

"துன்னு மிராக்கதஞ் சுரிகுழற் பேதையைத்
தன்னிற் பெறாதுந் தமரிற் பெறாதும்
வலிதிற் கோடன் மரபு காட்டும்."

(அ) பைசாசம்.

"காட்டுபை சாசங் களித்தார் துயின்றார்
மாட்டுப் புணரும் புணர்ச்சியின் மாண்பே."

என்றாராகலின் எண்வகை மணங்களையு மிவ்வகையாற் காண்க. (சo)

உலக வியல்பை யொழிந்தாரை
யுதவீர் பொருளென் றுரைப்பானு

நிலைமை தளரிற் றாங்காதே
நீங்கும் பாங்கி லடியானுஞ்
சலமில் சகியைத் தணப்பானுஞ்
சாற்றிப் பழுதுஞ் சலஞ்செய்து
கொலையைப் புரியுங் கொடியானுங்
குணத்தார் தமையுங் கொதிப்பாலே.

(இ - ள்.) உலக வியாபார நீங்கி நிட்டைபுரியுந் தபோதனனை 'எனக்குக் காசந் தூசந் தரக்கடவீர்!' என்று கேட்பவனும், தங் கருத்தனுக்கு நிலைகுலைய வந்தவிடத்து நின்று பாதுகாக்காமல் விட்டுப் போகும் நன்மையில்லாத அடியவனும், நிலைமை பிழைபட வந்தவிடத்து வன்மையில்லாத தோழனை நீக்கிவிடுகிறவனும், நற்குணமுடையவரையுங் கோபத்தினால் குற்றமுஞ் சொல்லி வன்மித்துக் கொலைத்தொழிலைச் செய்யுந் தீயவனும்,

(வி - ரை.) 'நிலைமை தளரின்' என்பதனைச் 'சலமில் சகியை' என்பதனோடுங் கூட்டுக. 'குணத்தார் தமையும்' என்னு மும்மை சிறப்பு. (௪௧)

சுற்றத் தவரைத் துடைப்பானுஞ்
சுகிர்தத் தவரைத் துணிப்பானுஞ்
பற்றிப் பசுவைப் படுப்பானும்
பதியைக் கொலைசெய் பழியினனு
மற்றை வசியர் வடிவினையு
மாயோ டனையும் வதைப்பானுஞ்
செற்றக் துழவர் தங்களையுஞ்
செருக்கிச் சினத்துச் செகுப்பானும்.

(இ - ள்.) உறவின் முறையாரையும், புண்ணியவான்களையும், பசுக்களையும், நார்க்கெல்லா மிறைவனாகிய அரசனையும், அவர்க்கடுத்த செட்டிகளையும், வேளாளர்களையும், மடவாரையும் மதத்துக் கோபித்து வதைப்பவனும், (௪௨)

தருக்க டமையுந் தனக்குன்னித்
தறிக்கு மவனுந் தருக்காலே
யொருத்த னுயிர்கட் குயிராய
வொப்பில் பரம னுறையுமெலை
விருக்க விடப மவைதனையும்
விடைத்தே யொடிக்கும் வினையினனு

மருக்கொண் மலரைத் தனக்கெனவே
பறிக்கு மவல வனியனும்மே.

(இ - ள்.) மரங்களைத் தனக்கென்று குறித்து மதத்தினுலே வெட்டுகின்றவனும், ஏகனு மூயிர்க்குயிருமாகிய நிகரில்லாச் சிவ பிரா னெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலினிற்கு மரங்களிற் கொம்புகளையுஞ் சினைந்தொடிக்குந் தீவினையுடையவனும், நந்தவனத் தில் உண்டாகிய மணம் அமைந்த பூக்களைத் தனக்கென்று குறித் துப் பறிக்கும் பொல்லாத விம்பனும், (சகூ)

பரமர் திருவா லயமதனிற்
பணிசெய் பவரைப் பசுவதனை
யரிய செந்நெ லவையுழுதனு
மபகா ரகனு மவமதியாற்
றருக வென்று பொருளல்லார்
தங்கைப் பொருளைத் தரிப்பானு
மரனை யருச்சித் ததன்பலத்தைப்
பிறர்க்குப் பொருளுக் களிப்பானும்.

(இ - ள்.) சிவாலயங்களிற் பணிவிடை செய்பவர்களையும்-பசுக்களையும்-பெறுதற்கரிய செஞ்சாலி நெல்லினையும் - உழுந்து பயறு முதலாகிய தானியங்களையும் திருடிக்கொள்பவனும்; பய னற்றவரான அநாதாக்கள் கையிற் பொருளைப் புத்தியின் கேட்டி ஞல் 'எனக்குத் தாக்கடவீர்!' என்று கேட்டேற்பவனுஞ், சிவனைப் பூசித்ததனுலுள்ள பலத்தைத் திரவியத்துக்காகப் பிறர்க்குக் கொடுப்ப வனும், (சச)

துக்கம் பிரியச் சுகமடையத்
துணிவ ருலக ரவருள்ளுந்
துக்கம் பிரியச் சுகமதனைத்
துய்ப்பார் சிலரே சிலர்தாமே
துக்கம் பிரியார் சுகம்பிரிவர்
துணிந்த விரண்டு திறத்தார்க்கும்
புக்க வினைபுண் ணியபாவ
மெனவே துணியாப் பூசுரரும்.

(இ - ள்.) உலகத்திலுள்ளவ ரெல்லாருந் தமக்குத் துக்கங்க ணீங்கவுஞ் சுகங்க ளுண்டாகவும் எண்ணுவார்கள். அவர்களுள்ளே சிலர், துக்கங்கணீங்கச் சுகங்களை யனுபவிப்பார்கள். சிலர், சுகத்தை நீங்கித் துக்கத்தை யனுபவிப்பார்கள். ஆகையா லிவ் விருவகையோ

ருக்குஞ் சுகதுக்க மனுபவிக்குங் காரண முன் செய்த புண்ணிய பாவங்களே யென் றுறுதி கூறாத பிராமணர்களும், (சங)

தன்னாற் சமைத்த தடாகத்தைத்
தருக்க ளதனைத் தாரத்தைப்
பொன்னே யனைய புத்திரரைப்
பொருட்குக் கொடுக்கும் புல்லியனு
நன்னோன் புடையார் தனந்தனையு
நயந்து கொள்ளு நலமிலியும்
உன்னைப் பரிப்ப லெனப்பாரி
யுடைமை தனைக்கொண் டொழிப்பானும்.

(இ - ள்.) தன்னா லுண்டாகிய குளங்களையும் - வாவிகளையும் - மரங்களையும் - தன் மனைவியையும் - பொன்போன்ற தன் மைந்தர்களையும் பொருளுக்கு விற்கு மீனனும், நல்ல விரதசீலரா யுள்ளவர்கள் திரவியத்தை விரும்பி யபகரிக்குந் தீயவனும், 'நின்னுடைமையைப் பல்கும்வண்ணம் பெருக்கி யுன்னைக் காப்பேன்' என்று தன் மனைவி சீதனமுதலிய கைப்பொருள்களை வாங்கிக்கொண்டு காவாமல் விடுவோனும், (சசு)

தேற லருந்துந் தேமொழியைத்
திளைக்கு மறவில் சிறியானும்
வேறு சிலர்கைப் பொருடன்னை
விரும்பித் தருவ லெனவாங்கிப்
பேறு மவர்க்குப் பிழைப்பானும்
பேணுஞ் செநெலும் பிறர்தம்பாற்
கூறிக் கொடுத்து விருத்தியினைக்
கொண்டே யருந்துங் கொடியனுமே.

(இ - ள்.) மதுபானம் செய்யுந் தேன்போலு மொழியை யுடையவளைப் புணரு மறிவில்லாத அற்பனும், பிறிது சிலர் கைப் பொருளை யிச்சித்துத் 'தருவன்' என்று வாங்கி யப்பொருளையுங் கொடாமற் பிழைசெய்பவனும், யாவராலும் விரும்பப்பட்ட செஞ்சாலிமுதலிய நெல்லினைப் பிறரிடத்து வட்டிக்குக் கொடுத்து அந்த வூதியங்கொண்டு புசிக்குந் தீயவனும், (சஎ)

குற்ற முடையான் வினைதணிக்கக்
கொடுக்கும் பொருளைக் கொள்வானும்
விற்கத் தகுதி யல்லாத
வன்று திகளை விற்பானுங்

கற்பால் வசிய முதற்செய்து
கனகங் கொள்ளுங் கரிசினனு
நிற்பார் நியமத் திவரெனவே
நிகழ்த்தத் தொடங்கு நியதியனும்.

(இ - ள்.) யாதேனு மொரு குற்றத்தை யுடையவன் தான் செய்த பாவந் தணியும்படி கொடுக்குந் தானத்தை யேற்பவனும், விற்பதற் குரிமையல்லாத அன்ன முதலாயினவற்றை விற்பவனும், மந்திரநூல் விதியினாலே * வசிய மாகருஷண முதலிய அறுவகை யினைச் செய்து பிறர் பொருள்களை வாங்கும் பொல்லாதவனும், நீதி வழி நடப்பவ ரிவரென்று பிறர் புகழும்வண்ணம் பாவித்துத் தொடுத்து நடத்து நியமமுடையவனும், (சஅ)

கொடுத்துத் தனத்தை வேதமுதல்
கொள்ளு மவனும் பொருள்கொண்டு
படிப்பிப் பவனும் படிமத்தைப்
பரித்தே யொழிக்கும் பாங்கிலியுந்
திடத்தை யிழந்து தரிசனங்க
ளனைத்து மதித்துத் திரிவானும்
அடுத்த சமயத் தயற்பசுநூல்
வழியென் றதுகற் றறிவானும்.

(இ - ள்.) திரவியங் கொடுத்து வேதம் வேதாங்க முதலிய நூற்களைப் படிப்பவனும், பொருள்வாங்கிப் படிப்பிப்பவனும், யாதேனுமொரு விரதத்தை யனுட்டித்து அதை யிடையிலே விடுகிற திடமில்லாதவனும், சைவசித்தாந்த நிலையே மேலான நிலையென்னு முறுதியை விட்டு மற்றுள்ள சமய தரிசனங்க ளெல்லாவற்றையு மேலாக மதித்து நடப்பவனும், தானின்ற சமையத்துக் கந்நியமான பசுநூலை முத்திநெறி யென்று எண்ணிப் படித்து ஆராய்கிறவனும்,

அறிவை யளிக்கு மதுவன்றி
யவலத் தருக்க மறைவானு
மறுவில் வடிவ வானவரை
வன்னி யதனை மந்திரத்தைப்
பெறுவித் தருளும் பெரியோனைப்
பேணு தொழிந்து பிழைப்பானு

* வசியம், ஆகருஷணம், மோகனம், தம்பனம், உச்சாடனம், மாரணம்.

மறையோர் தமையும் பசுவினையு
 மாமாத் தெனவெண் மனிதரையும்.

(இ - ள்.) ஞானத்தை யுண்டாக்குந் தருக்கத்தைப் பேசுவ தன்றிக் குதர்க்கத்தைப் பேசுகிறவனும், குற்றமற்ற வடிவினை யுடைய தேவர்க ளக்கினி மந்திரங்க ளிவற்றை யாராதனை செய்யக் கற்பித்தருளு மாசிரியனையும் - பிராமணரையும்-பசுக்களையும்-மிகவு மகத்துக்க ளென்னப்பட்ட பெரியோர்களையும் பத்தி செய்யாமல் விட்டு அவர்களுக்குத் தீமை செய்பவனும், (௰)

(வி-ரை.) மகாமகத்தென்னும் வடமொழி சிதைந்து நின்றது.

அரசன் றனையு மபவாத மறையு மவனு மவன்முன்னு
முரிய வினையைப் பிதிர்தேவர்க் குதவா தவனு மொழுங்கிலி
பரம சிவனு மறநெறியும் பாவ விதமும் பரபதமு [யும்
நரக விதமு மிலையென்றே நவிற்று மவனு நாடோறும்.

(இ - ள்.) அரசனையு மவன்முன்னையும் பழிச்சொல் சொல்பவனும், பிதிர்க்களுக்குந் தேவர்களுக்குந் தான் செய்தற்குரிய கர்ம மான சிராத்தந் தர்ப்பண முதலியவற்றைச் செய்யாதவனும், ஒழுக்க மில்லாதவனும், மேலான சிவனும்-நன்னெறியாகிய புண்ணியமும்-பாவவகையும்-மேலாகிய சுவர்க்க நரகவகையு மில்லையென்று நித்த லுஞ் சொல்லுகிற நாத்திகனும்,

(வி - ரை.) 'அரசன் றனையும்' என்னு மும்மை, மற்றுமுன் னோரையு மென்றறிக. 'அவன் முன்னும்' என்னுமும்மை, அவனைக் காணுவிடத்து மென்றறிக. (௧௧)

பூணார் முலையைப் பகற்பொழுதிற்
 புணரு மவனும் பூரணையி
னுணு தறவின் மைதுனத்தைப்
 பசுவின் பகத்தி னயப்பானு
மாணு னவர்த மாசியத்து
 மயர்த்தும் பெரியோர் கருத்தாலும்
பேணு விருது மதிபகத்துப்
 பெட்பாற் புணரும் பேதையுமே.

(இ - ள்.) ஆபரணம் பூண்ட முலையினை யுடையவளைப் பகற் காலத்திலும் - பூரணை முதலியவற்றினுந் - தண்ணிரினுள்ளுங் கூசா மற் புணர்கிறவனும், பசுக்களின் யோனியிலும்-ஆணைப் பிறந்தோர் வாயினும் மைதுனத்தை விரும்புகிறவனும், மறந்தும் பெரியோர்

கண் மனத்தினுலும் விரும்பாத தூரமானவனே யாசையாற் புணரு மறிவில்லாதவனும், (இஉ)

உடைப்பா னவனு முவகையுடன்
பிரியா துறையு முறவினையுங்
கெடுப்பா னவனுங் கிளர்சமயங்
கிளப்பா னவனுங் கொடுங்கிளவி
புடைப்பா னவனும் புனற்கரையைக்
கூப தடமும் புலனிழந்து
துடைப்பா னவனுந் துணையான
தேவர் விமானந் துயக்குறவே.

(இ - ள்.) மகிழ்ச்சியோடும் பிரிவின்றி யிருக்கு நட்புடைய வனை விரோதத்தால் வேறுக்குகிறவனும், ஓங்கிய சமணன் முத லிய புறச்சமையத்தவரை நிலைகேடு செய்கிறவனும், பொல்லாத வார்த்தைகளைச் சொல்லுகிறவனும், குளக்கரையையுங் கிணற்றங் கரையையும் வெட்டி யிடித்துப் போடுகிறவனும், அறிவுகெட்டு அஞ்ஞான மேலிடும்படி தமக்குத் துணையான தேவர்க ளிருக்குங் கோயில்களைப் பிடுங்குகிறவனும், (இங)

இறவா திருக்கச் செயுமருந்தே
யெனினு மதனை யில்லகத்துத்
துறவா திருந்தா ரனைவரொடுந்
துய்த்தல் கடனே துயக்குற்றுப்
பிறர்சொல் பழியும் பேணுதே
பெரியோர் தமக்கு நாணுதே
சிறிது மிரக்கஞ் செய்யாதே
தானே யருந்துஞ் சிதடனுமே.

(இ - ள்.) சாவாத மூவாமருந்தே யானாலும் அதைத் தம்வீட் டில் விடப்படாதிருந்தார் எல்லாரும் பகுந்துண்பதே முறைமை. அங்ஙனஞ் செய்யாமல் ஆசை மிகுதியால் அறிவு மயங்கிப் பிறாற் சொல்லும் பழிச்சொல்லையும் பாதுகாவாமற், பெரியோர்களுக்கு மருத்துவியாமற் புசிக்கிறேமே யென்று கூசாமற் சற்று மிரக்கமுஞ் செய்யாமற் றுனொருவனுகவே யிருந்து புசிக்குங் குணக்கேடனும்,

எனவே யிசைத்த வித்தொகையி
லென்னு மிவர்க ளெல்லோரு
முனமே மொழிந்த பாதகத்திற்
றணிய வுபபா தகமுற்றும்

வினையா ரிணைவேல் விழியாரு
மிவற்றைப் புரியில் வேறல்லா
ரினியா முனிவ விதற்கிளைய
பாவ விதமு மியம்புவமே.

(இ - ள்.) என்று கூறிய வித்தொகையில் எண்ணு மிவர்க ளெல்லாரும் இவற்றிற்கு முன்னுகச் சொன்ன பாதகத்துக்குத் தண்ணிதான பாதகத்தைச் செய்யுங் கர்மிகளான உபபாதகராம். வேல்போன்ற இரண்டு விழிகளையுடைய மடவார்களு முற்கூறிய பாதகங்களைச் செய்தால் அவர்களும் வேருகாரா யதிபாதகமுதலிய பெயரினைப் பெறுவார்கள். அகத்திய முனிவனே! மேலிந்த உப பாதகத்துக்குத் தண்ணிதான பாவவகையையு முனக்குச் சொல்லு கின்ருேம். அதனைக் கேட்பாயாக! (௩௫)

[முற்கூறிய உபபாதகத்துக்குத் தண்ணிதான பாவவகைகளை விரித்துணர்த்துகின்ருர்.]

[இச்செய்யுள் முதல் 'என்னுமித்தொகை யாவரும்' என்னுஞ் செய்யுளீருக நாற்பத்தொரு செய்யுளும் ஒருதொடர்க் குளகம்.]

கலிவிருத்தம்.

ஆவி னுக்கு மருமறை யாறங்க
நாவி னர்க்குந்தன் னுயக னுக்குமெய்த்
தாப தர்க்குஞ் சகிக்குந் தகைமைய
காவி நேர்விழிக் கன்னிகை யார்க்குமே.

உற்ற காரியத் தூறுக டம்மையு
முற்று வானு முகிழத்த மகிழ்ச்சியைத்
துற்று வார்தமைக் கண்டு துயக்குறும்
பற்றி லானும் பாருருப் பற்றியும். (௩௭)

(இ - ள்.) பசுவுக்கும்-நான்கு வேதங்களு மாறங்கமும் பயிலு கின்ற நாவினையுடைய பிராமணருக்கும்-தன்னுடைய ஆண்டவனுக் கும்-வேடங்கட்டி நடப்பதல்லாமல், உண்மையான தபோதனருக்குந்-தன்தோழனுக்கும்-அழகினையுடைய நீலோற்பல மலர்போன்ற கண் களையுடைய கன்னிகைகளுக்கும் - உற்ற காரியங்களில் இடையூறு களை யுஞ் செய்கிறவனும், நல்வினையா லுண்டாகிய செல்வத்தை அனுபவிப்பவரையும் பிறருடைய ரூபலாவண்யங் கண்டு பொரு மலறிவு வருந்தும் அன்பில்லாதவனும், (௩௬-௩௭)

ஈட்டி னூர்தனந் தன்னை யிறைக்குறக்
காட்டி னானுங் கருதிய கையனும்
பாட்டி னானநற் பாவையர் தூடண
நாட்டி னானு நரர்க்கு நவையுமே.

(இ - ள்.) நல்ல முயற்சியால் சம்பாதித்தவர் அடக்கப் பொருளை அரசனுக்குக் காட்டினவனும், அப்பொருளை இவ்வளவோ வென்று நினைத்து மனம் புழுங்கிய ஈனனும், நற்குண நற்செய்கைகளையுடைய மாதர்களிடத்தில் தூஷிக்கத்தக்க பாட்டுகளைப் பாடுகிறவனுங், குணவான்களிடத்தில் குற்றத்தைக் கற்பிப்பவனும், ()

[இச்செய்யுள் முதலாக 'நீக்குவானு மலசல நித்தலும்' என்னுஞ் செய்யுளீறாக நான்கு செய்யுளும் ஒருதொடர்.]

ஆக்கள் சேரிடத் தாகுதிச் சாலையுட்
டேக்கு நீர்த்தடந் தேர்திகழ் வீதியுள்
வேர்க்க ணுந்தருச் சாயையில் வெற்பினிற்
பூக்கி ளர்ந்த பொழிலின் புடையுமே. (ருக)

சிலையி னீரிற் சிகதையிற் தேவர்த
மெலையின் மார்க்கத்தி லில்லத்தி லீமத்திற்
றொலைவி லாததூர் வாதியிற் றும்பையி
னிலைமை மாதவர் நீடு நிலத்துமே.

(வி - ரை.) 'சிகதை' என்பது மணற்குன்று. (சுO)

உன்னத் தக்க தலத்தி லுவர்தனிற்
செந்நெ லாதிய செய்யிற் சிறப்புறு
வன்மி காதியிற் குண்டு வனததினுட்
டன்னைத் தானிகர் கோமயந் தன்னினும். (சுக)

நீக்கு வானு மலசல நித்தலு
நாக்கி னன்மது பான நயந்துளு
மூர்க்க னுமுழ வாதி விழைதமு
மார்க்கும் வீணனு மாடிடு மற்பனும்.

(இ - ள்.) முன்னைச் செய்யுட்களிற் கூறிய அந்தந்த எல்லைகளில் மல சலங்களை விடுகிறவனும், நாடோறும் மதுபானத்தை நாவினால் விரும்பிப் பருகும் அறிவில்லாதவனுந், துந்துமி முதலிய வாத்தியங்கள் கீதங்கள் கூத்துக்க ளிவற்றை விரும்பும் அவத்தனும், கூத்துகளை யாடுகின்ற சிறியவனும், (ருக-சுஉ)

தேக்கு நீர்விளை யாடுஞ் சிறியனு
மார்க்கு நெஞ்சத் தவர்தமக் கந்தரம்
பார்க்கும் பாங்கிலி தானும் பலர்செனு
மார்க்கந் தன்னைத் தடுக்கும் வலியனும்.

(இ - ள்.) நிறை நீரிலே நீந்தி விளையாடுகிற அற்பனும், புலன் வழி போகாமன் மனத்தை நிறுத்தும் பெரியோர்களுக்குக் குற்றத்தைத் தேடு நீதி யில்லாதவனும், யாவரு நடக்கும் வழியை முள் முதலியவற்றால் அடைத்து விலக்கும் இரக்கமில்லாதவனும், (௬௩)

ஈடி லார்மனை யாதிய வெல்லையைப்
பாடி லாரெனப் பற்றும் படிறனுங்
கூட மான கருமமுங் கூறிடு
மூட னும்மத னைச்செயு மூர்க்கனும்.

(இ - ள்.) பலமில்லாமல் இளைத்தவர்கள் மனைமுதலாகிய பூமியை 'அவர்களதற்கு உரியவரல்ல' என்று கைக்கொள்ளும் வஞ்சகனும், ஒருவருஞ் சொல்லாமன் மறைக்கத்தக்க காரியங்களைச் சொல்லும் அஞ்ஞானியும், அந்தக் காரியங்களைப் பிறர் காணச் செய்யும் அறிவில்லாதவனும், (௬௪)

ஒளித்து நின்று பகைவனை யூறுசெய்
வெளிற்ற னுங்கன்னக் கோலொடு மிண்டனுந்
தெளித்த சொல்லை வழக்கிடைச் செப்பிடா
னெளித்த சொல்லை நிகழ்த்திடு நீசனும்.

(இ - ள்.) தன் சத்துருவை ஒளித்துநின்று கொல்லுஞ் சேவகப்பா டில்லாவதனுங், கன்னக்கோலெடுத்துப் பழகும் இடும்பனும், இருவர் தம்முண் மாறுகொண்டு வழக்கில்வந் தேறியவிடத்து மனுநூன்முறையே ஆராய்ந் தறுதியிட்ட சொல்லை வழக்கிற் சொல்லாமல் வாரம்பற்றி யோரமாகச் சொல்லும் புலையனும், (௬௫)

கொடுமை ராதியைப் பண்ணிடுங் கோணனுங்
கொடுமை ராதியைக் கொள்ளுங் கொடியனு
மடியர் பாவிரங் காத வலனு
மடியர் தம்மை யொறுத்திடு மற்பனும்.

(இ - ள்.) வில்முதலிய ஆயுதங்களைப் பண்ணு நீதிக்கேடனும், வில் முதலிய ஆயுதங்களை [illegible] கொள்ளுந் தீயவனுந், த[illegible] பில்லாதவனும், அவ்வடியாரை [illegible] க்காயிகுஞ் சிறி[illegible]னும், (௬௬)

ஆவி னைத்தமிப் பானு மலனுற
நாவி னாற்பொய் நவிற்று நாகனுங்
கூவ வந்தது கேட்குங் கொடியனுங்
காவ லர்க்கப ராதக் கருத்தனும்.

(இ - ள்.) பசுக்களை வருத்தமுறும்படி அடிப்பவனும், நாவினா லசத்தியஞ்சொல்லு நாகத்துக்கு உரியவனும், அதைச் சொல்லுமிடத்துச் சென்று கேட்கும் பொல்லாதவனுந், தன் கருத்தனுக்குக் குற்றஞ்செய்யு மனமுடையவனும், (கஎ)

உறவி னுக்கப ராதியு மூனுடற்
பிறவி வேரினைப் பீழும் பெருவலி
யறிவ னுக்குநல் லாரிய னுக்கலர்
புறனு ரைக்கு மவலப் புலையனும்.

(இ - ள்.) சுற்றத்தாருக்குத் தீங்கு செய்கிறவனுந், தசைமை பொருந்திய உடம்பினை யெடுப்பதற்கு மூலமாகிய ஆணவத்தைக் களைந்து பிடுங்கு மிகுந்த திடமான அறிவினை யுடையவனையும்-நல்ல ஆசிரியனையும்-பழிச்சொல் சொல்லுந் தீமையையுடைய கன்ம சண்டாளனும், (கஅ)

சொக்கி டுந்தொழில் வல்ல துரிசனு
முக்கு நோயற வோட்டு மருந்தெனப்
பொக்கம் பேசிக் கொடுக்கும் புலையனுந்
தக்க தாய்தந்தை வாட்டந் தணித்திடான்.

தனித்தி ருந்துனுந் தண்ணிய கண்ணனு
முனித்த போதனர் தம்மைமுன் னூட்டிடான்
றனித்த வாதுலர் துக்கந் துடைத்திடான்
பனித்த தாதர் பசியும் பறித்திடான்.

[இவ்விரண்டு செய்யுளும் ஒருதொடர்.]

(இ - ள்.) பொருண் முதலியவற்றைக் கவரும் விருப்பத்தினாலே பிறரிடம் சொக்குப்போடுந் தொழிலில் வல்ல துர்ச்சனனும், 'பிணி கெடும்படி நீக்கு மருந்திது' என்று பொய் சொல்லி மருந்தல்லாத மருந்தைக் கொடுக்கும் பொல்லாதவனும், தகுதியையுடைய மாதாபிதாக்கள் பசியைப் போக்காமலும் இந்தியங்களைக் கோபிக்குந் தன்மையையுடைய தபோதனர்களை முந்தப் புசிப்பிக்காமலும்-வறுமையால் வருந்துந் தரித்திரர்கள் பசித்துயரத்தைப் போக்காமலும்-

பசியினொடிருந்த தன்னடிமைகள் பசியு நீக்காமலும் - தானே தனித்திருந்து புசிக்கும் அற்பவறிவினை யுடையோனும், (சுகூ-எ0)

நீத்து முன்னைய வேத நெறியினைப்
பேர்த்து நின்ற பிராவிரச் சியனுந்
தீர்த்த னுவா ணுதிசி னைதந்திடப்
பார்த்த பண்பி லவலப் படிறனும்.

(இ - ள்.) முற்காலத்திலுள்ள வேதாகமங்களிற் சொல்லிய சந்நியாச மார்க்கத்தின் வழியே யனுட்டியாமற் றானே ஒரு மார்க்கங் கற்பித்து நடக்குஞ் சந்நியாசியுஞ், சுத்தனாகிய சிவபிரானுடைய திருமதின் முதலானவற்றை இடியவிட் டிரக்கமில்லாமல் பார்த்திருக்கும் நன்மையில்லாத தீமையையுடைய வஞ்சகனும், (எக)

ஆக்க டம்மை யரும்பிணி வந்துறி
னோக்கி யேயத னோவுதன் னோவெனக்
காக்கி லானுங் கனத்தை யிளைத்தமெய்ச்
சேக்கண் மீது செறிக்குஞ் சிறியனும்.

(இ - ள்.) பசுக்களைப் பொறுத்தற்கரிய வியாதிகள் பொருந்திய வயிற்றைப் பார்த்து அற்றின் பிணியைத் தனக்கு வந்த பிணிபோல நினைத்துப் பரிகாரஞ் செய்யாதவனும், உடலிளைத்து நிற்கும் எருதுகள்மேல் பொதிமுதலிய மிகுந்த பாரங்களை ஏற்று மற்பனும்,

விடையின் பீசத்தை வெய்ய வினைஞரா
லுடையச் செய்விக்கு மூனனும் வந்தையி
னிடையிற் பார மெடுத்து மிழுதையு
மிடபந் தன்னி லெடுத்து மிழுக்கனும்.

(இ - ள்.) எருதுகளினுடைய பீசத்தைக் கொடிய தொழிலினையுடைய சேமாறிகளா லுடையும்படி செய்விக்கும் பொல்லாதவனும், மலட்டுப் பசுவின் முதுகிற் பொதிகளை எடுக்கச்செய்யும் அறிவில்லாதவனும், இடபங்களிலே பொதிகளை யெடுக்கச்செய்யும் ஈனனும், (எஉ)

வருந்து மேபதம் வைப்பின் மரிக்குமே
பொருந்து மண்ணிற் புழுக்களு மென்றுளம்
வருந்தி யேபத மெலவென வைத்திடா
தருந்த வத்தைப் பிரிந்த வரக்கனும்.

(இ - ள்.) யாருக்கும் இடமாகப் பொருந்தும் பூமியி லடிவைக்குங்கால் புழுக்களும், எறும்பு முதலியவைகளும் வருந்தி நோமென்றுஞ் சாமென்று நினைந்து மனநொந்து அடியை மெத்தென

வையாத அரிய கொல்லாத விரதத்தை விட்ட இராட்சதனுக் கொப் பானவனும், (எசு)

உண்ண வூனை விரும்பி யுயிர்க்கொலை
யெண்ணு வான்கொலை கண்டிரங் கான்கொலை
பண்ணு வாரைத் தடுத்துப் பகர்கிலா
னண்ணு வானிவ ரோடெனு நால்வரும்.

(இ - ள்.) வெளி. (எரு)

மிக்க சாதியுட் டோன்றியும் வேதியர்
துக்கந் துய்த்திடச் செய்யுந் துரிசனுந்
தக்க தென்று மதுமணஞ் சார்தருந்
திக்கி னுசி செலுத்துஞ் சிறியனும்.

(இ - ள்.) உத்தமமான நல்ல குலத்திற் பிறந்தும் அக் குலத்துக்கேற்கப் பாதுகாவாமற் பிராமணர்களைத் துன்பமனுபவிக்கும்படி செய்யும் பொல்லாதவனும், கள்முதலிய நாற்றம் வந்து வீசுந் திசையில் அதை நல்லதென்று மூக்கினு லுகந்துகொள்ளும் ஈனனும்,

பாவஞ் செய்யப் பயமில் படிறனும்
ஏவஞ் செய்ய விளைப்பி விழுதையுந்
தேவர் தம்மைக் குறித்துத் திகழ்விதி
மேவ யாகஞ்செய் யாத்தன வேந்தனும்.

(இ - ள்.) பாவஞ் செய்வதற்குப் பயப்படாத வஞ்சகனும், பிறருக்கு என்றும் பொல்லாங்கு செய்வதற்கு இளையாத மூடனுந், தேவர்களை நோக்கி அசுவமேதமுதலிய யாகங்களை விளங்கும் விதி முறையாகச் செய்யாத மிக்க திரவியத்தையுடைய இராசாவும்,

(வி - ரை.) எவ்வம் என்பது திரிந்து நின்றது. (எஎ)

ஆல யத்தை யமலனுக் காதிக்குக்
கோவி னேயிலைக் கூவிளந் தண்ணறு
மாலை சூட்டவும் வல்லமு மல்லமுக்
கால மும்மென நோவறுங் கல்லனும்.

(இ-ள்.) யாம் நின்மலனாகிய சிவபிரானுக்குத் திருக்கோயிலைத் தான் கட்டினேமில்லை; அல்லாமல் குளிர்ச்சி யுடைத்தாகிய மணம் அமைந்த வில்வமாலை முதலியவற்றைத் திரிகாலமுஞ் சிவபிரானுடைய திருமுடியிலே சாத்தவுஞ் சமர்த்துடையோமு மல்லவென்று மனத்தில் நோவில்லாத கன்னெஞ்சமுடையவனும், (எअ)

கூர்த்த தீபனங் கூடக் குறுகினர்க்
கார்த்தெ திர்ந்தழை யாத வலனு
மூத்து ளார்பிணி முற்றினர் பற்றிலர்
பார்த்த போது பரிவில் படிறனும்.

(இ - ள்.) மிகுந்த பசிகொண்டு வந்தணுகினவருக்கு எதிரே சென்று நல்ல வார்த்தை சொல்லி யழைத்து அன்னமிடாத பொல்லாதவனும், வயோதிகர்-வியாதியாளர்-மிடிய ரிவர்கள் தன்னை வந்து கண்டபோதானாலும் அவர்கண்மேல் இரக்கமில்லாத பொல்லாதவனும், (எக)

தன்னிற் றண்ணிய னேவலைத் தக்கதென்
றுன்னிச் செய்யு மறிவில வூனனு
மென்னெ னுதசங் காக்குங் மெளியனுங்
துன்னு மாயிடங் காக்குந் தொழிலனும்.

(இ - ள்.) தனக்குக் கீழானவனேவலை நல்லதென்று எண்ணிச் செய்யும் அறிவில்லாத குற்றமுடையவனும், 'ஆடு எருமை இவைகளைக் காத்ததினால் வரும் பயன் யாது?' என்று எண்ணாமல் மேய்க்குநோய்வனும், (அ௦)

அச்ச மின்றி யருவினைக் காடகத்
திச்சை யால்வருந் துன்பமு மெண்ணிடான்
முச்சி யேமரக் கோவை முயற்சியாற்
கைச்சி டாது கடல்செலுங் கல்லனும்.

(இ - ள்.) தன வாஞ்சையினாலே பொறுத்தற்கரிய பாவத்துக்கு அஞ்சாமல்-ஆழ்ந்த கடலினடுவே காற்றுமுதலிய பொருந்திற் கப்பல் கவிழ்ந்து மரிப்போமென்னுந் துக்கமும் எண்ணாமல்-முயற்சி மிகுதியாலே கப்பலைப் பண்ணி அதிலேறுவதை வெறுத்திடாமற்-கடலோடுங் கன்னெஞ்சனும்,

(வி - ரை.) மரத்தாற் கோத்ததினாலே 'மரக்கோவை' எனக் கப்பற்கோர் காரணப் பெயராயிற்று. (அக)

அகத்திற் பண்பறுத் தாடகத் தாசையான்
முகத்திற் பண்பை முகிழ்த்த விதத்துடன்
சகத்திற் காளையர் தம்மை மயக்குவார்க்
குகப்புச் செய்தவ டோள்புண ருனனும்.

(இ - ள்.) உள்ளத்தில் அன்பை ஒழித்துப் - பொருளாசையினால் முகத்திற் கண்மலர்ச்சியைத் தோற்றுவித்து - இராக வகையினாலே பூமியில் இளைஞராயுள்ளவரை மோகிப்பிக்கும் வேசைகளுக்

குச் சந்தோஷத்தைச் செய்து, அவர்கள் தோளிணையைக் கூடுந் தீமையுடையவனும், (அஉ)

தபதி காருகன் கொல்லன் றனமனர்க்
குபக ரிப்பனென் றொட்டின னான்வலி
யபக ரிக்கும் பிணியறுப் பானெனு
மிவருங் கூலி யருங்கப டெய்திடின்.

(இ - ள்.) சிற்பாசாரியும், சாலிகொல்லியுங், கொல்லனும், 'அரசர்களுக்குத் திரவியங்களை ஆதாயமாக்கிக் கொடுப்பேன்' என்று இராசகாரியம் விசாரிக்கப் பொருந்தினவனுஞ், சரீரபலத்தைக் கெடுக்கும் வியாதியைத் தீர்க்கும் மருத்துவனுங், கூலியாளருமாகிய இவர்களாறுபேருந், தத்தஞ் செய்தொழில்களிலே வஞ்சகஞ் செய்வாராகு லவர்களும், (அக)

வேலை தோறும் வினைசெய வேண்டியே
கூலி யென்றிரை மெய்க்குக் கொடுத்திடான்
சால வுண்ணுஞ் சழக்கனுந் தாமத
வேலை மூவைந்திற் பின்னுணும் வீணனும்.

(இ - ள்.) காலந்தோறும் அதற்கேற்ற சற்கருமங்கள் செய்யும்பொருட்டுத் தன் சரீரத்துக்குக் கூலி யென்று உணவைக் கொடாம லுணவுச் சுவை விருப்பத்தினாலே புருஷாகாரத்துக்கு மேல் மிகவு முண்ணும் பொல்லாத மனத்தை யுடையவனும், இராத்திரிகாலம் பதினைந்து நாழிகைக்குமேற் புசிக்கு மியல்வாழ்பவனாகிய அவத்தனும்,

(வி-ரை.) 'மூவைந்து' என்று அர்த்தயாமத்தைக் குறிக்கையால், அர்த்தயாமம் பதினொன்றேகாலுக்கு மேலெனச் சொல்லவும் படும். எனவே ஒரு சாமத்துக்குள்ளே புசித்தல் சிறப்பெனக் கொள்க. ().

ஆறி லொன்று கடமைகொள் ளாததி
னேற வேகொளு மீடி லிறைவனு
மூறு செய்திடு வானு முலகினை
வேறு வேறுதன் னேவல் விதத்தினும்.

(இ - ள்.) ஆறிலொரு கடைமை கொள்ளாம லதற்கு அதிகமாகக் கொள்ளு நன்மையில்லாத அரசனும், தன்னேவல் வகையினால் சேனைகளா யுள்ளவரையும் - அதிகாரிகளையும் - கள்வரையுங் கொண்டு தேசத்துக்குப் பலவகையாகத் தீங்கு செய்விக்குங் கொடுங்கோன் மன்னவனும், (அ௫)

இத்த கைத்த விறைவ னிருநிதி
கைத்தி டாது கவரக் கருதிய
சித்த மேவிடச் சென்றிரந் தேகொளும்
பொய்த்த வம்புரி பூசுரன் றானுமே.

(இ - ள்.) முன்னே கூறிய இக்கொடுமைகளோடு கூடிய கொடுங்கோன் மன்னவனுடைய திரவியத்தை யாகாதென்று வெறுக்காமல் அதை வாங்க எண்ணும் ஆசை மிகுதியினாலே அவனிடத்திற் சென்றிரந்து கேட்டு வாங்கும் பொய்த்தவஞ் செய்கின்ற பிராமணனும், (அக)

சோரன் றன்னைத் தூயக்க மனத்தினாற்
சோர னன்றென நீக்குந் துரிசனுஞ்
சோர னல்லனைச் சூட்சி யிழப்பினாற்
சோர னென்று துணித்திடுந் துட்டனும்.

(இ - ள்.) யூகமற்ற மனத்தினாலே கள்ளனைக் கள்ளனல்லன் என்று விடும் பொல்லாத அரசனும், ஆராய்ந்து விசாரியாத அறிவில்லாமையாற் கள்ளனல்லாதவனைக் கள்ளனென்று ஆக்கினை செய்யுங் கொடுங்கோன் மன்னவனும், (அஎ)

சோர னுக்குத் துணைசெலுந் துட்டனுஞ்
சோர வித்தைகள் சொல்லுந் துரிசனுஞ்
சோர னைச்சோர னென்றறிந் தூந்தனுஞ்
சோர னுமவ னைச்சுளி யானுமே.

(இ - ள்.) கள்ளன் றிருடுமிடத்தில் அவனுக்குத் துணைப்போன தீயவனும், அவனுக்குக் களவு நூல்களை உபதேசிக்கும் பொல்லாதவனும், கள்ளனைக் கள்ளனென் றறிந்தும் அவனோடு சிநேகஞ் செய்யுங் கள்ளனும், அவனைக் கண்டால் 'இத்தொழில் நீ செய்யவேண்டாம்' என்று கோபிக்காதவனும்,

(வி-ரை.) சோர வித்தைகளாவன: "மந்திரந் தெய்வ மருந்தே நிமித்தந், தந்திர மிடனே காலங் கருவி" என் றெண்விதமா யிருக்கு மிதனைச் சிலப்பதிகார முதலிய நூல்களிற் காண்க. (அஅ)

ஏந்தி ளந்தடங் கொங்கையை யின்புறுங்
காந்த னீங்கவக் காரிகை தோளிணை
தோய்ந்த சோரனைத் தொட்டுத் துயர்செயா
வேந்த னும்மனச் சோரனில் வேறலன்.

(இ - ள்.) ஆபரணங்கள் பூண்டு இளமைத் தன்மையையுடைய பெரிய முலையினையுடையவளைக் கூடி மணமகிழுங் கணவன் பிரிக்க

காலத்தில் அவளுடைய தோளிணையைப் புணர்ந்த கள்ளனைப் பிடித்துத் தண்டனை செய்யாத அரசனும், பிறர் மனையில் செல்லுங் கள்ளனில் வேறாகமாட்டா ஞகையா லந்த அரசனும், (அக)

பாலை நெய்யைப் பலத்தைத் திலத்தினைச்
சாலி யாதியன் றுதியைத் தண்புனன்
மூல மாதி முதிரை யுறுதியைச்
சேலை யோடுபட் டாடை திருடனும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மூலம்-கிழங்கு. முதிரை-துவரை. (கo)

பரிய கம்பளந் தன்னையும் பாசமும்
வரிய வூனு மதுவுந் தயிலமுந்
திரண மீறு செறிந்தகில் பண்டமுங்
காமு றப்பற்றிக் கொண்டிடுங் கள்வனும்.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) பாசம்-கயிறு, வரியவூன்-ஆகாதென் று பரைந்தவூன்.

சத்தி ரந்தனைப் பாதுகை தன்னையும்
வித்த ரித்திடும் பாயின் விதத்தையுங்
கொத்து லாமலர்க் கூடையும் பேழையு
மத்த முட்டி யெடுக்கு மவலனும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கொத்துலாமலர்க்கூடை - திருப்பூங்கூடை. அத்தம் - கை. (கஉ)

சங்க மாதி சலத்திற் சனித்தவும்
வங்க மாதி மரத்தின் வகுத்தவு
மங்க லத்த மழலை முழவமு
மங்கை யாற்பற்றிக் கொள்ளு மவலனும்.

(இ - ள்.) சங்குமுதலாக நீரிற் பிறந்துள்ளனவும் - கப்பன்முதலாக மரத்தினாற் செய்துள்ளனவும் - மங்கல வாத்தியமாகிய மழலைச் சொல்லையுடைய மத்தளமுந் திருடுமவத்தனும். (கங)

ஈயந் தன்னை யிரும்பினைச் செம்பினைத்
தேய னுந்திர புத்தனைச் செங்கலை
மாய வாழ்க்கையர் தங்கண் மனையினு
மேயு மேது மெடுக்கு மிழுதையும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) தேயன்-திருடன்; திரபு-பித்தனே; இவைகள் வட மொழி. (கூச)

பிறர்பொ ருட்கடு கிற்பிள வாயினு
மறைய நின்றத னைக்கொளும் வஞ்சனு
நிறைய றக்கொள வெண்ணிடு நெஞ்சனு
மறையு மாதனு மன்னியர்க் காகவே.

(இ - ள்.) பிறருக்குரிய பொருள்களைக் கடுகிற் பாதியாகனு மவர்கள் காணுதபடி சென்று திருடுங் கள்ளனும், உத்தமமான நிறை யென்னுங் குணநீங்கப் பிறர் பொருளைக் கைக்கொள்ள விசாரிக்கு மனத்தை யுடையவனும், ஒருவன் பொருளைப் பிறருக்காகும்படி சொல்லு மறிவில்லாதவனும், (கூரு)

என்னு மித்தொகை யாவரு மீங்கியற்
பன்னு பாவக் கடலிடைப் பட்டுளா
ரின்ன பேதத் துரிசு மியற்றிடிற்
பின்னு வார்குழற் பேதையர் தாமுமே.

(இ - ள்.) இவ்வாறு சொல்லப்பட்ட இப்பாவ வகையின் தொகையிலுள்ளவ ரெல்லாரு மிவ்விடத்தி லிவ்வியலிலே விதித்த வுபபாதகத்திற் றண்ணிய பாவமாகிய கடலின்க ணமிழ்ந்தும் பாவிக ளாவார்கள். பின்னற் றொழில் அமைந்த நீண்ட அளகபாரத்தை யுடைய பெண்களு முன்னே கூறிய இப் பாவவகைகளாகிய தீமை களைச் செய்வார்களாகு லத்தன்மை யுடைய பாவிகளாவார்கள்.

(வி - ரை.) 'பாவக் கடலிடைப் பட்டுளார்' என்பது நடுநிலைத் தீபகம். (கசு)

[மேலே யதிபாதக முதலிய கர்மங்களைச் செய்தவர்கள்
பெறும்பய னுணர்த்துகின்றார்.]

ஈட்டு மிந்த வினைத்தொகை யாவையு
மீட்டி டும்படி வெய்ய நமன்றமர்
காட்டி டுந்துய ராக்கை கலந்துபோய்
வாட்டு மாநிர யத்துள் வதிவரே.

(இ - ள்.) அதிபாதகர் முதலானவர்க ளிப்படிச் செய்யு மிவ் வதிபாதக முதலிய கர்ம பலங்க ளெல்லாவற்றையு மொழிக்கும்படி கொடிய எமதூதர்க ளுண்டாக்குந் துன்பவுடம்பாகிய யாதனு சரீர மடைந்து சென்று துக்கத்தைக் கொடுக்கு நரகத்திலே யிருப்பார் கள். (கஎ)

[மனிதரே யல்லாமல் தீமைசெய்த விலங்கு பறவைகளு நரகமடையுமென்ப துணர்த்துகின்றார்.]

மைந்தர் மாதரு மற்றை யலியுமோ
பந்த பாச விலங்கும் பறவையு
முந்த வாக்கை யிதுவென முன்னுறு
மந்த வாக்கை யடைந்தகன் றாழுமே.

(இ - ள்.) ஆடவராயுள்ளவர்-பெண்டிராயுள்ளவர்-அலியாயுள்ளவர் மாத்திரமோ நரகத்தி லழுந்துவது? அவர்களை யல்லாத பாசபந்தத்தையுடைய மிருகங்களும் பறவைகளு முந்த வுண்டாகிய வுடம்புபோ லெதிர்வரும் யாதனாசரீரங்களை யடைந்து பூமியிலெடுத்த வச்சினின்று நீங்கி நரகத்தி லழுந்துவார்கள். (கஅ)

[முன்னே அதிபாதக முதலிய பாவபலங்களைக் கொடுப்பவன் எமனென்றுஞ், சிவபத்தர்கள் செய்த பாவபலங்களை யாசிரியன் பிராயச்சித்தத்தாற் போக்குவா னென்று முணர்த்துகின்றார்.]

விண்ணு ளார்நரர் மற்றை விலங்குமே
பண்ணு பாவ பலத்தைக் கொடுப்பவன்
றிண்ண மேயமன் றேசிகன் றீர்த்திடும்
பண்ணிற் பாவ விதஞ்சிவ பத்தரும்.

(இ - ள்.) தேவர்களும், மனிதர்களும், இவர்களல்லாத மிருகங்களும், செய்யுந் தீவினைப் பயனை யவைகளுக்குக் கொடுப்பவன் எமராசன்; சிவபத்தியுள்ளவர்கள் பாவவகைகளைச் செய்வார்களாறல் அப் பாவபலன்களை யாசிரியன் பிராயச்சித்த சாந்திகளாலே போக்கி விடுவா னிது நிச்சயம்.

(வி - ரை.) 'திண்ணம்' என்பதனை யிருபாலுங் கூட்டுக (கக)

[வெளியாகப் பாவஞ்செய்த ஆன்மாக்களை அரசன் தண்டிப்பான்; அவனாற் றண்டிக்கப்படாதவர்களை யெமனே தண்டிப்பானென் றுணர்த்துகின்றார்.]

பிணக்கந் தன்னையும் பெற்றவர் தம்மிடைக்
கணக்கி லாரையுங் கள்வர்க டம்மையும்
வணக்கு வான்மன்னன் மற்றையர் தங்களை
யிணக்கு வானர கத்து ளியமனே.

(இ - ள்.) ஒருவருக்கொருவர் வழக்கிலே மாறுபாட்டைப் பெற்று வந்தவிடத்தி லழிவழக்குடையவரையும், திருடர் முதலானவர்களையுந் தண்டித்து திருத்துகின்றவ னரசனே; அவனாற் றண்டிக்

கப்படாதவரையு மாசிரியாற் பிராயச்சித்தப் படாதவரையு நரகத்திலே செலுத்தித் தண்டிப்பவ னெமராசன். (௧௦௦)

[இந்தப் பாவங்கள் தீர்த்துக்கொள்வதற்குப் பரிகாரஞ் செய்துகொள்ளுமா றுணர்த்துகின்றார்.]

ஆத லாற்செய்த தீங்கை யறுத்திட
வேத மாதி விதியும் விளங்கிய
போத கன்பதம் போற்ற வவன்செயும்
வாதி யாத பிராத்திய வாயமே.

(இ - ள்.) தீவினை செய்தவர்களுக்கு நரகமும், அந்நரகத்திலே செலுத்துமொரு எமராசனு முண்டாகையினாலே, ஆன்மாக்கள் தாந்தாஞ் செய்த பாவங்களை யொழிக்கும்பொருட்டு வேதமுதலிய நூல்களிற் சொன்ன விதிகளையுமறிந்த ஆசிரியனுடைய திருவடியை வணங்குவார்களாகு லாசிரியனு மவ்வான்மாக்களைத் தீவினைகள் வருத்தாமைக்குக் காரணமான பரிகாரத்தைச் செய்து தீர்ப்பான். ()

[மேன்முடிந்தது முடித்துணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

அதிபா தகமு மதிற்பிரிவு மவல மகபா தகமைந்துங்
கதித மகபா தகந்தன்னிற் கனிட்ட மான பாதகமு
மதனிற் றணிய வதற்கணிய வுபபா தகமு மதற்கணிய [மே.
வதனிற் றணிய பலபாவ விதமுந் தொகைசெய் தறைந்தா

(இ - ள்.) அதிபாதகமும், அவ்வதிபாதக வகையுந், தன்பத்தை விளக்கும் பஞ்சமா பாதகமுஞ், சொல்லப்பட்ட அப் பஞ்சமாபாதகத்திற் றண்ணிமையான பாதகமும், அப்பாதகத்திற் றண்ணிமையுடைய வாய்தற்கடுத்த வுபபாதகமும், அவ் வுபபாதகத்துக் கடுத்திருப்பவையா யதனினுந் தண்ணிதான பலவகையான பாவவகைகளையு மிவ்வியலில் தொகுத்துச் சொன்னே மிதனை முனிவனே யறிவாயாக!

(வி - ரை.) கதிதம்-வடமொழி. (௧௦௨)

கலிவிருத்தம்.

என்றுசிவ நிந்தையெழு வாய்வினை யிசைத்தான்
குன்றவர் மடக்கொடி தனக்கருள் கொடுத்தான்
வென்றுபுல னைந்தினையும் வெய்யவினை நைய
நின்றமுனி யன்றுணர நிர்க்குண னினைந்தே.

(இ - ள்.) வெளி. (௧௦௩)

[சிவத்துதி யுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

கன்றிய காலனைக் காய்ந்தவனே!
கரிசினைப் போக்கிருக் காய்ந்தவனே!
வென்றிவில் வேடனை வீட்டினனே!
விரும்படி யார்க்கருள் வீட்டினனே!
அன்றிரு வர்க்கரி தாயவனே!
அண்டமு மாக்கிய தாயவனே!
ஒன்றிய வெங்கணு முற்றவனே!
உணர்ந்தன னுன்னையு முற்றவனே!

(இ - ள்.) மார்க்கண்டனைக் கோபித்து அடைந்த எமனைச் சங்கரித்தவனே! ஆன்மாக்களுடைய அஞ்ஞானத்தை நீக்கும் வேதத்தை முனிவர்க்கு அறியும்படி சொன்னவனே! வெற்றியமைந்த கருப்பு வில்லினையுடைய வேளாகிய காமனைக் கொன்றவனே; தன்னை விரும்பு மடியவர்களுக்குக் கொடுக்கு முத்தியையுடையவனே! அடியு முடியுந் தேடியகாலத்தில் அரி பிரமர் இருவர்களுக்குங் காண்பதற்கு அரிதாக நின்றவனே! அண்டங்களை உண்டாக்கிய வுலகமாதாவானவனே! எப்பொருளுந் தானொருவனென்று சொல்லும்படி யெவ்விடத்தும் வியாப்தியினால் வேறறப் பொருந்தி நின்றவனே! எவரெவ ரிருவினை செய்ய நினைக்கு நினைவையு முயிர்க்குயிரா யிருந் தவரவர் நினைக்கு முன்னே யறிந்தவனாகிய தவத்தவனே!

(வி-ரை.) 'அண்டமும்' என்னு மும்மை பிண்டமு மெனவுங் கொள்ளக் கிடந்தது. (௧0௪)

இதுவுமது

இடுபலி கொண்டுணி யென்பவனே!
இருவினை தீர்த்திடு மென்பவனே!
நடநவி லுங்தொழி னல்லவனே!
நாசமு மாமய னல்லவனே!
மடலவிழ் கொன்றைய மாலையனே!
வந்தனை யாஞ்செயு மாலையனே!
படிதனிற் காசிப் பதியவனே!
பல்லுயிர்க் கெல்லாம் பதியவனே!

(இ - ள்.) இருடி பத்தினிகள் மனைகள்தோறு மிடும் பலியைப்பெற் றுண்பவனென்று யாவராலுஞ் சொல்லப்படுபவனே!

நல்வினை தீவினை யிரண்டையு நீக்கு மென்னுடைய இறைவனே! பஞ்சகிருத்தியமாகிய நிருத்தம் பயிலு நல்ல தொழிலை யுடையவனே! பிறப்பிறப்பினை யடையும் பிரமனல்லாதவனே! இதழ் விரியும் கொன்றைமாலையை யுடையவனே! யாம் ஆராதனை செய்யுந் திருக் கோயிலில் உள்ளவனே! பூமியி னிலைபெற்றிருக்கும் காசிப்பதியை யுடையவனே! எல்லா ஆன்மாக்களுக்குங் கர்த்தாவானவனே! ()

[பிள்ளையார் துதி யுணர்த்துகின்றார்.]

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

பூதி பூடணன் வேத பாடணன்
பூளை சூடினன் காளி யூடின
னாதி நாயகன் பேதை நாயக
னமைபூணினன் வாய்மை பேணினன்
போதன் மாதவ னாடி நேடவும்
பூண வேணயங் காணொ ணாவரன்
காதன் மாமக னாறு மாமுகன்
காசில் வாசகம் பேசு வாமரோ.

(இ-ள்.) திருநீற்றையே யாபரணமாகத் தரிப்பவனும், வேதத்தை யருளிச்செய்தவனும், பூளை மலரை அழகிய சடையில் முடித்தவனும், காளியுடனே வாதுசெய்தவனும், ஆதி கருத்தாவும், உமைக்குக் கணவனும், ஆமையோட்டை யாபரணமாக அணிந்தவனும், வேதாகமங்களைப் பாதுகாப்பவனும், தாமரைமலரில் உறையும் பிரமனுந் திருமாலுந் தம்முண் மாறுபட்டுத் தேடவு மவர்கள் கண்ணிற் பொருந்தும்படி நிலைமை பொருந்திய தன்மையைக் காணவொண்ணாதவனுமான சிவபிரானுடைய குமாரராகிய பிள்ளையார் குற்றமற்ற திருவாக்கைப் புகழாநின்றோம். (௧0௬)

[மேல் அகத்திய துதி உணர்த்துகின்றார்.]

ஆறு சூடின னீறு மாடின
னால நீழலன மால னாழல
னேற தேறினன் கீறு கூறைய
னீறி லாதவன் றேறி லாதவன்
மாறி லாவரன் வேறி லாவரன்
வாய்மை பேசினன் றீமை கூசினன்
கூறு மாகமந் தேறு மாதவன்
கோயி லாவதென் கோவு நாவுமே.

(இ-ள்.) கங்கையைத் தரித்தவனும், திருநீற்றைத் திருமேனி யெங்கும் பூசுவோனும், கல்லாலின் கீழ் இருப்பவனும், ஆங்கூரில் ஞாழல் முதலின் அடியிலே யிருப்பவனும், இடபத்தி லேறுபவனும், கிழிக்கப்பட்ட கோவண ஆடையை யுடையவனும், நாசமில்லாதவனும், ஆராயின் எவற்றையும் விளக்கும் ஞானநித்தியனும், வணங்கினவர்களுக்கு மாறாத வரத்தைக் கொடுப்பவனும், எவற்றிற்கும் அந்நியமாகாமற் கலந்து நிற்குஞ் சங்கார கருத்தாவும், உண்மைப் பொருளை உபதேசிக்கும் ஆசிரியனும், தன்னையடைந்த ஆன்மாக்களுக்குத் தீமைசெய்ய நாணுவோனுமான சிவபிரான் அருளிச்செய்த சிவாகமத்தை யுள்ளபடி அறிந்த பெரிய தபோதனனாகிய அகத்திய முனிவனுக்கு என் கண்ணு நாவுமே எழுந்தருளியிருக்குந் திருக்கோயில்.

(வி - ரை.) கோ என்பது கண். (கoஎ)

ஆறாவது

பாவவியல் முற்றிற்று.

ஏழாவது

# சுவர்க்க நரகவியல்.

மேல் இவ்வோத் தென்னுதலிற்றோ வெனின், ஒத்து நுதலிய தூஉ மோத்தினது பெயருரைக்கவே விளங்கும். ஆயின், இவ்வோத் தென்ன பெயர்த்தோவெனின், முன்னை யியல்களிற் கூறப்பட்ட புண்ணிய பாவங்களைச் செய்தவர்க ளடையுஞ் சுவர்க்க நரகங்களின் றிறத்தை யுணர்த்திற் றாகலாற் சுவர்க்க நரகவிய லென்னும் பெயர்த்து. இதனு ளித்தலைச் செய்யுள் இரண்டு மென்னுதலிற்றோ வெனின், இவ்வியலிற் கூறுந் திறத்தைத் தொகுத்து உணர்த்துதனுதலிற்று.]

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அறைந்த வதிபா தகமாதி
யடைந்தா ரியம னுலகதனைச்
செறிந்து சிவந்த விழிகண்டு
சித்தங் கலங்கிச் செயலழிந்து
பிறிந்து புணர்ந்து பிலவழியைப்
பிடித்துத் தூத ரடித்தெறிய
மறிந்து நிரயக் குழிவீழ்ந்து
வருந்தும் விதத்தை வகுப்பதன்முன்.

அதிக முனிவ ரறம்புரிந்தா
ரவரு மியம னுலகதனை
நெறியிற் றரும பலனிகழ
நீடு மகிழ்ச்சி கூடியிடச்
செறியு முறையு மவர்க்கவனுஞ்
செய்யுஞ் சிறப்புந் துறக்கத்தி
னுறையு முறையுந் தொகைசெய்தே
யுரைப்பா முலக முவப்புறவே.

[இவை யிரண்டு மொருதொடர்.]

(இ - ள்.) முன்னே இயலிலே கூறிய அதிபாதக முதலிய பாவவகைகளைச் செய்தவர்கள் எமலோகத்திற் சென்று எமராசன் கோபத்தினால் சிவந்த கண்ணினைக் கண்டு மனங்கலங்கிச் செயலற் றுச் சுவர்க்கத்துக்குப் போம் வழியை விட்டு நரகத்துக்குப் போம் பிலத்துவாரத்தை யடைந்து, தம்மைப் பிடித்துக்கொண்டு செல்லும் யமதூதர்கள் அடித்தெடுத்தெறியத் தலைகீழாய் நரகக்குழியில் விழுந்து வருந்தும் வகைகளை வகுத்துச் சொல்வதற்கு முன்னே புண்ணியங்களைச் செய்தவர்களும், எமலோகத்தின் முறையாலே புண்ணிய பலன்கள் வந்து பொருந்துகையினால் நிலைபெற்ற மன மகிழ்ச்சியாகச் சென்றடையு முறைமையயும், அவர்களுக் கந்த எம ராசன் செய்யுஞ் சிறப்பும், அவர்கள் சுவர்க்கத்தில் இருக்கு முறை மையையும் தொகுத்து உலகத்துக்கு மேன்மை யுண்டாகச் சொல்லு கின்றோம். அதனை மலையமுனிவனே அறியக்கடவை! (க - உ)

[யாக்கை நிலையில்லாமை உணர்த்துகின்றார்.]

முளைத்த கருவு மழவுருவு
முதிரா வுருவு முதிர்ந்தமையா
விளைத்த வடிவு மெனுமிவற்றி
னிருந்த வுயிர்கள் வினையிறலும்
வளைத்த தூதர் வதைசெய்ய
மற்றோ ருடலம் பற்றிமுனம்
விளைத்த செய்தித் பலம்விளைய
வியம புரியை விரவிடுமே.

(இ-ள்.) கர்ப்பகோளகையிற் பதிந்த கர்ப்பமும், பாலக வடிவ மும், முதிராத தருணவடிவமும், மூப்படைந்த தன்மையினால் மெலி ந்த விருத்தவடிவமுமாகிய இந்தச் சரீரங்களிற் பொருந்திய ஆன் மாக்க ளூழ்வினை தொலைந்த வளவில் வந்து சூழ்ந்து எமதூதர்கள் வதைக்க இப் பூத சரீரத்தை விட்டு யாதனாசரீரத்தை யடைந்து அவ் விடத்தின் முன்னாட் செய்த கர்மபலம் பொருந்த அதை யனுபவிக் கும்பொருட்டு எமலோகத்தை யடைவார்கள். (ங.)

[மேல் சிறத்தமுறையானே அறம் புரிந்தவர்கள் எம லோகத்தை யடையு முறைமை யுணர்த்துவான் றொடங்கி யதனுட் பாதுகை யுதவினவ ரடையு முறைமை யுணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்.

பாதுகை யுதவினர் பனவரு முறவே
வாதமு மனபயி வரவழி யுகையா

வேதரி யதுவென வெளிதுற வெவவையும்
போதக ரிவரென யமபுரி புகுவார்.

(இ - ள்.) அந்தணர்கள் பெறும்படி செருப்பு மரவடி யிவை களைக் கொடுத்தவர்கள், வேகத்தினால் வாயுவையொத்த குதிரை வழியில் வந்து பொருந்த அதிலேறி நடத்தி "இவர்களுக்குரிய பொருள் யாது?" என்று சொல்லும்படி யெப்பொருளுங் கைவந்து பொருந்தி யறிவுடையவர்க ளிவர்களென்று சொல்லும்படி யெம லோகத்தை யடைவார்கள். (ச)

[குடைதானம் பண்ணினவர்க ளடையும்பல முணர்த்துகின்றார்.]

சத்திர முதவினர் தகைமையர் பெறவே
மொய்த்தெழு முகினிழல் வழியுற முறையா
லெத்தொகை யினியன வவையெளி துறவே
சித்தமு மகிழ்வுற யமபுரி செறிவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சத்திரம் - குடை. (ரு)

[வஸ்த்ரதானஞ் செய்தவர்க ளடையு முறைமை யுணர்த்துகின்றார்.]

பட்டினை யுதவினர் பனவரு முறவே
தொட்டிட வினியன துகில்புனை வடிவோ
டிட்டம துறுபயன் வழியெளி துறவே
சிட்டரு மிவரென யமபுரி செறிவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சிட்டர்-பெரியோர். (சா)

[மெத்தை தானஞ்செய்தவர்க ளடையு முறைமை யுணர்த்துகின்றார்.]

தவிசினை யுதவினர் தகைமையர் பெறவே
புவிதனி லரியது பொருவினை யரிது
சிவிகையு முறவதன் மிசைவழி திகழ்வா
ரிவர்மிகு தவரென யமபுரி யிசைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) தவிசு-மெத்தை. சிவிகை-பல்லக்கு. (எ)

[அசுவதானம் பண்ணினவர்க ளடையு மூறைமை
யுணர்த்துகின்றார்.]

துத்துறு பரியினை யுதவிய தகையோ
ரத்தகு பரிமிசை யழகுற வழியே
யெத்தொகை யினியன வலையெளி துறவே
சித்தரு மிவரென யமபுரி செறிவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சித்தர்-சித்தியை யுடையோர். (அ)

[கட்டில் தானம் பண்ணினவர்க ளடையு மூறைமை
யுணர்த்துகின்றார்.]

கட்டுள்வு யதனையு முதவினர் கவினு
ரிட்டம துறுமஃ தெனவழி யிடையே
கிட்டிய வதனொடு கெழுமிய வழகாற்
சிட்டரு மிவரென யமபுரி செறிவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கட்டுவை-கட்டில். (க)

[சாலை, தோப்பு வைத்தவர்க ளடையு மூறைமை
யுணர்த்துகின்றார்.]

பொழிலினை நிறுவிய பொருவரு புகழோர்
நிழலுறு பொழில்வழி நின்றமல ருறவே
விழைவினி வினியன வெவையவை மிகவே
யழகிய ரிவரென யமபுரி யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பொருவரு-ஒப்பில்லாதது. விழைவு-விருப்பு. (கo)

[திருநந்தவனம் வைத்தவர்க ளடையு மூறைமை
யுணர்த்துகின்றார்.]

பூமலி பொழிலினை நிறுவிய புகழோர்
தேமல ரிரதமு முறவனி செறிவா
ரேமமு மிசைவர்கள் வழியிடை யெளிதே
நாமலி புகழொடு நடுவனை யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) இதனுள் அணி-அலங்காரம். ஏமம்-இன்பம். நடுவன்-
ஆன்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களை ஏற்றக்குறைச்ச லில்

யூம லறிந்து தீவினைக் கீடாக நரகவேதனை செய்தலால் கவே னென்று எமனுக்குக் காரணப்பெய ரெய்திற்றென்க. (கக)

[தேவர்கள் முதலானவர்களுக்குப் பணிவிடை செய்தவர்க ளடையு முறைமை உணர்த்துகின்றார்.]

தேவர்கண் முதலியர் பணிசெய வருவோர்
ஓவிய மனமட வரலிய ருழையே
மேவிட வழியிடை மிருகளி யுறவே
நாவணி புகழொடு நடுவனை யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஓவியம்-சித்திரப்பாவை. உழை-பக்கம். (கஉ)

[முன்னே கூறிய தேவர்கண் முதலானவர்கள் சந்நிதியிற் றிருவிளக்கிட்டவர்கள் அடையு முறைமை உணர்த்துகிறார்.]

ஒளியினை யவருற வுதவிய வவருந்
தெளிதரு திருவுரு வடைவர்க டிசைசேர்
மளினமு மறவழி மருவுவர் மதியோ
றளியுள ரிவரென நடுவனை யடைவார்.

(இ - ள்.) முன்னே கூறிய அத்தேவர்கள் முதலானவர்கள் சந்நிதியிற் பொருந்தத் தீபத்தினை யிட்டவர்களு மனத்துக்கு எப்பொருளையுந் தெளிவித்தற்குக் காரணமாயிருக்கிற அழகிய வடிவைப் பெற்றந்த வடிவி லொளியினால் திக்குகளி லுண்டாகிய இருளோட நல்லவழியிலே சென்று "இவர்கள்சிவபிரா னருளுள்ளவர்கள்" என்று தம்மை அறிவுடையவர்கள் புகழ எமராசனை யடைவார்கள்.

(வி-ரை.) மலினம் 'மளினம்' என லகாரம் ளகாரமாக மயங்கிற்று. (கங)

[அதிதிகளுக்கு மனை கொடுத்தவர்கள் அடையு முறைமை உணர்த்துகின்றார்.]

இல்லமு முதவின ரிரவலர் வரவே
நல்லக மருவிய வழியிடை நடவா
வெல்லையில் வளமுற மகிழ்வுற வெளிதே
வில்லியு மிவரென யமனுழை விழைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) வில்லி-காமராசன். உழை-இடம். (கச)

[கோதானம் பண்ணினவர்கள் அடையு முறைமை
உணர்த்துகின்றார்.]

கோவினை யுதவினர் குலமறை யவர்கைப்
பூவணி யிரதமு முறவரு புகுவார்
ஓவிய மனமட வாலிய ருடனே
தேவரு மிவரென யமபுரி செலுவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அணி-அழகு. (௧௫)

[அன்னதானஞ் செய்தவர்கள் அடையு முறைமை
யுணர்த்துகின்றார்.]

அன்னமு முதவின ரருமறை யவர்பாற்
றன்னிக ரில்லன முறவழி தனினும்
பன்னிய வகைதனை யுணர்முறை பயிலா
நன்னய ரிவரென நடுவனை யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பன்னியது - சொல்லியது. நன்னயர்-நல்லவழி யினையுடையவர்கள். (௧௬)

[வியாதியாளர்களுக்கு அவுடததானஞ் செய்தவர்கள்
அடையு முறைமை உணர்த்துகின்றார்.]

உதவின ரவுடத முறுபிணி யினர்கைத்
திதமுறு முருவமு முறவழி செறிவார்
இதவித மெனவவை யெளிமையி னுறவே
மதன னுமிவரென யமனுழை மகிழ்வார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) இதம்-நிலை. (௧௭)

[குரு பணிவிடை செய்தவர்கள் அடையு முறைமை
உணர்த்துகின்றார்.]

குரவன பணிபுரி குணமுடை யவர்முன்
மருமல ரிரதமும் வரவழி யெதிரே
திரமுற வதனமர் தெரிவைய ருடனே
பொருவில ரிவரென யமபுரி புகுவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) திரமுற - நிலைபெற. (௧௮)

[அந்தணர்களுக்குப் பாதம் விளக்கினவர்க ளடையுமுறைமை உணர்த்துகின்றார்.]

அருமறை யவர்திரு வடியினை யதனிற்
பரிவொடு குளிர்புனல் பயில்வினை யவருந்
தருவமர் குளிர்நிழல் வழிபெறு தகையே
பொருவில ரிவரென யமபுரி புகுவார்.

(இ - ள்.) வெளி. (கக)

[அந்தணர்களிடத்துச் சொன்னமு இரத்ன முதலானவைகளைத் தானஞ்செய்தவர்கள் அடையுமுறைமை உணர்த்துகின்றார்.]

ஒளிமணி யுதவினர் கனகமு மொருமைத்
தெளிதிகழ் மறையவர் திகழ்கர மதனிற்
றொளையில கனகநல் வரைவழி துதையா
வளியுள ரிவரென நடுவனை யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) துலை - ஒப்பு; தொளையென லகரம் ளகரமாக மயங்கிற்று. துதைதல் - நெருங்குதல். (உ0)

[பெரியோர்களுக்குப் பாதம் வருடினவர்க ளடையுமுறைமை உணர்த்துகின்றார்.]

உத்தம ரொருமைய வுணர்வின ரடியொடு
கைத்தல முறைமுறை வருடிய கருணையர்
தத்துறு பரிமிசை யழகது தகவே
சித்தச னிவரென யமபுரி செறிவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சித்தசன் - காமன் (உக)

[அந்தணர்களுக்குத் தேரினைத் தானம் பண்ணினவர்கள் அடையுமுறைமை உணர்த்துகின்றார்.]

அருமறை யவருற விரதமு மருளினர்
மருமல ரிரதமுன் வரவழி யிடையே
திரமுற வதனமர் தெரிவைய ருடனே
பொருவில ரிவரென யமபுரி புகுவார்.

(இ - ள்.) வெளி. (உஉ)

[பூமி தானம் பண்ணினவர்கள் அடையு முறைமை
உணர்த்துகின்றார்.]

பூமியை யுதவிய பொருவரு புகழோர்
தாமுறு மினியன வழிபெறு தகையே
காமினி யவரொடு களியுற வளவா
நாமவி புகழொடு நடுவனை யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) காமினி - தத்தமனத்துக்கொத்த தெய்வமகளிர்.

[முன்னே கூறிய அந்தணர்களுக்கே அல்லாமல் யாவர்களுக்கும்
அன்னபான முதவினவர்கள் அடையு முறைமை
உணர்த்துகின்றார்.]

பானமு முதவினர் பரிவொடு பலவித
போனமு முதவினர் புரிதரு முறையே
தானினி துறவவை தமையனு பவியா
மேனய ரிவரென யமனுழை விழைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மேனயர் - மேலான அறிவினையுடையவர்கள்.

[ஈண்டுக் கூறியதே யல்லாமல் மற்றுமுள்ள தானங்கள் பண்ணி
னவர்கள் அடையு முறைமைக்கு மோர்பொதுவிதி
உணர்த்துகின்றார்.]

மற்றுள வினைநல மருவின ரவரும்
பற்றுவர் வழிதனின் முறைபெறு பலமுந்
துற்றுவர் துயரிலர் துரிசறு நெறிசேர்
நற்றவ ரிவரென நடுவனை யடைவார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) துரிசு - குற்றம். துற்றுதல் - அனுபவித்தல். ()

[முன்னே கூறிய தானங்க ளெல்லாவற்றினுள்ளும் அன்னதானமே
சிறந்த தானமென்பதற்கு ஓர் சிறப்புவிதி உணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

அன்ன தான மறைந்தவற்று
ளதிக பலமே யருந்தினனுக்
கின்னல் கெடுக்கு மப்பொழுதே
யின்பந் தனையு மிசைவிக்கு

மன்னு முடலுள் வலியதனான்
மாறில் பொருளே யஃததனா
லென்னி னுவமை யிதற்கில்லை
மண்ணின் கண்ணே யெவ்விடத்தும்.

(இ - ள்.) முன்னே கூறிய தானவகைகள் எல்லாவற்றினுள்ளும் அன்னதானமே யதிகமான பலன்களைக் கொடுக்கும்; அவ்வன்னத்தைப் புசித்தவனுக்கு அக்கணத்திலேதானே பசித்துயரத்தைப் போக்கும்; அதுவல்லாமல் சுகத்தையும் விளைக்கும்; சரீரத்தினுண்டாகிய பலமும் நிலைபெறு மாகையால், அவ்வன்னமே ஒப்பில்லாத பொருளுமாகும். ஆகையா லிதற்கு உவமையை விசாரித்தாற் பூமியின் மாத்திரமோ எவ்வுலகத்தினு மில்லை. (உசு)

[அன்னமே சரீரமெடுப்பதற்குக் காரணமாகு மென்பதூஉம்,
அன்னமே படைத்தளித் தழிக்கு மென்பதூஉம்
உணர்த்துகின்றார்.]

அன்ன மதனி லாமுதிர மதனாற் றசையா மதனாலே
மன்னு மலின் சுக்கிலமு மலின மதனாற் கருவாகு
மன்ன மின்றே லுயிர்வாழு மாக்கை விரைய் வழிந்தகலு
மன்ன மதுவே யுடற்றன்னை யாக்கு நிறுத்து மழித்திடுமே.

(இ - ள்.) அன்னத்தினின்றும் இரத்த முண்டாகும்; அந்த இரத்தத்தினால் தசை யுண்டாகும்; அத் தசையினால் அழுக்காகிய சுக்கிலம் நிலைபெறும்; அச் சுக்கிலத்தினால் கர்ப்பந் தரித்துச் சரீர முண்டாகும்; முன்னே கூறியவற்றிற்கெல்லாம் பரம்பரையினால் காரண மாயிருக்கும்; அன்ன மில்லையானால் உயிரிருந்து வாழு முடம்பு சடுதியிலே அழிந்துபோகும்; ஆகையால், அவ்வன்னமே உடம்பை யுண்டாக்கும்; அதுவல்லாமல் தானே யுணவாய்நின்று அவ்வுடம்பையும் காக்கும்; தானில்லையானால் அவ்வுடம்பையு மழிக்கும். (உஎ)

[பசிநோ யுற்றவர்களுக்கு அந்நோ யன்னத்தினா லல்லாமல்
பிறிதொன்றினாலுந் தீராதென்பதூஉம், யாவருக்கும் அன்னமே
ஆதாரமென்பதூஉ முணர்த்துகின்றார்.]

உற்றான் பசியைக் கனகத்தா
லொளிசேர் மணியா லொண்டொடியான்
மற்று முளநல் வளனாலு
மாற்ற வலனே வலன்வயினுட்
கெர்ப்பந் தனக்கும் பாலனுக்குங்
கிளர்ந்த தருணன் றனக்குமுட

லொற்க முடைய விருத்தனுக்கு
முண்டோ நிலையோ தனமொழித்தே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஒற்கம்-மெலிவு. (உஅ)

[முன்னே கூறிய மானிடர்களே யல்லாமல் தேவர்கள்
முதலியோர் விரும்புவது அன்னமேயென்பதூஉம்,
அதுவே பசிநோய்க்கு மருந்தென்பதூஉ
முணர்த்துகின்றார்.]

தேவர் முனிவர் தானவருந்
திளைப்ப ருணவைத் திதிவிரும்பி
யாவ ருணவை விரும்பாதா
ரிடர்சே ருடலுண் முந்நூற்றெட்
டோவா நோயுண் டவற்றுள்ளும்
பசிநோய் கொடிய தறினதனுக்
காவா வென்றே யருளான
னருந்து மருந்தோ தனமன்றே.

(இ - ள்.) தேவர்களும் இருடிகளும் அசுரர்களும் தங்கள் தங்கள் சரீரமழியாமல் நிற்கவேண்டி யன்னமாதியான வுணவை யருந்துவார்கள். ஆகையால், உலகத்தில் எவர்கள் அன்னத்தை விரும்பாமல் விட்டார்கள்? அதுவல்லாமல் துக்கத்துக்குக் காரணமாகப் பொருந்திய வுடம்பின் தொடர்ச்சிவிடாத முந்நூற்றெட்டு வியாதிகளுண்டாம். அவற்றுள்ளும் பசிநோயே மிகவும் பொல்லாதது. அப்பசி நோயை ஒருவர் அடைந்தால் அருளினை யுடையவர் "அந்தோ! அந்தோ!!" என்றிரங்கி யதற்குக் கொடுக்கு மருந்தாவதும் அந்த அன்னமேயாம்.

(வி - ரை.) "அன்றென் கிளவி யாமென் றாகும்," என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். (உக)

[மேலே யன்னதானஞ் செய்பவர்களே பிராணதானஞ்
செய்பவர்களாமென் றுணர்த்துகின்றார்.]

உற்ற பசிநோய்க் கனமருந்தை யுதவு வாரு மிலாகி
லற்ற துயிரு மவ்வுடலுக் கன்ன மளிப்பா ரவருண்டேற்
பெற்ற துயிரு மவ்வுடலம் பெறுமவ் வுயிருந் தருமாதி
சொற்றை யீவா னுயிரீவான் றரும முதலுந் துயக்கறவே.

(இ - ள்.) யாரேனு மொருவர் கொண்ட பசிநோய்க்கு அன்னமாகிய மருந்தைக் கொடுக்குந் தாதாக்களு மில்லையானால் அவ்வுடம்புக்கு உயிரு மில்லையாய்விடும். அன்னதானஞ் செய்பவர்க ளுண்டானாற் பசிநோய் நீங்கி யவ்வுடம்பு உயிரைப் பெற்று வாழும். அவ்வுயிரும் அறமுதலிய நான்கையும் செய்யப் பெறுமாகையால் அன்னதானஞ் செய்பவன் பிராணதானஞ் செய்பவனும். அதுவே யல்லாமல் விபரீதமற அறம் பொரு ளின்பம் வீடென்னு நான்கினையுந் தானஞ் செய்தவனுமாம்.

(வி - ரை.) சோறு-குறுகும்வழி குறுகிற்று. 'ஈவான்' என்பதனைத் தருமமுதனு மென்பதனோடுங் கூட்டுக. (௯0)

[அன்னதானஞ் செய்பவர்க ளிம்மை மறுமைப் பயன்களை யடைவரென்பதூஉந், தபோதனர்க் கன்னதானஞ் செய்பவர்கள் தவப்பயன் பேர்பாதியாக நிற்பதென்பதூஉ முணர்த்துகின்றார்.]

பொன்னை மணியைப் புனையிழையை
மற்றும் விரும்பும் பொருளினையு
மன்ன யளிப்பா ரீங்கடைவ
ரங்குந் தாம்வேண் டியவடைவ
ரன்ன மதனை யருந்தவரை
யருத்தி னார்க ளவர்பலத்திற்
றுன்னு வார்க ளொருபாதி
யவர்தா பொருபாற் றுன்னுவரே.

(இ-ள்.) அன்னதானஞ் செய்பவர்கள் இவ்வுலகத்திலேதானே பொன்னையும், இரத்னங்களையும், அணியும் ஆபரணங்களையு முடைய மாதர்களையும், மற்றுந் தாம் வேண்டிய பதார்த்தங்களையும் பெறுவார்கள். அத் தேவலோகத்திலும் தாம் வேண்டிய போகங்களைப் பெறுவார்கள். அரிய தபோதனர்களை யன்னத்தைப் புசிப்பித்தவர்கள் அவர்கள் செய்த தபோபலத்தி லொருபாதி பெறுவார்கள். அத் தபோதனர்கள் மற்ற வொருபாதியே பெறுவார்கள். (௯௧)

[சரீரத்துக்கும் அதனுற் செய்யும் அறமுதலியவற்றிற்கும் அன்னமே மேலாகிய காரணமென் றுணர்த்துகின்றார்.]

அன்ன மாக்கை தனையாக்கு மதனு லறமுன் னுளவாகு
மன்ன மதனு லனைத்தினுக்கு மதிக கார ணமதனாலே
யன்ன மதனுக் கொப்பான கரண மில்லை யாயுங்கா
லன்ன யான காரணமும் புதல்வர்க் குளதோ வகலிடத்தே.

(இ - ள்.) அன்னஞ் சரீரத்தை யுண்டாக்கும். அச் சரீரத்தி னால் அறமுதலிய நான்கு முண்டாகும். அதனை லெவற்றிற்கும் அவ்வன்னந்தானே மேலாகிய காரணம் ஆகையால், விசாரிக்கு மிடத்தில் அன்னத்துக்கு ஒப்பாகிய காரண மொன்றுமில்லை. அது எவ்வாறெனில், பூமியிற் பிள்ளைகளுக்கு மாதாவை யொப்பான் காரணமு முண்டோ? ஆகையாற் சரீர முண்டாவதற்கு அன்னமு மாதாவுமே முதற்காரணமாகும்.

(வி - ரை.) காரணமென்பது குறுகும்வழி குறுகிற்று. (கக)

[அன்னமே சிருட்டி முதலிய காரிய கருத்தாக்கண் மூவருமாகுமென் றுணர்த்துகின்றார்.]

அன்ன மதனை யுலகனைத்து
மாக்கு மயனென் றறையுமறை
மன்னு முலகந் தனைக்காக்கு
மாய னெனவு மதித்துரைக்குஞ்
சொன்ன வுலக மனைத்தினையுந்
துடைக்கு மரனு மெனச்சொல்லு
மின்ன முறையா லெவற்றினுக்கு
மிஃதே முதலென் றெண்ணுகவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) முதல்-காரணம். (கக)

[உதகத்துக் கெய்தியதோர் சிறப்பு விதியும், அன்னம் உதக மிரண்டையுந் தானஞ் செய்தலே யதிக பலந் தருமென்பது முணர்த்துகின்றார்.]

உதக மதனை யுயிரெல்லா முண்ண விரும்பு மதனாலே
யுதகந் தனக்கு மொப்பான பொருள்வே றில்லை யுலகத்து
ளுதக மன்ன மெனுமிரண்டு முயிரை யோம்பு மதனாலே
யுதக மன்ன மெனுமிரண்டு முதவிற் பரம பலமுளதே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஓம்புதல்-காத்தல். (கச)

[இங்ஙனஞ் சிறப்பித்த அன்னதான முதலாகிய விசிட்ட தானங்க ளெட்டும் மற்றுமுள்ள தானமுஞ் செய்தவர்கள், எமலோகத்தினை யடைந்து பின்னே சுவர்க்கத்தை யடைவார்க ளென்ப துணர்த்துகின்றார்.]

அன்ன முதக வாவசுவ மாடை குடைகட் டிலையகினை
மென்னு மிவைக ளிருநான்கு மீயிற் பிரேத பதியிரங்குஞ்

சொன்ன படியே மற்றுமுள தானம் புரிவார் துயரகலத்
துன்னு வார்க ளியமபுரி யதன்பின் னடைவர் துறக்கமுமே.

(இ - ள்.) அன்னமும், தண்ணீரும், யானையும், குதிரையும் தகிலும், குடையும், படுக்கைக் கட்டிலும், புலித்தோல் முதலிய ஆசனமும் என்னும் இவ்வெட்டு விசிட்டதானங்களையுஞ் செய்தவர்கள் எமராசன் அனுக்கிரகத்தைப் பண்ணும்படி செல்வார்கள். இங்கே சொன்னபடி மற்றுமுள்ள தானங்களையுஞ் செய்பவர்கள் தங்கள் துக்கமெல்லாம் விட்டு நீங்க எமலோகத்தை யடைவார்கள். அதற்குப் பின்பு அங்ஙனங் கூறிய இருவகையான தானஞ் செய்தவர்களும் அவனேவலினாற் சுவர்க்கலோகத்தையு மடைவார்கள். ()

[மேல் கிறுத்தமுறையானே அறம் புரிந்தவர்களுக்கு எமராசன்
செய்யுஞ் சிறப்பை மூன்று செய்யுள்களாற்
குளகமாக வுணர்த்துகின்றார்.]

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

தரும நீதியர்க டரும ராசபுரி
யடைய வேதரும ராசனும்
விரைய வேயவரை யெதிர்கொ ளாவரவு
வினவி யேகருணை விழைவினு
லரிய வாதனமு மருளி யேயுதக
விதியு மாதிநடு வந்தமு
மொருமை யோடவர்த முள்ளமு மோகையுற
வுதவி யேமதுர வுரையுமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அரியவாதனம்-சிங்காதனம். உதகவிதி-பாத்தியம், ஆசமனம் அர்க்கியம் என்பவை. ஆதிநடு வந்தம் - பாத முகஞ் சிரசு என்பவைகள். (கூ.சு)

வேத மாநிதனி லோது நீதிபல
மேவி னீரொருமை மேதையா
லோத லானுமைய லாது தேடினரு
மாருயிர்க் குறுதி யாவரே
நாத கீதவின் மாதர் சூழநட
மாட மேவுமுகிலர் நாண்மலர்ப்
போது சேரிரத மேறி யேகடிது
போமி னீரமரர் போகமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மேதை - அறிவு. போகந்தருமிடத்தைப் 'போகம்' என்றது பொருளாகுபெயர். (௧எ)

எண்ணரி யாதொருப லத்தை நீரறமி
யற்றி னீர்தவ றுமின்றியே
கண்ணரி யேயதனை விண்ணின் மீதனுப
வித்து நன்றுமது மாளமுன்
பண்ணி யேயுடைய பாவ லேசமது
பாற வேயெமது பாலணைந்
துன்மி னீர்நரக யாத னைப்பலவு
மென்ற வர்கருளு ரைப்பனே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) லேசம் - சிறிது. (௧அ)

[மேலவர்கள் சுவர்க்கத்தை யடையு முறைமை யுணர்த்துகின்றார்.]

ஏவல் பெற்றுநம னைத்த ணந்திரத
மேறி யேயறிவு தேறியே
தேவர் பெற்றதிவி தேச முற்றதல
போக முற்றுமுறை சேரவே
மேவி யிட்டமுற வேயி ருப்பரிடர்
மேவு தற்கரியர் மெய்மையே
பாவ முற்றினர்கள் பாத ளக்குழியி
லேத மேயினிமை பற்றுமே.

(இ - ள்.) இப்படி எமராச னேவலைப் பெற்றுப் பின்னே யவனை நீங்கிப் புட்பக விமானத்தி லேறி யறிவு தெளிந்து தேவர்கள் பெற்று வாழுஞ் சுவர்க்கலோகத்தினை யடைந்து ஒப்பில்லாத போகங்களை முழுதும் புண்ணியங்களைச் செய்த முறையே வந்து பொருந்த அவற்றினைப் பெற்றுத் தாந்தா மிச்சித்த பொருள்களும் வந்து கைகூட விருந்து வாழ்வார்கள். அதுவல்லாமல் துன்பங்க ளொன்றையும் பொருந்தார்கள். இது சத்தியமே. தேவலோகத்தில் துன்ப மெய்தாதோ வெனிற், பாவஞ் செய்தவர்கள் அடையு நரகக்குழியின் துன்பம் புண்ணியஞ் செய்தவர்க ளடையுஞ் சுவர்க்க வின்பத்திற் பொருந்துமோ பொருந்தாது.

(வி - ரை.) சுவர்க்க பூமியில் துன்பமெய்தினு லதுவு நரக பூமியாய் விடுமென்பதுபற்றி 'ஏத மேயினிமை பற்றமே' என விளுவினர். (௩௯)

[இனிப் புண்ணியஞ் செய்தவர்க ளடையும் பயனைக் கூறி மேற் பாவஞ் செய்தவர்க ளடையும் பய னுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

புண்ணிய பலங்க டம்மைப் புகன்றனம் புவியிற் பாவம்
பண்ணினா பலமுஞ் சொல்வாம் பருப்பத முனிவ! கேணீ
திண்ணியர் பாவ பேதந் தீர்ந்தவர் சிவனு மூண்டென்
றெண்ணிய ரச்ச மெய்தக் கேட்டிடும் போதோ வென்றும்.

(இ - ள்.) பொதிய மலையிலிருக்கு மகத்தியனே! இப்படிப் புண்ணியஞ் செய்தவர்க ளடையும் பலங்களைச் சொன்னோம். மே லிந்தப் பூமியிற் பாவஞ் செய்தவர்க ளடையும் பயனையும் திட சித்தமுடையவராய்ப் பாவவகைகளையு நீங்கிச் சிவனையு முண் டென்று கருதினவர் கேட்குங் காலமே யல்லாம லெக்காலமு மச்ச மடையும்படி சொல்லுகின்றோ. மதனை நீ கேட்பாயாக!

(வி - ரை.) ஓகாரம் பிரிநிலையில் வந்தது. (௪௦)

[பாவஞ் செய்த ஆன்மாக்க ளெல்லாம் எமலோகத்தை யடையு முறைமைக்கோர் பொதுவிதி யுணர்த்துகின்றார்.]

கருவினு ளுயிரு மற்றைக் காயமே தங்க டம்மின்
மருவிய வுயிருந் தொல்லை வல்வினை மாய வச்சம்
பெருகிட மோகந் துன்பம் பிரிந்துடல் பிரியும் போதிற்
றருமுட ரூங்கித் தூதர் செலுத்திட யமனி சாரும்.

(இ-ள்.) கர்ப்பத்திலிருக்கு முயிரும் அதல்லாமல் மிருகவகைகள் முதலிய யோனிபேதங்களி லிருக்கும் ஆன்மாக்களும் முன் னுள்ள பிராரத்த கர்மந் தொலைந்தவாறே பயமு மோகமுந் துயரமு மேலிட்டு நிற்கும்படி யெடுத்த வுடம்பினின்று நீங்கி யப்படி நீங்குங் காலத்தி லுண்டாகும் யாதனா சரீரத்தை யெடுத்து எமதூதர்கள் செலுத்த எமலோகத்தை யடைவார்கள்.

(வி - ரை.) அச்சம்-எமதூதராலடையு நடுக்கம். மோகம்-புத் திரமித்திராதிகளை விட்டுப் போகிறோமேயென் றெண்ணுமாசை துன்பம்-மரணவேதனை. (௪௧)

[மேருமலையின் தென்பாலான வைவசுதமென்னும் எமலோகம் பூமிக்குமேல் வித்தனை யோசனை தூரத்திலிருக்குமென்னு மெல்லையும், நல்வினை தீவினை யுடையவர்கட்கு அது அமையுந் தூரமுமாமாறு முணர்த்துகின்றார்.]

மண்டணின் மேரு வென்னு மலைதனிற் றென்பால் வார்ந்த
வெண்டிக ழெண்பத் தாறா யிரமெனும் யோச னைத்தந்
தண்டமுந் தரித்த கையன் றங்கிய யமனி சாருந்
தொண்டர்க் டமக்குத் தூர மணித்தறந் துன்னி னோர்க்கே.

(இ - ள்.) எண்ணத்தக்க எண்பத்தாறாயிரம் யோசனையளவு பூமிக்குமேல் நீண்டு மேருவென்னும் மலைக்குத் தென்புறத் திசையில் தண்டாயுதத்தைத் தரிக்கும் எமராசனிருந்து வாழும் யமனியென்னும் படைவீடு பொருந்தும். அது பாவிகளுக்கு அதிதூரமாயும் புண்ணியவான்களுக்குச் சமீபமாயுந் தோன்றும்.

(வி - ரை.) இந்தாவதன் இல்லுருபு நான்கனுருபாக மயங்கிற்று. (சஉ)

[நிறுத்தமுறையால் தீவினை செய்தவர்கள் எமலோகத்தை யடையு முறைமை உணர்த்துவான் றொடங்குகின்றார்.]

சித்திர குத்தன் சீவன் செய்தியின் றிறங்க ளெல்லாம்
புத்தியி னொருமை செய்து புகன்றிடச் சமனும் போக்க
வொத்துயிர் கவருந் தூதர் வழியினு மொறுக்க வொல்கிச்
சித்தமுங் கலுழ்ந்து தீயார் செல்கைமுன் செப்பு வாமே.

(இ - ள்.) சித்திரகுத்தனென்னுங் கணக்கன், ஆன்மாக்கள் செய்த கர்மவகைக ளெல்லாவற்றினையுந் தன்னுடைய அறிவினால் நிச்சயித்து, 'இவரிவர் செய்த கர்மமிது' என்று சொல்ல, அதனைக் கேட்டு எமராசனு மேவுகிறபடியினால் சென்று பொருந்தி உயிரை வாங்குகின்ற எமதூதர்கள் பூமியிலிருந்து கொண்டுவரும் வழியிலே மிக்க துயர் செய்ய உள்ள மெலிந்து அழுது தீவினையுடையவர்கள் செல்லு முறைமையை முதற்கட் சொல்லுகின்றோம். (சங)

(வி - ரை) 'கலுழ்ந்து' என்பதற்குக் கலங்கி எனினுமாம்.

[மேலே தீவினையுடையவர்களை எமலோக மடைவிப்பிக்கும் எமதூதர்களுடைய இயல்பினை நான்கு செய்யுளால் உணர்த்துகின்றார்.]

கலிச் சந்தவிருத்தம்

மைத்திகழ்தரு வரையினைநிகர் வடிவுடையவர் வலியார்
மெய்த்திகழ்தரு மரணமுமுளர் விடவரவன வினையார்

குத்திரவினை பலவுமுடையவர் குணமிலவல கொடியார்
இத்தகைமைய ரியமன்றுரை வழிவிலக்குத லிலரே.

(இ - ள்.) எமதூதர்கள், கருமை விளங்குகின்ற அஞ்சன பருவதத்தை யொத்த சரீரத்தையும், மிகுந்த பலங்களையுஞ், சரீரத்தில் விளங்குகின்ற வச்சிராங்கிகளையும், விடத்தை உமிழ்கின்ற பாம்பினையொத்த தீமைத்தொழிலினையும், வஞ்சனைத் தொழில் பலவற்றையும் பாவிகளிடத்து நன்மையில்லாது தீமைகளையே வல்ல கொடுமையினையும் உடையவர்களா யிருப்பார்கள். இத்தன்மையையுடைய தூதர்கள் எமராசனுடைய சொல்லின் வழியைத் தப்பமாட்டார்கள்.

(வி - ரை.) குத்திரவினை - தாமாக முன்னில்லாது வேறொன்றை யேதுவாக்கிக் கோறல். (சச)

வீரமுமுளர் வெகுளியுமுளர் விரைதலுமுள ருடலத்
தீரமுமுளர் சினமுதலிய செறுநெறியினர் திருமுன்
னீரமுமுள ரெரியுமிழ்விழி யிருமையுமுள ரிகலிற்
கூரமுமுளர் கொடுபடையினு முயிருணவல கொடியார்.

(இ - ள்.) வீரத்தையுந், தீவினையோர் மேல்வைத்த கோபத்தையும், எமராசனேவிய கருமங்களில் மனமடியாது செல்லும் விரைவினையும், அழியாத வச்சிரயாக்கையையும், சினமுதலியவற்றைக் கெடுக்கு நன்னெறியையுடைய தபோதனர்கள் சந்நிதியில் இரக்கத்தையும், நெருப்பைச் சொரிகின்ற இரண்டு விழியின் றன்மையையும், பகைத்தவர்களிடத்தில் கொடுமையே செய்யுந் தொழிலையுந், தாமெடுக்கும் ஆயுதங்களைப் பற்றவு முயிரினை உண்ணவல்ல தீமையையும் உடையவர்களா யிருப்பார்கள். (சரு)

காலமுமிது வெனவறிகுநர் கருமமுமிவை யெனவுஞ்
சூலமுமொரு கரமருவினர் சுழல்வலையமு மொருகைப்
பாலனனர னெனுமறிவறு பதர்மனிதர்கள் பயமுற்
றோலமுமிட வுடலினைவிட வுயிர்கவர்வினை யுடையார்.

(இ-ள்.) முன்னே கூறிய அத்தூதர்கள் அவரவர்களுக்கமைத்த காலம் இதுவென்றும், அவரவர்கள் செய்த கர்மங்களிவையென்று மறியவல்லவர்களுமாய், ஒருகையிலே சூலமு மொருகையிலே சுழலுகின்ற பாசக்கயிறும் பொருந்தினவருமாய்ச் சங்கார கர்த்தாவாகிய அரனே யுலகபரிபாலனனென் றுணரு மறிவில்லாத பதரையொத்த

பாவனாட்கள் பயப்பட் டலற வுயிரானது உடம்பைவிட்டு நீங்க அவ்வழி யினை வாங்குங் கொலைத்தொழிலை யுடையவர்களுமா யிருப்பார்கள். (சக)

(வி - ரை.) பாவனன்-காப்போன்.

நிட்டூரதூதர் நினைவழியவு நிலையிலாச்சில ருடலைக்
கட்டுவர்முது குறவளைவுறக் கயிறுறவிரு காமும்
பிட்டுதிரமு மொழுகிடவிடர் பெருகிடவல றிடவும்
வெட்டுவருயர் விண்ணிலலையா விசிறுவரற வெடியார்.

(இ - ள்.) நிட்டூரத்தையு மிகவும் வெடித்த சொல்லையு முடையவர்களாகிய எமதூதர்கள்: தம்மைக் கண்டவுடனே அறிவழிந்து போகாநிற்கவும் விடாம லொரு நிலையுமில்லாத சில பாவிக ளுடம்பைத் திருப்பி மடக்கி வளைத்து, முதுகிற் பொருந்த விரண்டு கைகளையு முராயிருக்க கயிற்றினாற் சேர்த்துக் கட்டி யுடம்பெல்லாம் பிளந்து இரத்தந் தாரை யொழுகவுந் துக்கம் பெருகவும் வாய்விட்டலறவும் வெட்டி, உயர்ந்த ஆகாசத்திற் சுழலவெடுத்து வீசுவார்கள்.

[இப்படிச் சொல்லிய எமதூதர்களால் பாவஞ் செய்தவர்கள் எமலோகத்துக்குப் போம் பொல்லாத வழியை யடைவார்களென் றுணர்த்துகின்றார்.]

இத்தகைமைய வியமனபட ரிடைவிடலில வலியாற்
குத்திரர்குண மறுசிறுமையர் கொடியனவினை யுடையார்
நைத்துளமுட னலையுமுற நயமியதுணை யறவே
சித்திரமிகு துயருறுவழி செறிவர்கள்பிறி வறவே.

(இ - ள்.) இக்குணங்களோடு பொருந்தும் எமதூதர்கள் நீங்காத வலிமையினால் வஞ்சகர்களுமாய், நற்குணமில்லாத அற்ப புத்தியை யுடையவர்களுமாய்க், கொடுமையை யுடையனவாகிய தீவினையுடைய பாவிகள் உள்ள மெலிந்து துன்பமு மேலிட நலம் பொருந்திய துணையுமற்றுப் பலவகையாக மிகுந்த துயரம் பொருந்திய வழியில் நீங்காதடைவார்கள். (சஅ)

[அவ்வழியிலுள்ள துயரத்தை ''இரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

கலிநிலைத்துறை

கண்டக முறுநெறி செறிசில கரிசர்கள் கதறு
விண்டிட விரைவினர் விடுமுறை யறிகிலர் விழுவார்
துண்டிகழ் சிலைநுதி செறிநெறி குறுகிய சிறியார்
பிண்டிட வினையடி பிசைபுற விழுவர்கள் பிழையார்.

(இ - ள்.) தாந்தாஞ் செய்த பாவத்தினால் பெருமுட்க ளடர்ந்த வழியிலே எமபுரிக்குச் செல்லுஞ் சில பாவிகள் அம்முட்கள் காலிலே தைக்க அலறிச் செல்லுவார்கள். செல்லும்போ தந்த முட்களைப் பிடுங்கிப் போட்டுச் செல்லு முறைமையை யறியாமலே வீழ்ந்து கிடப்பார்கள். பிழை யமைந்த சில சிறியார்கள் திண்ணிமை யான கூறிய கற்கள் பரந்த வழியி லணுகி யக்கற்க ளிரண்டு காலி லுஞ் சிதையும்படி தைப்பதனாலே நிலத்தில் வீழ்வார்கள். (௨௯)

அளறுறு நெறியிடை யடியுற விடுமுறை யறியா
ருளமறு கிடவுட னடலையு முறவலி யொழிவார்
பளமுறு நெறிசிலர் படர்வர்க ளிடர்பல படவே
பிளவுற வுடன்முழு தரிகுசை நுதிவழி பிரியார்.

(இ - ள்.) சில பாவிகள், சேறு பரந்த வழியில் அடிவைக்க அச்சேறு காலினின்றும் விடுமுறையைக் காணுமல் மனஞ் சுழலச் சரீரந் துக்கத்தை யடையத் தங்கள் பலமுங் கெடுவார்கள். சிலர், ஆழ்ந்த பள்ளங்கள் பொருந்திய வழியில் துக்கங்கள் பலவு முண்டாகச் செல்வார்கள். சிலர், உடம்பெல்லாம் பிளக்க அரியுங் கூரிய வாயினையுடைய நாணற்புல் பொருந்திய வழியை நீங்காமல் செல்லுவார்கள்.

(வி-ரை.) நடலை-துன்பம். (௩௦)

விடமமு முறுதடம் விரவிய கலர்சிலர் மெலிவார்
தடவரை யிடைநடை தளர்வுற வுறவறு தமியார்
பொடியறு தழல்வழி புகுதுவர் நிலையிலர் புலியார்
படுகுழி விடமமு மடைவர்கள் சிலரிடர் படவே.

(இ - ள்.) சில பாவிகள், செவ்வையான வழியில்லாமல் வஞ்சனை மிகுந்த வழியிற் சென்றதனாற் றுக்கத்தை யடைவார்கள். சிலர், பெரிய மலைவழியிற் சென் றேற்ற விறக்கங்களிலே நடைகூடாமற் கால்தளரத் தமக்கோ ருறவுமில்லாத தனியராய் நிற்பார்கள். சிலர், தமக்கொரு நிலையு மில்லாதவராய்ப் பொடி மூடாதெரியு நெருப்போடு பொருந்திய வழியிற் புகுவார்கள். சிலர், படுகுழி முதலிய வஞ்சனைகள் அமைந்த வழியிலே சென்று துக்கத்தை யடைவார்கள்.

(வி - ரை.) விஷமம் 'விடமம்' எனத் திரிந்தது. தமி - தனி. புல்லியா ரென்பது இடைக் குறைந்து நின்றது. (௩௧)

சரங்கள் சகலமு முறுநெறி செறிசில தமியார்
வெருவுவ ரழனிகர் வியன்மணை லிடைவழி விழுவார்
நிரைமுளை நிறுவிய நெறியிடை யடிதளர் நிலையார்
பருவர லுறுவர்கண் முளைமுளு முறுநெறி படர்வார்.

(இ - ள்.) சிலர், அம்புபோ லறுக்கு மோடுஞ் சல்லியும் பரந்த வழியிலே போய்த் தமக்கொரு துணையுமில்லாமல் அந்த வழி தொலையாமையினாலே நடுங்குவார்கள். சிலர், நெருப்பினையொத்த சுடுமணல் பரந்த வழியிலேபோய்ச் சூடு பொறுக்காமல் விழுவார்கள். சிலர், ஒழுங்குபட வசிகளை நிறுத்திய வழியிலே போய் அந்த வசிகள் காலிலே தைக்க அதனாற் போகமாட்டாமல் அடி தளரு நிலையை யுடையராவார்கள். சிலர், மூங்கிலின் முட்கள் பரந்த வழியிலேபோயவற்றினாற் றுன்ப மடைவார்கள்.

(வி - ரை.) நெறி-வழி. வசி-வாள். (௩௫)

கூரிரு ளெறிசெறி கொடுமையர் சிலர்நிலை குலைவார்
காரய வளிதொடர் கனலனல் வழியிடை கலுழ்வா
ரராழல் வனநெறி யடைகுநர் சிலர்நினை வழிவார்
தீரவு மறிகில ரழனிகர் சிலைசெறி சிறியார்.

(இ - ள்.) சிலர், மிகுந்த இருள் பரந்த வழியிலே போய் வெளி காணாமலே நிலையழிவார்கள். சிலர், தீயொழுகக் காய்ச்சிய கரிய விருப்புச்சங்கிலி பின்னிக்கிடக்கும் வழியிலே போய் அடியிடமாட்டாமல் அழுவார்கள். சிலர், தீக்காட்டையுடைய வழியிலே போய் அந்தக் காட்டுத் தீயிற்பட்டு அறிவழிந்து நிற்பார்கள். சிலர், நெருப்பைப்போலச் சுடுகின்ற கற்கள் பொருந்திய வழியிலே போய் அதை நீங்கும் வகையுந் தெரியாலே மயங்கி நிற்பார்கள். ()

உடைவர்கள் பனிநனி யுறுநெறி யதுதனை யுறுவார்
மிடறள வுறுமணல் விரவிய கவர்சிலர் மெலிவார்
சுடரன துளிமழை சொரிவழி தனினிலை தொலைவார்
வடிவற மயலுற வறளியி னழல்வச மறுவார்.

(இ - ள்.) சிலர், பனி மிகவும் பொருந்திய வழியி லடைந்து பனியினாலே உள்ள முடைவார்கள். சிலர், கழுத்தள வமிழ்ந்து மணல் பரந்த வழியிலே போய் வருந்துவார்கள். சிலர், நெருப்புப் போன்ற துளியினையுடைய மழை பெய்யும் வழியிற் போய் அதனால் நிலையழிவார்கள். சிலர், வறளிநெருப்புப் பொருந்திய வழியிலேபோய் தம் மேனிகெடக் கலக்கமுண்டாகத் தமது சரீரத்தின் வலி கெடுவார்கள். (௩௭)

சிங்கமு முறுநெறி செறிவின ரறிவிலர் செயலுந்
துங்கிய புலிவன மடைகுநர் நிலையிலர் தளர்வார்
வெங்கொலை மிருகமு முடலட வொருவழி விழுவார்
விங்கிட மசகமு முடலினை நினைவினை விடுவார்.

(இ - ள்.) சிலர், சிங்கங்கள் பொருந்திய வழியிலே போய் அவைகள் பாய்தலினாலே செயலும் அறிவுமில்லாமல் மயங்குவார்கள். சிலர், புலிகள் நெருங்கிய காட்டு வழிகளிற் போய் அதனாலே தஞ் செயல் கெட்டு வருந்துவார்கள். சிலர், மற்றுமுள்ள வெவ்விய கொலைசெய்யு மிருகங்களுந் தம்முடம்பை யழிக்கப் பிறிதொரு வழியிலே போய்க் கலங்கி விழுவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போய்ப் பெருங் கொசுக்க ளுடம்பைத் துளைக்க வருந்தித் தம் மறிவொழிவார்கள். (௩௩)

உளைவர்க ளுடல்குடை கிருமிக ளுறுநெறி யுறுவார்
செளுகையு முடலட வொருவழி யறிவிலர் செறிவார்
தொளையுற வுடலடு சிறுபற வைகளொடு சுழல்வார்
வினைவற விடவர வடர்வழி யயருற விழுவார்

(இ - ள்.) சிலர், உடம்பைக் குடையும் புழுக்கள் நெருங்கிய வழியிலே போய் வருந்துவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போய் அட்டைகள் வந்து உடம்பைக் கடிக்க அதனாலே அறிவும் போய் மயங்குவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போய் உடம்பைத் தொளைக்குஞ் சிறிய பறவைகள் பலவற்றினாலுங் கொத்துண்டுங் கடியுண்டுஞ் சுழலுவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போய் நல்வினை விளைவில்லாமையாலே விஷத்தை யுமிழும் பெரும்பாம்புகள் வந்து கடிக்க அதனாலே சோர்வடைந்து விழுவார்கள். (௩௪)

கடகரி தொடர்வழி யழுதழு தயர்வொடு கலுழ்வார்
உடலட வுளியமு மொருவழி நினைவினை யொழிவார்
இடபமு மடர்வழி யிடர்பல படுவர்க ளெளியார்
இடமுடை மயிடமு மடர்வழி யழிவர்கள் செயலோ.

(இ - ள்) சிலர், மதம்பட்ட யானைகள் பாயும் வழியிலே போயந்த யானைகள் பாய்தலினாலே யழுதழுது சோர்வினோடு கலங்குவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போய்க் கரடிகள்வந் துடம்பைக் கவ்வ அதனா லறிவு நீங்குவார்கள். சிலர், இடபங்க ணெருங்கிய வழியிலே போய் அவற்றினாற் றுன்பங்கள் பலவும் பட் டவற்றினைத் தடுக்கமாட்டாம லெளியராய் நிற்பார்கள். சிலர்,

கலியினையுடைய காட்டெருமைகள் பாயும் வழியிலே போய்ச் செயலொன்றோ அழிவது, மனமு மழிவார்கள்.

(வி - ரை.) ஒகாரம் ஒழியிசைக்கண் வந்தது. (௬எ)

ஒட்டக முறுநெறி யுடல்வினை கெடநினை வொழிவார்
நிட்டுர மகளிரு மடர்வழி யழிவது நினைவோ
வெட்டிய நிசிசரர் மிடைவழி யுடன்வினை விடுவார்
தொட்டிட விறலுறு பிணிபல வயர்வொடு சுழல்வார்.

(இ - ள்.) சிலர், ஒட்டகங்கள் மிகுந்த வழியிலேபோ யுடம்பின் செயல் கெட அறிவழிவார்கள். சிலர், கொடுமையைச் செய்யு மிடாகினிகளாகிய குரூரமகளிர் நெருங்கிய வழியிலேபோனவர்கள் செய்யுந் துயரினா லறிவொன்றோ அழிவது, செயலு மழிவார்கள். சிலர், கொடுமையான இராட்சதர் நெருங்கிய வழியிலேபோ யுடம்பின் செய லழிவார்கள். சிலர், பிறிதொரு வழியில் வலியமைந்த வியாதிகள் பலவும் வந்து பிடிக்கச் சோர்வினாலே யுழல்வார்கள்.

(வி - ரை.) வெட்டிமை - கொடுமை. (௬அ)

ஊறுற வுடலிடை யுணர்விலர் சரமழை யுறவே
கூறுற வுடல்பல குலிசம தாறுமழை கொளவே
நீறுற வுடல்கெட வொருவழி யழிவது நினைவோ
தேறிய வழன்மழை பலபல முறையொடு தெறவே.

(இ - ள்.) சிலர், பிறிதொரு வழியிலேபோ யுடம்பி லிடையூறு பொருந்த அம்புமாரி சொரிய அறிவு கெடுவார்கள். சிலர், பிறிதொரு வழியிலேபோ யுடம்பு பலவாகத் துணிக்கும் வச்சிராயுதங்களாகிய பெருமழை சொரிய வதனா லறிவழிவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போய்ப் பிரகாசிக்கும் நெருப்பு மழைகள் பலபல வகையாகப் பெய்து சுடுகையினாலே யுடம்பு வெந்து நீறாக அறிவுமாத்திரமோ அழிவது, செயலு மழிவார்கள். (௬௯)

கடுகிய வளிலனு முறுநெறி யுகளொடு கலுழ்வார்
பொடிமழை பொழிவழி நிலைபற வலவொடு புகுவார்
உடல்பிள வொருவழி மழைபொழி சிலையுற வுளைவா
ரிடிவிழ விழுமினு மிடருற நிலவுத லிலரே.

(இ - ள்.) சிலர், தூளோடு பொருந்தி விரைந்துவரும் பெருங்காற்றடிக்கும் வழியிலே போய்க் கலங்குவார்கள். சிலர், தூளிமழை சொரியும் வழியிலே போய் நிலையற்றுத் துயரமாய்ப் போவார்கள்,

சிலர், பிறிதொரு வழியிலேபோ யுடம்பு பிண்டு போகும்படி கன் மழை பொழிவதனால் வருந்துவார்கள். சிலர், பிறிதொரு வழியிலே போ யிடியு மின்னலும் விழ அவற்றினாலே துயரமடைந்து தாம் அறிவோடு பிரகாசிப்பதுபோய் நிலையழிவார்கள். (௬௦)

ஆயுத வருடமு மொருவழி யுடலினை யரியக்
காய்கன லினைநிகர் கடுவறல் சுடவுடல் கலுழ்வார்
ஓய்வர்கள் குளிர்பனி யனிலனு முறுவழி யுளைவார்
எய்வர்க ளினையன விடர்பல வழியுறு மெளியார்.

(இ - ள்.) சிலர், பிறிதொரு வழியிலே போ யாயுத மழையாக விழுந்து உடம்பைத் துண்டிக்கவும், எரியும் நெருப்புக்கொத்த கச்சு நீர் மழை விழுந்து உடம்பைச் சுடவும், ஆற்றாமற் கலங்கிச் சோர்ந்து விழுவார்கள். சிலர், குளிர்ந்த பனியும் பனிக்காற்றும் பொருந்திய வழியிலேபோ யவற்றினால் மிகவும் வருத்த மடைவார்கள். இப்படிச் சொல்லிய வழியிலே போகும் நல்வினை வலி யில்லாதவர்களித்தன்மை யுள்ளனவாகிய துயரங்கள் பலவற்றையு மனுபவிப்பார்கள். (௬௧)

கடுகிய பசியுற வொருவழி யறிவிலர் கலுழ்வார்
விடுமுறை யறிகிலர் விரவிய கொடுமைய வினையார்
இடர்படு வதுமுனை வினையென வுளமதி லெணுவார்
திடமுடை யமபடர் வலிசெய வழியொடு செறிவார்.

(இ - ள்.) சிலர், பிறிதொரு வழியிலே போய் மிகுந்த பசி மேலிட அதனை லறிவின்றி யப்பசி தீரு முறைமையை யறியாதவராய்க் கலங்குவார்கள். இப்படிப் பொருந்திய தீமையையுடைய யாவிகள், 'யாமித் துயரப்படுவது முன்செய்த பாவம்' என்று தம்முள்ளத்தில் விசாரிப்பார்கள். அப் பாவிகளெல்லா மிகுந்த பலத்தினையுடைய எமதூதர்கள் வன்மைசெய்யத் துயரமடைந்து எமலோகத்துக்குப் போகும் வழியிலே போவார்கள். (௬௨)

[அத் தீவினை யுடையோரை எமதூதர்கள் கொண்டுபோகும் முறைமையைப் பதினாறு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்.

சிலரைத் தொடரிற் செறிவித் தடியிற்
றலையைத் தறையிற் றகவைத் துயர்வா
னலையிற் சரணத் தினைவைத் திகவா
வலனுற் றலறக் கொடுபோ யடைவார்,

(இ - ள்.) எமதூதர்கள், சில தீவினையுடையோரைக் காலி லிருப்புச் சங்கிலி பூட்டித், தலையை நிலத்தில் வைத்துச், சங்கிலி யோடு பொருந்திய காலிரண்டையு முயர்த்த ஆகாசத்திலாக்கி, உள்ளத்தி லிரக்கமு மொழிந்து, அவர்கள் துயரமடைந்து கிடந் தலறும்படி யிழுத்துக்கொண்டுபோ யெமலோகத்தை யடைவார்கள்.

(வி - ரை.) எமதூதரென்னு மெழுவாயை வருவிக்க. (௬௯)

உரையிற் கொடியா ருரமிக் குடையார்
திரையத் துறுவார் தமைநிட் டுரமே
தரையிற் கவிழத் தடமார் முகமு
மரையக் கொடுபோ யடைவித் திடுவார்.

(இ - ள்.) கொடிய சொல்லையு மிருந்த வலியையுந் தறுகண்மை யையு முடையவர்களா யிருக்கிற எமதூதர்கள், நரகத்திற் போவோராகிய சில தீவினை யுடையோரை நிலத்திற் பெரிய மார்பு முகங் கவிழத் தள்ளி யவ்வுறுப்புகள் நிலத்தோடு தேய்ப்புண்ண இழுத்துக் கொண்டுபோ யெமலோகத்தை யடைவார்கள். (௭௰)

நேசற் றவரே நிலையற் றவரைத்
தேசற் றவரைச் சிலரைச் செறியப்
பாசத் துடலம் பறியப் பதறிக்
கோசத் தமுறக் கொடுபோ யடைவார்.

(இ - ள்.) சற்றும் ஆன்மாக்களிடத் திரக்கமில்லாத எமதூதர் கள், தருமமார்க்கத்தி னில்லாதவருமாய் மறுமைப்புக ழில்லாதவர் களுமாகிய சில தீவினையுடையோரைப் பாசக் கயிற்றினால் இறுக்கிக் கட்டி யுடம்பு வருந்துவதனாலே பதறித் துடித்துக் கோவென் றலறுஞ் சத்தந் திசைகளெங்கு மெழக் கொண்டுபோ யெமலோகத்தை யடைவார்கள்.

(வி - ரை.) செறிதல் - கட்டமுந்துதல், பரிதல்-வருந்துதல்.

சிந்தத் துருகா தவரைத் திறலார்
மத்தக் களிறே யனையார் வலியா
ரத்தத் தமரங் குசமுள் ளதனாற்
கொத்திக் குளமுங் கொடுபோ யடைவார்.

(இ - ள்.) தருமத்தின் மனமுருகாத சில தீவினையுடையோர் களை, வெற்றி நிறைந்த மதயானைக் கொத்தவர்களாகி யதிக பலத் தையுமுடைய எமதூதர்களானோர் தமது கையிலிருக்குங் குடாரியி

னுனியினுல் நெற்றியையுங் கொத்தி யிழுத்துக்கொண்டுபோ யெம லோகத்தை யடைவார்கள்.

(வி - ரை.) குளம் - நெற்றி. 'குளமும்' என்னு மும்மை மந் நளவுறுப்புகளுமெனக் கொள்ளக்கிடந்தது. (சுசா)

களைகண் ணிலரைக் களவுள் ளவரைத்
தளரும் படிவெஞ் சமனுர் தமரே
யுளைவுள் ளுறவு முடல்பின் ளுறவு
முளைமுள் வனமே கொடுபோய் முனிவார்.

(இ-ள்.) கொடிய எமதூதர்களாயினோர், ஆன்மாக்களிடத் திரக்கமில்லாதவரையுங் கள்வரையும் வருத்தும்வண்ணம் அவர்க ளுள்ளத்திற் றுயர முண்டாகவு முடம்பு பிண்டபிண்ட போகவு மூங்கின் முட் காட்டிலே யீர்த்துக் கொண்டுபோய்க் கோபிப்பார்கள். (சுள)

பழுதே பகர்வார் பயில்பா வியரைக்
குழையா தவரைக் குளிர்வாய் மொழியே
விழையா தவரைக் கடிதே வியனு
ரழல்சேர் வழியே கொடுபோ யடைவார்.

(இ - ள்.) எமதூதராயினோர், கோட்சொல்லுதன் முதலிய பாவஞ் செய்தவர்களையுந், தருமத்தின் மனநெகிழ்ச்சி யில்லாதவரையும், பெரியோர்கள்குளிர்ந்த திருவாக்கை விரும்பாதவர்களையுஞ், சடுதியிலே நிறைந்து மிகவுந் தீப்பரந்த வழியிற் கொண்டுபோ யெமலோகத்தை யடைவார்கள். (சுஅ)

அத்தத் தினையு மடரக் கடிதே
பொத்திப் புறமே கயிறும் புகவே
துத்தத் தலறத் துவளத் துவளக்
குத்திச் சிலரைக் கொடுபோ யடைவர்.

(இ - ள்.) எமதூதராயினோர், சில பாவிகளை யிரண்டு கையையு முதுகுப்புறத்து வாங்கித் தோளோடு தோள் சந்திக்கக் கூட்டிப் பாசக் கயிற்றினு லழுந்தக் கட்டி யவர்க ளலற வயிற்றிற் றுவளக் குவளக் குத்திக்கொண்டுபோய் யெமலோகத்தை யடைவார்கள்.

(வி - ரை.) துத்தம் - வயிறு. (சுகூ)

சிலரைக் கரமுஞ் செறிவித் ததனைத்
தனையத் தொடருந் தழலைப் புரையு

முளையைச் செறிவித் ததிரா முனியா
வுளையக் கடிதே சமனூ ருறுவார்.

(இ - ள்.) எமதூதர்கள், சில தீவினை யுடையோரை யிரண்டு கையையுங் கூட்டி யந்தக் கைகளிற் சங்கிலியும் பூணவிட் டுள்ளங் கைகளி னுருவ நெருப்புப்போன்ற முளையையுங் கடாவி யதட்டி யவர்கள் வருந்தும்படி கோபித்துச் சடுதியி லெமலோகத்திற் கொண்டு போவார்கள். (எ0)

கண்டத் துறவே கயிறுஞ் சிலரைக்
கொண்டெய்த் தலறப் புகுவார் கொடியார்
துண்டப் பிறைபோற் சுழல்வாள் பிடரிற்
புண்டைத் தலறச் சமனூர் புகுவார்.

(இ - ள்.) கொடிய எமதூதர்கள், சில பாவிகளைப் பாசக்கயிறு கழுத்தி லிறுகப் பூட்டி யவர்கள் வருந்தி யலறும்படி யிழுத்துக் கொண்டு போவார்கள். சிலரை யிளம்பிறைபோல் வளைந்த கொடு வாளாற் பிடரியிலே புண்படத் தைத் தலறும்படி வெட்டி யெமபுரி யிற் கொண்டுபோவார்கள்

(வி - ரை.) ஈண்டுச் 'சுழல்' என்பது வளைவின்மேற்று. (எக)

நாவிற் றுளையா நடுவே முளையு
மேவக் கயிறும் விரவப் பணியே
நோவித் தலறச் சிலநொய் யவரைப்
பாவப் பலமுற் றிலையே படர்வார்.

(இ - ள்.) எமதூதராயினோர், சில பாவிகளை நாவினைத் தொளைத்து, நடுவே முளையுங் கடாவி, அதனோடு பொருந்தக் கயிறுங் கோத்து வருந்தச் செய்து அவர்க ளலறும்படி தீவினைப்பயன் பலி க்கு மெல்லையாகிய எமலோகத்திற் கொண்டுபோவார்கள்.

(வி - ரை.) பண்ணி யென்பது இடைக் குறைந்து நின்றது.

குப்பத் திடையே கயிறுங் கொளுவா
னையத் துயரம் பலவு நவிலா
மையற் படவே மனமுஞ் சிலரைத்
தெய்வச் சமனூர் புரியைச் செறிவார்.

(இ - ள்.) எமதூதர்கள் சில பாவிகளைக் கோசத்திற் கயிறு கொளுவி யுடல் வருந்தவும் மனமயங்கவுந் துயரங்கள் பலவு முண் டாக்கித் தங்கள் தெய்வமான எமராசனது நகரத்தை யடைவார்கள்.

தூண்டப் புடையிற் றொளைசெய் ததனிற்
கண்டிக் கயிறுங் கடிதே யடைவார்
புண்டைத் துறவே கவுளும் புகுவார்
கொண்டக் கணமே சிலரைக் கொடியார்.

(இ - ள்.) கொடுமையையுடைய எமதூதர்கள், சில பாவிகளை மூக்கின் புறத்திற் றொளைத்து அதிலே பாசக்கயிற்றையுங் கோத்துக் கட்டிச் சடுதியிற் கொண்டுபோவார்கள். சில பாவிகளைக் கதுப்பிலே புண்பொருந்தத் தொளைத்துக் கயிறு பூட்டி யிழுத்துக்கொண் டக்கணத்திலே எமலோகத்திற் புகுவார்கள்.

(வி-ரை.) கட்டி யென்பது மெலிக்கும்வழி மெலிந்தது. (௭௪)

மூத்தத் துறவே தொளையு முளையுங்
கொத்திச் சிலரைக் கொடுபோ யடைவார்
சித்தந் தயர்வுஞ் செறியச் சிலரைத்
துத்தத் தொடரிற் சமனூர் தொடர்வார்

(இ - ள்.) எமதூதர்கள், சில பாவிகளை யுதடுகளிற் றொளையுண்டாக முளையையும் அடித் திழுத்துக்கொண்டு போவார்கள். சில பாவிகளை மனத்திற் சோர்வுண்டாக வயிற்றிலே கட்டிய கயிற்றினா லிழுத்துக்கொண் டெமலோகத்திற் போவார்கள். (௭௫)

கன்னத் தொளையிற் கயிறுஞ் செறியா
வென்னித் துயர்தா னெனவொரந் தழவே
துன்னப் படுநற் றுணையு மறவே
தென்னற் றிசையிற் புரியைச் செறிவார்.

(இ - ள்.) சில பாவிகளை யிரண்டு செவித் துவாரங்களினு மொருவக் கயிற்றைக் கோத்து, 'இத்துயர மெந்தப் பாவத்தால் வந்ததோ?' என்று வருந்தி யழவும், அதை நீக்குதற்கோர் நற்றுணையுமற் றொழியவுங் கொண்டுபோய்த் தென்றிசையி லுண்டாகிய நல்ல எமலோகத்தி லடைவார்கள். (௭௬)

மூகவா யுறவே கயிறும் மூனியத்
தகவோ வெனவோரந் தழுவார் தமையே
யகழும் புறமு மழியக் கொடுபோ
யிகழு மறிவா னுழையே யிசைவார்.

(இ - ள்.) எமதூதர்கள், கீழ்வாய்ப் புறத்திலே கயிறு பொருந்துங் கோத்து வருத்தும்பொழுது 'இது முறைமையோ' என்று வருந்தி யழுஞ் சில பாவிகளை யுள்ளமு முடலு மழியக் கொண்டுபோ

யிம்மை மறுமை யிரண்டிலும் ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங் களை யீதென்றுப் பிரித்தறியுந் தன்மையை யுடையவனாகிய எம ராசனருகே யடைவார்கள். (எஎ)

அங்கத் தெவையு மழியச் சிலரைப்
பங்கித் தடைவார் பயிலத் துயரும்
பொங்கப் புலைநீர் புகர்வான் முதல்கொண்
டோங்கித் தடிவார் சமனூ ருறுவார்.

(இ - ள்.) எமதூதர்கள், சில பாவிகளைச் சரீரத்திலுள்ள வுறுப் பெல்லாஞ் சிதையும்படி யறுத்தறுத்துக் கொண்டு போவார்கள். சில பாவிகளைத் துன்ப மேன்மேலு முண்டாக விரத்தம் பெருகப் புகரினை யுடைய வாள் முதலிய ஆயுதங்களைக் கொண்டு ஓங்கி வெட்டுவார்கள். இப்படி வழியிற் பெருந் துயரங்கள் உண்டாக்கி யெமபுரியிற் கொண்டடைவார்கள்.

(வி - ரை.) புலைநீர்-இரத்தம். புகர்-தோயல்வாய்ப்பா லெழுந்த நீதார் நிறம். 'ஓங்கி' என்பது குறுகும்வழி குறுகிற்று. (எஅ)

[இப்படி எமதூதர்கள் கொண்டு போகப் பாவஞ் செய்தவர்க ளெமபுரத்தை யடைவரென் றுணர்த்துகின்றார்.]

தக்கார் வரவிற் றவறே புரிவார்
தொக்கார் வமிலார் நிலையே துமிலா
ருக்கே வழியிற் றுயர்வந் துறவே
புக்கார் விரையத் தருமன் புரியே.

(இ - ள்.) தம்மிடத்திற் பெரியோர்கள் வருங்காலத்தி லெதிர் கொள்ளல், பணிதல் முதலாயினவைகளைச் செய்யா திகழ்ந்தவர்க ளும், யாவரிடத்து மனநெகிழ்ந் தன்பு செய்யாதவர்களுமா யதனாற் றமக்கொரு நிலையில்லாதவர்களுமான பாவிகள் செல்லும் வழியி லெமதூதரா லிப்படித் துயரங்கண் மேன்மேலும் வந்து பொருந்த வினை லுள்ள மழிந்து சடுதியி லெமலோகத்திற் புகுவார்கள். (எகூ)

[இப்படித் தீவினை யுடையோரைக் கொண்டுபோகும் எமதூதர்கள் எமராசன் முன் சென்று அறிவிக்கு முறைமையும் 'இனிமேல் இவர்களைச் செய்யுந் திறம் யாது?' என்று வினவு முறைமையு மிரண்டு செய்யுளால் உணர்த்துகின்றார்.]

எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

அழியாத வான்மையின ரகலாத வாய்மையின
ரதிபாத காதி யறிவார்

வழியாத நாகுசலர் மவிமாசு மேவினரை
மறவாத மாண றிவினர்
ஒழியாத வூசலென வுழல்வார்கள் பூதலமு
மொழியாத வாவி யுடையார்
பழியாத பான்மையரை வழுவாத தூதுவர்கள்
பதியாத மீது பணியா.

(இ - ள்.) ஒருகாலுங் கெடாத ஆண்மையையும், எமராசன் சொல்லிய வாக்கைத் தப்பாமற் செய்யுந் தகைமைப்பாட்டையும், அதிபாதக முதலிய பாவவகைகளைச் செய்பவர்களை யுள்ளபடி யறியுந் தன்மையையும், அதற்குச் சொன்ன நெறியிலே யவர்கள் வாதனை பண்ணுந் தெள்ளிமையையும், பாவங்கள் செய்தவர்களை மறவாத மாட்சிமைப்பட்ட அறிவினையும், என்றும் ஆட்டொழியாத வூசல் போலப் பூமியிற்போ யான்மாக்களைக் கொண்டுவருந் தன்மையையும், உடம்பி லிறவாத வயிரையுடைய நித்தியத்தையுஞ், சிவன்முத லாயினவர்களை யிகழாத நல்வினைப் பகுதியுடையோரை வருத்தாது விட்டு நீங்கு மறிவினையு முடைய எமதூதர்கள் தம் மிறைவனாகிய எமராசன் பாதங்களில் வணங்கி,

(வி - ரை.) வாதனை - மிகுந்த வருத்தம். 'பூதலமும்' என்ற வும்மையால் எமலோகமு மெனவறிக. (அ௦)

பாவஞ்செய் பாவியர்கள் பாலெம்மை யேவவுன
பாசங்கை மேவ வெளிதே
யேவஞ்செய் தார்விரைய லேவந்து ளார்வழியி
லேறுண்டு ளார்பெ ரிதுமே
நோவங்கு ளார்பரம நோலெங்கு ளாரிவர்க
ளூறங்கு வாய்மை நுவலார்
தேவென்செய் வாமினியெ னோவென்று கூறுவர்கள்
சேடஞ்செய் வானு மெணியே.

(இ - ள்.) 'சுவாமி! பாவஞ்செய்த தீவினை யுடையோர்களிடத்து நீரெங்களை யேவுதலினாலு மும்முடைய பாச மெங்கள் கையில் பொருந்துவதனாலுங் குற்றங்களைச் செய்தவர்க ளெளிதாகவே சந்நிதியில் வந்தார்கள். இவர்கள் வழியிலே மிகவும் வாதை யடைந்தார்கள். அதனா லவ்விடத்தில் மிகவும் வருத்தத்தை யுடையவர்க ளானார்கள். இவர்கள் வேதாகமங்களிற் சொன்னவழி நடவாதவர்க ளாகையினால் காலபாசத்தி னின்றுந் தப்புதற் கெங்கே மேலாகிய வலியுள்ளவ

ராவார்கள்? இனி யிவர்களை யாது தண்டஞ் செய்வோம்?' என்று விண்ணப்பஞ் செய்வார்கள்.

(வி - ரை.) எவ்வம் 'எவம்' என விகாரமாயிற்று. நோவ்-வலி. தூதுவர்களென்னு மெழுவாய் கூறுவர்களென்னும் பயனிலையோடு முடிந்தது. (அக)

[முற்கூறிய தீவினையுடையோர் வந்து எமராசனைக் கண்டவளவி லுண்டாவதோர் நடுக்க முணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

விண்டவர்கள் வேதநெறி வெய்யவினை தன்னைக்
கொண்டவர்கள் வஞ்சனைய நெஞ்சினர் கொதிக்குந்
தண்டதர னைச்சமனை நச்சரவு தன்னைக்
கண்டன ரெனக்கலுழ்வர் கண்டிடுகணத்தே.

(இ - ள்.) வேதாகம வழியிலே நடவாம லதனை யிகழ்ந்தவர்களும், கொடிய தீவினைச் செயல்களைப் பொருளென் றுட்கொண்டவர்களுமாகிய வஞ்சகம் பொருந்திய சிந்தையையுடைய பாவிகள், தண்டத்தைத் தரித்துக் கோபாக்கினியே பொங்கும் எமராசனைக் கண்டவளவிலே நஞ்சை உமிழும் பெரும்பாம்பினைக் கண்டவர்கள் போலக் கலங்குவார்கள்.

(வி - ரை.) கலுழ்தல்-கலக்கம். (அஉ)

[எமராசன் தன்மையையும், அவனைக் கண்டவர்கள் மனம்வேறுபடுந் தன்மையையும், 'மையனைய மேனியன்' என்னுஞ் செய்யுள் முதல் 'எவலரு ளெங்கள் பெருமான்' என்னுஞ் செய்யு ளீருக வொருதொடராக வுணர்த்துகின்றார்.]

மையனைய மேனியனை வாய்ந்தவறு மூன்று
கையுடை யனைக்கடி யனைக்கடிய ருள்ள
நையவுமிழ் வெய்யவழ லுட்டமுடை யானைத்
துய்யபிறை போலெயி றுறச்சுளி முகத்தே.

(இ - ள்.) அஞ்ஞனம் போன்ற திருமேனியையும், வலியமைந்த பதினெட்டுக் கைகளையும், அதிகோரத்தையுந், தூய்மையு மமைந்த விளம்பிறையைப் போன்ற பற்றுகள் தோன்றச் சிறுமுகத்திற் தீவினையுடையவர்க ளுள்ள மழியச் சொரியும் வெவ்விய அக்கினி விழிகளையு முடையனாய், (அங)

ஏற்றுபுரு வத்தினனை யீடுடைய மேனி
பற்றிமுக மீதுபெறு பங்கியுடை யானை
முற்றுமயிர் பெற்றமுக முற்றதர வோட்ட
நிற்றலற வுற்றபுர ணத்தினனை நேரே.

(இ - ள்.) நெற்றியின்மீதேறும் புருவங்களையும், வலியை யுடைய வுடம்பிற் றோன்றிய மேனோக்கிய முகங்களாய் நின்ற மயிரோம பங்கிகளையும், நிறைந்த மீசையமைந்த முகத்தோடு கூடிக் கீழுதடு மேலுதடு நேரேநிற்குந் தன்மையின்றித் துடிக்குந் தன்மை யையு முற்றிருப்பவனாய், (அச)

மேருநிக ருன்னதனை வீறுடைய தண்டந்
தாரகனை மற்றைய தழற்படை யனைத்துங்
காரனைய மேதியிசை காணவரு வானை
யேருடைய செய்யவுடை யாடையனை யென்றும்.

(இ - ள்.) மகமேருபோன்ற வுயரத்தினையும், வெற்றியை யுடைய தண்டாயுதமு மற்றுமுள்ள நெருப்புப்போன்ற ஆயுதங்களு முழுதுந் தரித்திருக்குந் தன்மையினையும், யாவருங் காணக் கரிய மேகம் போன்ற கடாவின்மேல் வருஞ் சிறப்பினையும், என்று மழகு பொருந்திய சிவந்த பரிவட்டத்தையே தரித்திருக்கு மியல் பினையு முடையவனாய், (அரு)

செம்மைபெறு மாலையது சேர்முடியி னானை
வெம்மையிடி யன்னகுரல் வீறுமுடை யானை
விம்முகட லோடுலக னைத்தையும் விழுங்கச்
சம்மத னெனத்தகு வனைத்தடை தடுததே.

(இ - ள்.) செந்நிறம் அமைந்த மாலைகளைச் சூடிய திருமுடி யையும், வெவ்விய இடிபோன்ற குரலின் மேம்பாட்டினையும், முழங் குங் கடலினோடு உலகங்க ளெல்லாவற்றையும் காவல் கொடுத்து விழுங்குதற்கு விருப்பமுடையவன்போன்ற தன்மையையு முடைய வனாய், (அசு)

விரித்தமுகின் மேனிய மிருத்தியு மிருக்கக்
கருக்கிய நிறத்தினொடு காலனு மிருக்க
நெரித்தபுரு வத்தினுட னந்தகனு நீடப்
பரித்தகொடு மைத்தொழில்செய் மாரியுமோர் பாலே.

(இ - ள்.) பரந்த மேகம்போன்ற வடிவினையுடைய மிருத் தியு மொருபக்கத்தி லிருக்கக், கரிய நிறத்தினோடு கூடிய காலனு

மொருபக்கத்தி லிருக்க, வெறிட்ட புருவத்தோடு கூடிய அந்தகனு மொருபக்கத்தி னிலைபெறக், கொடுமை பொருந்திய தொழிலைச் செய்யும் மாரியு மொருபக்கத்தி லிருக்க, அதனடுவே வீற்றிருக்குந் தேவனாய்,

(வி - ரை.) விரிக்த என்பது வலிக்கும்வழி வலித்தல் பெற்றது. 'கீட' என்பதனை மாரியொடுங் கூட்டுக. 'ஓர்பால்' என்பது கடைநிலைத்தீவகம். வீற்றிருப்பானு மென்னு மெச்சம் வருவித்துரைக்க. (அஎ)

கருக்கிய நிறத்தினர்கள் கண்டவர்க ளஞ்ச
னெரித்தவுரு நெற்றியர்க ணிட்டுர ரரட்டர்
தரிகதிரி காத்தினர்கள் சத்திகிரி சூலம்
விரித்துடைய பாசமழ லங்குசமும் வேறே.

(இ - ள்.) கண்டவர்கள் நடுங்கும்படி கரிய நிறத்தினையுஞ், சுளித்த வடிவினையுடைய நெற்றியினையுங், கொடுமையினையும், உகிர் களையுஞ் சஞ்சலப்படுத்துங் குணத்தினையும், வேலும் - மூவிலைச் சூலமும்-கெடிய பாசக்கயிறும் - அழல்போன்ற தோட்டியும் - மற்று முன்னனவும், (அஅ)

தண்டுமிளிர் வாளொளிகொள் சக்கரமு மிக்க
வெண்டிகழும் வாளியினை தூணியெழி லார்கோ
தண்டமிவை மற்றைய தழற்படை யனைத்து
மண்டுதொழில் வீரதர தூதரவர் வந்தே.

(இ - ள்.) தண்டாயுதமும், விளங்கும் வாளும், ஒளியமைந்த சக்கரமும், பேரழகு விளங்கும் அம்புகளும், அவற்றினைச் சேர்க்கப் பட்ட அம்பறாத்தூணியும், அழகு நிறைந்த வில்லும், மற்றுமுள்ள அக்கினிபோன்ற ஆயுதங்க ளெல்லாவற்றையுந் தாங்குங் கையினை யுடையர்களா யவ்வவ் வாயுதங்களைப் பயிற்றுந் தொழிலின் மிக்க வீரமுடையவரான தூதுவர்கள் வந்து, (அகூ)

ஏவலாள ரெங்கள்பெரு மானென விருக்குந்
தேவனை விறைத்திற மதித்தொருமை செப்பு
நாவனை நடன்றனை நடுக்கமொடு கண்டார்
மேவலர்க ளென்னமனம் வேடுபடு வாரே.

(இ - ள்.) முன்னேகூறிய நிறத்தினையுடைய எமதூதர்கள் வந்து, 'எம்முடைய சுவாமி! யாங்கள்செய்யுங் குற்றேவ லருள்வாய்!'

என்று விண்ணப்பஞ் செய்ய வீற்றிருக்குங் கடவுளாய்ச், சிவபிரா னருளிச்செய்த விதித்திறத்தை யேகாக்கிர புத்திசெய்து அவ் விதிப் படியே தண்டங்கள் செய்யச்சொல்லு நாவினையுடையவனாகிய எம ராசனை யச்சத்தோடுங் கண்ட பாவிகள், அவ் வெமராசனுக்குச் சத் துருக்கள்போல, அவன் மனத்துக்கு வேறுபடுவார்கள். (௬0)

[எமராசன் அப் பாவிகளைக் கோபிக்குந்திற முணர்த்துகின்றார்.]

வெறுத்தவரை நல்வினையை வெய்யவினை தன்னைச்
செறித்தவரை நோக்கியழல் சிந்தவிழி சித்தங்
கறுத்துமிக நச்சர வெனக்கடு வெனத்தா
னுறுக்குவ னறத்தளர் வுறக்கடி தொறுத்தே.

(இ - ள்.) எமராசன், நல்ல புண்ணியங்களைச் செய்யாது விட் டுக் கொடிய பாவங்களைச் செய்ய விரும்பிய பாதகரைத் தன் கண்க ளினின்று நெருப்புப் புறப்படப் பார்த்து, உள்ளம் வெகுண்டு, நஞ் சினை யுமிழும் பாம்புகள் போலவும் - ஆலகால விடம்போலவுஞ் சீறி, அவர்கள் தளரும்படி மிகவுங் கோபித்தருளுவான். (௬௧)

[பாவிகளாயினோ ரந்த எமராசனையே யன்றிச் சித்திரகுத்தனையுங் கண்டால் நடுங்குவரென்ப துணர்த்துகின்றார்.]

வெப்பவினை தன்னையும் விதிப்படி விளைந்த
துப்பவினை தன்னையு மதித்தொருமை சொல்லு
மெய்யுடைய சித்திரநல் குத்தனையும் வீறுக்
கையரவ் ரஞ்சுவர வன்விழிகள் கண்டே.

(இ - ள்.) அந்தப் பாவிகள், சிவபிரா னருளிச்செய்த வேதாக மங்களிற் கற்பித்த முறையே யவரவர்க் குண்டாகிய கொடிய பாவத் தையுந் தூய்மையையுடைய புண்ணியத்தையு மறிந்து உள்ளபடியே சொல்லுஞ் சத்தியவாக்கினையுடைய நல்ல சித்திரகுத்தனையும் வேறு பட்டவனுடைய விழிகளைக் கண்டு நடுங்குவார்கள்.

(வி - ரை.) வீற்று என்பது விகாரப்பட்டு நின்றது.

சூத்திரம்

"வீற்றுப் பேதமும் விள்ளலுந் திரிபும்
வேற்றுமையுங் கொள்ப வேறுபடற் பொருட்

என்பதனானு முணர்க. (௬௨)

[சித்திரகுத்தன் அவரவர் செய்த பாவங்களை யெடுத்துக் கூறி அத் தீவினையுடையார் நரகத்தி லடைவதற் கொருப்படுமாறு அறிவித்தலையும், மேல் அந்த எமராசனு மெடுத்துக் கூறு முறையையும், இச்செய்யுள்முதல 'அகன்ற வெமதூதர்' என்னுஞ் செய்யுள்வரையு ஒருதொடராக உணர்த்துகின்றார்.]

சித்திரநல் குத்தனெதி ரூற்றவரை நோக்கிப்
பொய்த்திறம தித்தவர்கள் போதுகமு னணீர்
மத்தகளி றன்னவலி யாலுமெளி யார்தம்
வித்தமுதல் கொண்டவர் தமக்கிடர் விளைத்தீர்.

(இ - ள்.) நல்ல சித்திரகுத்தன், தனக்கெதிரே நின்ற பாவி களைப் பார்த்துப், 'பாவ வகைகளைப் பொருளென்று எண்ணினவர் களே வாருங்கள்! நீங்கள் முன்னுள் மதயானையை யொத்த பலத்தினு லெளியரா யுள்ளவர்களுடைய திரவிய முதலானவற்றை யபகரித் துக்கொண்டு அவர்களுக்குத் துக்கத்தை யுண்டாக்கினீர்கள். (கூஉ)

அங்கமுறு மேன்மையழ காலுமய லார்த
மங்கையர்க டோள்புணரு மாதரவு வைத்தி
ரிங்கிவைக ளும்மையணை யாதகல்வ தெங்ஙன்
சங்கையுறு மின்னிரய முற்றுட னளர்ந்தே.

(இ - ள்.) அங்ஙனம் பிறர்பொருள் கைக்கொண்ட தல்லாமல், உமது சரீரத்திற்பொருந்திய அதிக அழகினுலே பிறருடைய மனைவி யர்கள் தோளினை யணையும் வாஞ்சையும் பொருந்திய நீங்கள், இப்படிக் கூறிய தீவினைகள் உங்களுடன் கூடி நில்லாம லெங்கே போகும்? ஆகையா லப்பாவங்கள் தீரும்படி நரகத்திலே சென்று அதனு லுடலிளைத்துத் துக்கத்தை யனுபவிக்கக்கடவீர்கள்!

(வி - ரை.) 'அழகாலும்' என்ற வும்மையாற் றனமிகுதியாலு மென் றுணர்க. சங்கை - வருத்தம். (கூந)

உற்றவர்கள் வெய்யநிர யத்துயரை யோரி
லற்றவர்க டீயவினை யல்லதறு மாறென்
குற்றமத னைக்குணமெ னப்பெரிது கொண்டீர்
துய்த்தவிந னஞ்சிலெக னீங்கும்வினை சொல்லீர்.

(இ - ள்.) ஆராய்ந்து பார்க்குமிடத்துக் கொடிய நரகத்திற் துன்பத்தை யனுபவித்தவர்களே பொல்லாத பாவங்களை யொழிக் கேதோ ராவார்கள். அப்படி நரகத்தை யனுபவியாமற் பாவங்களொழியு

மா றெப்படி? தீமைகளையே நன்மை யென்று மிகவு முட்கொண்டவர்களே! நீங்கள் நரக மனுபவித்தற் கிவ்விடத்திலே பயப்படுவீர்களானாற் செய்தபாவ மெப்படி நீங்கும்? எனக்கு அதனைச் சொல்லக்கடவீர்கள்!'

(வி - ரை.) துய்த்தல் - அனுபவித்தல். (கரு)

என்றினைய வாசக மவர்க்குற வினைப்பன்
கன்றியம னுஞ்சிறி மைக்கடிது நோக்கி
யன்றுமனு நீதிமுறை யாவையு மயர்த்தீ
ரின்றுகிர யத்துற விளைப்பதெ னிசைப்பீர்.

(இ - ள்) என்று இத் தன்மையையுடைய நீதி வசனங்களைச் சித்திரகுத்தன் அந்தத் தீவினை யுடையோர்க்குப் பொருந்தச் சொல்லாநிற்பான். பின்பு எமராசனும் வெகுண்டு, அந்தப் பாவிகளைக் கொடுமையாகப் பார்த்து, 'முன்னே ணீங்கள் மனுநெறி முறைமையெல்லா மறந்து பாவங்களையே செய்தீர்கள். இப்போது நரகத்திற் செல்லுதற்கு மனமடிவதென்ன? அதனைச் சொல்லக்கடவீர்! (கக)

வந்திடுக மண்ணுலக மாண்டதிறன் மன்னர்
வெந்துயர மேயுயிர்க ளுக்குற விளைத்தீ
ரெந்தமுறை யாலுமிங னேநுமது பாலே
வந்துதவி யானதுசொ லீர்பொருண் மதித்தீர்.

(இ - ள்.) பூலோகத்தினை யாண்ட வெற்றிப்பாட்டினையுடைய அரசர்களே! வருவீராக! நீங்கள் திரவியத்தை விரும்பி ஆன்மாக்களுக்குத் துன்பங்க ளுறும்படி கொடுமையே செய்தீர்கள். அங்ஙனஞ் செய்த வும்மிடத்தி லெவ்வகையிலேயாயினு மீண்டு வந் துதவியான தெதுதான்? அதனைச் சொல்லக்கடவீர்! (கஎ)

மங்கையர்க ளெங்குளர்கள் மற்றையவர் தாமு
மெங்குளர்சொ லீர்புரவி யானைநர யான
மிங்குவர யாமறிய மேபகையை யொறுறும்
பொங்குபடை யெங்கொழிய விங்கெளிது போந்தீர்.

(இ - ள்.) உங்களுடைய அந்தப்புரத்திலே நீங்கள் துணையாக வெண்ணியிருந்த மடவார்க ளெங்கே யிருக்கிறார்கள்? மற்றுமுள்ள சுற்றத்தவரு மெங்கே யிருக்கிறார்கள்? அதனைச் சொல்லக்கடவீர்! நீங்களாண்ட குதிரையும் யானையும் எறிய சிவிகையு மிவ்விடத் துங்களுட னெக்கவர யாம் கண்டதில்லையே; சத்துருக்களைச் சங்கரிக்கு

விறைந்த சேனை யெப்படி விட்டுப்போகத் தனித்து நீங்களிங்கே யெளிதாக வந்தீர்கள்?

(வி - ரை.) ஏகாரம் - இகழ்ச்சி. (கூஅ)

கன்றவெம தூதர்கசி வுற்றுமது காவ
லொன்றுமற நீர்தனிமை யோடிஙனு முற்றீ
ரின்றுநிர யத்திது ளிருந்தவு மிருந்தீ
ரென்றவர்க ளச்சமுற வேபல விசைப்பான்.

(இ - ள்.) நீங்கள் நம்முடைய தூதர்கள் கோபிக்கையால் வருத்தமுற் றம்முடைய வாசற் காவலாயுள்ள தொன்றுந் தாங்காமற் போகத் தனிமையோடு மிவ்விடத்தில் வந்தீர்கள். இப்போது நரகத்தி லிருந்தவு மிருக்கின்றீர்கள்' என்று அவர்கள் அச்சமுறும்படி பல வசனங்களையுஞ் சொல்வான். (கக)

[இப்படியே யவர்கள் சொல்ல அப் பாவிகள் நிற்குந் திற மீளவும் எமராசன் கண்டு சண்டமகாசண்டனுக்குச் சொல்லுந் திற முணர்த்துகின்றார்.]

மற்றவரு முன்னமுள வல்வினைக ளெல்லா
முற்றுணர்வி னிற்பருவ யற்றுள நடுங்கா
வற்றெழிய மற்றிவ ரகத்திற மனைத்து
மெற்றிடுக சண்டமக சண்டகடி தென்றே.

(இ - ள்.) இப்படிச் சித்திரகுத்தனும் எமராசனு மொப்பச் சொல்ல அக் கொடுங்கோன் மன்னருந் தா முன்னாள் செய்த கொடு வினைக ளெல்லாந் தம்மறிவில் தோன்றிச் சொல்லுதற்கோர் உத் தாமு மற்று மனமடுங்கி நிற்பார்கள். மீளவும் எமராசன், 'சண்டமக சண்டரே! இவர்கள் செய்த பாவவகைக ளெல்லாம் அனுபவித்துத் தொலையும்படி சடுதியில் அடிக்கக்கடவீர்கள்!' என்று சொல்லுவான்.

(வி - ரை.) அகம் - பாவம். (௪00)

[எமராசன் கூற, மகசண்டன் முதலாயினோர் அக் கொடுங்கோல் மன்னரைத் தண்டிக்குந் திற முணர்த்துகின்றார்.]

ஓதநம னுற்றமக சண்டனெமு வாயர்
காதியவர் பாதமிரு கைகொடு பிடித்தே
பேதமுற வேசுழல் பெறுத்திடுவர் விண்ணின்
மீதெறிவர் பற்றிடுவ ரெற்றிட விரைந்தே.

(இ - ள். இப்படி எமராசன் அருளிச்செய்ய அவ்விடத்தினிற்கு மகசண்டன் முதலானோர் அக் கொடுங்கோன் மன்னருடைய கால்களை இரண்டு கையினாலும் வாரிப் பிடித்து அடித்து அவர்கள் மனங் கலக்கமுறும்படி சுழற்றி ஆகாயத்தி லெறிவார்கள். மீளவும் அவர்களை எரிதழற் கல்லி லடிக்கும்பொருட்டுச் சடுதியிலேற்றுக்கொள்வார்கள். (௧0௧)

[மேல் அவர் படுந் திறம் உணர்த்துகின்றார்.]

வெந்தழலை யன்னசிலை மீதுகடி தெற்றிச்
சிந்தவுடல் செங்குருதி சேறுபெற வூற
நொந்தறவு நோலறுவர் நொய்யவினை செய்தார்
மந்தமர மெந்தவித மெற்றவரை யுற்றே.

(இ - ள்.) பொல்லாத வினையைச் செய்த வேந்தர்களை வெவ்விய எரிதழற் கல்லிற் சடுதியி லடிக்குங்காலத்து அவர்க ளுடம்பு சிதறவுஞ் சேறு பதியும்படி சிவந்த விரத்தம் புறப்படவு மிகவுநொந்து தமது வலி கெடுவார்கள். அஃதெப்படியெனில், இளந்தளிரையுடைய இளமரத்தைக் கல்லின்மே லடித்தா லெப்படிச் சிதரிப்போமோ அப்படிச் சிதற வருத்துவார்கள்.

(வி - ரை.) நோல்-வலி. (௧0௨)

[அவர்களை நரகத்தி லிடுந் திறத்தை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அற்றவர்கள் சிந்தனையை யாகமது தன்னி
லுற்றுலவ மாருதமு முண்ணினைவு தன்னைப்
பெற்றிடலு மற்றவர்க டவினைய பேத
மற்றகல வுய்த்திடுக தாழ்தல வழற்கே.

(இ - ள்.) இப்படி யடிபட்டுச் சிந்தை யழிந்து மூர்ச்சித்துக் கிடக்கும் வேந்தர்கள் தம்முடைய சரீரத்தில் தென்றற்காற்று வந்து வீச அதனா லுள்ளுணர்வு பெற்றமாத்திரத்திலே யிவர்கள் செய்த பாவங்க ளொழிந்துபோம்படி 'பாதாளலோகத்தின் கீழாகிய எரிவாய் நரகத்திலே போகக்கடவீர்கள்!' (௧0௩)

என்றியம னேதுமுறை கொண்டவரை யெல்லா
மன்றியடு தூதர்கொடு சென்றவனி யின்கீ
ழொன்றியவொ ரேழ்தல மொழிந்தபுரி யின்கீழ்
நின்றநிர யத்திடை நிறுத்துவ ரொறுத்தே.

(இ - ள்.) இப்படி எமராசன் சொல்லும் சொல்லைத் தூதுவர்க ளுட்கொண்டு, அப்பாவிகளை யெல்லாம் பூமியின்கீழ்ப் பொருந்திய பாதாளலோகம் எழினுக்குங் கீழாகிய வுலகத்தில் நிலைபெற்ற நரகத் திலே தண்டித்து நிறுத்துவார்கள்.

(வி - ரை.) அரையர்க்குச் சொல்லவே யவனுளு முலகத்தி லுள்ள சனங்களுக்குங் கூறியதாயிற்று. (௧௦௪)

[மேல், நரகங்களின் தொகை வகைகளை யுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

தொகையினு லிருபத் தெட்டுத் துக்கசா கரங்கள் சொல்லின்
வகையினுற் சதமும் வாய்த்த நாற்பது மதிக்குங் காலை
யகலமு மிருபத் தெட்டுக் கோடியே யாயும் போதிற்
றொகைவகை யிரண்டு மிந்த நூலினுட் சொல்லு வாமே.

(இ - ள்.) துக்க சமுத்திரங்களாகிய நரகங்களைச் சொல்லு மிடத்துத் தொகையினு லிருபத்தெட்டாம். அதனை யாராயுமிடத்து வகையினுல் நூற்றுநாற்பதாம். அதன் விரிவை விசாரிக்குங்காலத்தி லிருபத்தெட்டுக் கோடியாம். இப்படிக் கூறிய மூன்றின் றொகை வகை நரகங்களின் பெயர்களையே யிந்நூலிற் சொல்லுகின்றோம். ()

[நரகங்களின் பெயரு முறையுந் தமோறி வருவதற்கோர் வழுவமைப் புணர்த்துகின்றார்.]

பேதமு முறவே யெண்ணும் பெயர்களு முறையும் பேசும்
வேதனைக் குழிக்க ளுதி விமலனு லொன்றுக் கொன்று
பேதமு முறவே தோன்றும் பிரளய முடிவு தன்னி
லாதலால் விரோதந் தம்மி னவற்றிலை யாயுங் காலே.

(இ - ள்.) பிரளய முடிந்தபின் றோன்றுஞ் சிருட்டிகாலத்தில் வேதனை செய்யும் நரகக்குழிக்கு எண்ணு முறையும், பெயரு மொன் றுக்கொன்று வேறுபாடாகத் தோன்றும். ஆகையால், அனுதி நின் மலனுகிய சிவபெருமா னருளிச்செய்த சிவாகமம், எண்ணையும் பெய ரையு முறையையு மொன்றுக்கொன்று பேதமாகவுஞ் சொல்லும். அதனை யாராயுமிடத்து அவ்வாகமங்க ளொன்றுக்கொன்று தம்மில் விரோதமில்லை.

(வி - ரை.) 'பேதமும்' என்ற வும்மையாற் பேதமில்லாமலுந் தோன்றுமென் றுணர்க. (௧௦௬)

[தொகை நரகங்களின் பெயரை நான்கு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

வேறு

கோர மதுதான் முதனரகங்
கூறு மதன்கீழ்க் கவின்கோரங்
கோர மதன்முன் னதிகூட்டிக்
கூறு மதுமூன் றுநரகங்
கோர தரமே யதனதுகீழ்க்
கோர ரூப மற்றதன்கீழ்ச்
சேரு மதன்கீழ்த் தரளதாஞ்
செறியு மதன்கீழ்ப் பயாநகமே.

(இ - ள்.) வெளி. (௧0எ)

அதன்கீழ்க் காள ராத்திரியே
யாகு மதன்கீழ்ப் பயோற்கடமே
யதன்கீழ்ச் சண்ட மதுதானே
யடையு மதன்கீழ் மகாசண்ட
மதன்கீழ்ச் சண்ட கோலால
மாகு மதன்கீழ்ச் சண்டதர
மதன்கீ ழாகுஞ் சரோருகமே
யப்பாற் சலச வதியதுவே.

(இ - ள்.) வெளி. (௧0அ)

அதன்கீழ் வீம மதுதானே யப்பால் வீம வீடணமே
யதன்கீழ்க் காளம் விகாளமே யதற்கு மப்பா லென்றறிக
வதன்கீழ்க் குலிச முக்கோண மைந்து கோண மதற்கப்பா
லதன்கீழ்த் தீர்க்க தரமாகு மப்பாற் பரிவர்த் துளமதுவே.

(இ - ள்.) வெளி. (௧0௯)

அப்பா லேழு நிலமதனுக்
கப்பா லெட்டு நிலமதனுக்
கப்பாற் றீர்க்க வொளியதனுக்
கப்பான் மாயை யென்றறிக
அப்பார் சடையான் விதியிகழ்ந்தா
ரழுந்துங் குழிக ளெழுநான்கு
மிப்பா வியனூ ளெண்ணுகவொவ்
வொன்றிற் கோடி யெண்ணுறவே.

(இ - ள்.) வெளி. (௧௧0)

[முன்னே கூறிய இருபத்தெட்டினுக்கு மொவ்வொன்றுக் கைந்தைந்து நாயக நரகமுண் டென்பதையும், அதன் பெயர்களையும் பதினாறு செய்யுளால் வகுத்துணர்த்துகின்றார்.]

தொகையா லிருபத் தெட்டினையுஞ்
சொன்னே மினிநா யகநரகம்
வகையா லறைவ மதித்திடுக
வைந்தைந் தாக மற்றவற்றிற்
பகையே பாவ மெமக்கென்று
பயந்து கொடிய பாவத்தைத்
தகையார் தடுத்து நல்வினையைச்
சமைக்க நலத்தைத் தாமுறவே.

(இ - ள்.) தொகையினா லிருபத்தெட்டு நரகத்தினையுஞ் சொன்னோம். வகையினா லவற்றி லொவ்வொன்றுக்கு நரக மைந்தைந்தா யிருக்குமென்று சொல்வோம்; அதனை யறிவாயாக! அஃதென்ன காரணத்தாலெனிற், பெருமையினை யுடையார் 'பாவமே நமக்குப் பகை' என்று பயந்து அதனைச் செய்யாதொழிந்து நல்வினையைச் செய்து நன்மையை யடைவதன்பொருட்டு. (௧௧௧)

கலிவிருத்தம்

வெந்துயர்செய் ரௌரவமா ரௌரவமே மிக்கதமந்
இந்தைகளு முதிசீத மதிவெப்ப மெனத்தெரிந்த
வைந்தினையு முதனிரயத் ததிபதிக ளெனவறிக
விந்தமுறை நாயகங்க ளனைத்தினுக்கு மெண்ணுகவே.

(இ - ள்.) ரௌரவம், மகாரௌரவம், அதிதமம், அதிசீதம், அதிவெப்பம் என்று கூறப்பட்ட வைந்தும், முதனிரயமாகிய கோரத்துக்கு நாயகங்களாம். இம்முறையே மற்ற இருபத்தேழு நரகத்துக்கு மொவ்வொன்றுக் கைந்தைந்தாக வெண்ணிக்கொள்க. அவற்றிற்குப் பெயர்களையுஞ் சொல்வாம். (௧௧௨)

அதிகோர மறவுயிரு டக்கணமற் றம்போசம்
விதமுடைய சஞ்சீவஞ் சடமாயை விலோமமெனக்
கதமுடைய வீமமெனக் கடங்கடத்தோ டிவைபத்தும்
விதமறுதீ விரவேகங் கராளமென விளம்புகவும்.

(இ - ள்.) வெளி. (௧௧௩)

விகராளம் பிரகம்பம் வெண்கமலம் வீற்றுமுகம்
பகவீக்கும் கரும்பாசம் பயின்றபிர மருத்தனமே
புகராய சூசிமுகம் புதைநேமி காதகமே
பகவுடற்பீ டனங்கும்பீ பாகமெனப் பகர்ந்தனவும்.

(இ - ள்.) வெளி. (கக௪)

அதிபாகங் கிரகசமற் றசிதாரு வங்காரங்
குதிகொள்ளு மிரத்தச்சீக் குழியிருப்புத் துண்டப்புள்
கெதமாக்குஞ் சம்வருத்தங் கிரதுவழன் மயச்செங்கற்
றிதநீங்க வுழுத்ததசை திரபுவெனச் செப்புநவும்.

(இ - ள்.) வெளி. (கக௫)

சோகிக்கு முச்வாச நிச்வாசஞ் சுடர்த்தீர்க்க
மோகிக்குஞ் சுழலழல்வாள் முள்ளிலவந் துணித்ருட்டஞ்
சோகிக்கு நாதஞ்சுப் பிரவாகம் பிரவகனம்
வேகிக்குங் கரடியுரு மேடமென விளம்புநவும்.

(இ - ள்.) வெளி. (கக௬)

விறலிடப முட்பன்றி சிங்கம்வியாக் கிரம்யானை
திறலுய்க்கு காமாடு திட்மேதி யிடவமச
மறவெடிய விருகான மதிகிரகங் கும்பீரங்
கறுவுளநக் கிராக்கியங்கட் டரவமெனக் கழறுநவும்.

(இ - ள்.) வெளி. (கக௭)

உரைத்தபெயர் பின்னுரைத்து
மூனமிலை யொள்ளழலைப்
பரித்தகடத் தினைமற்று
மொருபொருளைப் பரித்திடலால்
விரித்துணர்வார்க் கரியெனுஞ்சொல்
வேறுபல பொருள்விளக்குஞ்
சரித்தகிழித் தொகும்பொருள்கள்
பலவுமுள துணியுங்கால்.

(இ - ள்.) முன்னே யுரைத்த பெயர்களைப் பின்புரைத்தாலுங் குற்றமேயில்லை. அது எதுபோலுமெனின், அழகிய அக்கினியைத் தரித்த குடத்துக்கிணையான வேறொரு குடம் மற்றொரு பதார்த்தங்களைத் தரித்தாலுங் குடமென்னும் பெயர் குறையாதவாறுபோலப் பெயரொன்றாயிருந்தாலுங் குணம் வேறுபட்டிருக்கும். அது அக்

லாமலும் அரியென்னுஞ் சொல்லை விரித்தறிவார்க்குப் பலபொருளை விளக்குவதுபோலவுஞ், சுருக்குதலையுடைய மடிச்சிலை யென்னும் பெயரொன்றாயிருந்தாலும் அதன் பொருளை விசாரிக்குமிடத்துப் பலவாயிருப்பதுபோலவுமாம்.

(வி-ரை) இச் செய்யுளான் முன்னே கூறியதைப் பிறர் கூறினுலுங் குற்றமில்லையென்று வழுவமைதி கூறினரென்க. (கக௮)

கூர்மவுருக் கருங்காகங் கொடுங்கழுகு கடுங்கூகை
கார்வாய வட்டைபுலி கவிகட்கங் கண்டகமே
யீர்வாய்ச்சி யிரத்தவிழி யிகழ்பூதி யிருத்திகையே
சேர்வாய குணதூம மெனமுறையிற் செப்பியவும்.

(இ - ள்.) வெளி. (கக௯)

அழலுமிழ்வன் புழுக்குழிப மேத்தியமப் பிரதிகாம்
வழுவாயுன் னீர்த்தானம் வாய்நீர்ச்சி வனமூனைக்
கழியாத்தான் றனைத்தின்னல் கலந்தனத்த மனைத்துமுண
லொழியாத தாருணமே யெனமுறையி னுரைத்தனவும்.

(இ - ள்.) வெளி. (கஉ0)

வேதிக்குஞ் சங்கடமே வித்தரமே மிகுவிகடம்
வாதிக்குங் கட்பூதங் கரிநெருப்பு வறையோடு
பேதிக்கும் வைதரணி யிருப்பழற்பாற் பிணித்துறக்க
லேதத்தைத் தருமேக பாதமென விசைத்தனவும்.

(இ - ள்.) வெளி. (கஉக)

அறவருத்தும் பூரணமே யசிதால வனங்கோர
முறியவெ னும் பினைமுருக்கன் முழைப்பிடை திலச்செக்கே
யெறியவுறு மியந்திரமே கருப்பாலே யிடப்பாசம்
மறியவுடன் மருத்தனமே யெனமுறையில் வகுத்தனவும்.

(இ - ள்.) வெளி. (கஉஉ)

பரியசுலி நுண்சுல்வி பாறையழ லிருப்புமயம்
பொருவரைகள் குரதாரம் யாமளமென் பொருப்பதுவே
யருவருமுத் திரகூப மலக்கூப மறவுமிரு
ளெரியுமறற் சாதனமே யுரனுலக்கை யென்பனவும்.

(இ - ள்.) வெளி. (கஉ௩)

அரைத்தொறுக்கு மியந்திரமே சிலைவண்டி லயக்கல்லைப்
வருத்தியிடுந் தாலவன மாமசக மண்டுகமே
தருக்கழிக்குஞ் சம்மோக மத்திபங்கந் தழற்சூல
மிருப்பழலா முருள்விழுங்க லெனமுறையி னிசைத்தனவும்.

(இ - ள்.) வெளி. (கஉச)

பலதுயர மிகுதுயரம் பழுதாய கசுமலமே
நிலவரிய சமலமல நிட்டூரவா லாகலமே
விலகரிய மிதவிருபம் விகிர்தமிய மானுகமே
யிலங்கியிடு மொருபாதந் திரிபாத மென்பனவும்.

(இ - ள்.) வெளி. (கஉரு)

அறக்கொடிய தீவிரமே யவீசியென வறைந்தனவுஞ்
செறித்தறிக வொருநூற்று நாற்பதெனத் திண்ணமுற
வொறுத்துயிர்க்குப் பாவவித மொழிக்கவொழுக் கியகிரயத்
திறத்திலுக்கு நாயகங்க டெருளவெணுஞ் சிந்தையரே.

(இ - ள்.) தீவிரம் அவீசியென் றிவ்வாறு கூறப்பட்ட நூற்று நாற்பதாக வேற்றிய நரகங்களை நிச்சயமாகப் பிறித்தறியுஞ் சிந்தை யினை யுடையவர்கள், ஆன்மாக்களுக்குப் பாவவகை யொழிக்க நிறு விய நரகவகைகளுக்கு ஒன்றுக் கைந்தைந்து நாயகங்க ளென் றுணர்க! (கஉசு)

[மேல் இராச நரகங்களை யுணர்த்துகின்றார்.]

இருள்புழுதி வடிவாகி யிடர்மிகுத்த ரௌரவத்தை
யரையனென வறிந்திடுக வருந்துயரந் தனைக்கொடுக்கு
மெரிமயக்கும் பீபாக மிதற்குமிறை யெனவெணுக
விருமிசெறி யவீசியிறை யெவற்றினுக்குங் கிளக்குங்கால்.

(இ - ள்.) இருண்ட புழுதி வடிவாய் மிகுந்த துயரஞ் செய் யும் ரௌரவத்தை யெல்லா நரகங்களுக்கு மிராச நரகமென் றறிந் திடுக! அரிய துயரஞ்செய்யு மக்கினிச் சுவாலைபோன்ற கும்பீபாக மென்னு நரகம் இந்த ரௌரவத்துக்கு மிராசாவாகையா லிராசராச நரகமெனப் பெயர்பெறு மென்றுணர்க! புழுப் பொருந்திய அவீசி யென்னு நரகஞ் சொல்லுமிடத்து எல்லாவற்றிற்கு மிராசாவா மாதலால் இராசாதிராச நரகமென்று பெயர் பெறும். (கஉஎ)

[மேல், பாவிகளை நரகத்தி லனுபவிக்கச் செய்து களை
யேற்று முறைமையையுவமைமுகத்தா
லுணர்த்துகின்றார்.]

செய்தசெய்த தீவினையின் றிறத்திசைய வெவற்றமுங்கி
மையலுறு மவர்துயா முடிவின்கண் வல்வினைகள்
பையவிட வெடுத்திடவும் படுவாழற் படுகனகம்
வெய்யவழ லினைவிடுமே களிம்பறலும் விளங்கிடுமே.

(இ - ள்.) அழலிற் போட்ட பொன்னனது அக் களிம்பற்ற மாத்திரத்தி லந்த வெய்ய நெருப்பினின்றுஞ் சொன்னகாராலே யெடுக்கப்பட்டு விளங்கும். அதுபோலத் தாந்தாஞ் செய்த பாவ வகைகளுக் கிசைய அவீசிமுதலிய நரகத்தி லழுந்தி மயக்கமுறு மான்மாக்களும் பாவபலத்தின் முடிவிலே பலவினைகண் மெல்லவிட எமதூதர்களால் அவைகளினின்றும் எடுக்கப்படுவார்கள்.

(வி - ரை.) சொன்னகாரரென்றும் எமதூதரென்று மெச்சம் வருவித் துரைக்கப்பட்டன. (கஉஅ)

[எமதூதர்கள் அப் பாவிகளைத் தண்டிக்க அவர்கள்
துன்பத்தைப் பொருந்தும் வகையினை யிருபது
செய்யுளா லுணர்த்துகின்றார்.]

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மறுத்த ருட்ட மக்கு வைத்த வத்த னித்தன் வாய்மையும்
வெறுத்த றத்தி னைத்த வத்தை விட்ட கட்ட துட்டரைக்
கறுத்து ளத்த றச்சி வத்த ழற்க லித்த கண்ணரா
யொறுத்தொ றுத்து றுக்கு வார்க டோரா யுதத்துமே.

(இ - ள்.) தம்மிடத்தி லருளை வைத்த சகத் பிதாவாகிய சிவபிரானுடைய வாக்கியப் பிரமாணமு மறுத்துத், தனக்கேற்ற தருமத்தினையுஞ் செய்யாமல் வெறுத்துத், தவத்தையும் விரும்பாமல் விட்ட பொல்லாத துட்டர்களை எமதூதர்கள் மனங்கறுத்து மிகவுஞ் சிவந்த தழல் சொரிகின்ற கண்ணிணையுடையவர்கள் ஆயுதங்களினால் குத்திக் குத்திக் கோபிப்பார்கள். (கஉகூ)

இருப்ப முற்செ டர்ப்பி னித்தி டர்ப்ப டக்க ரத்தினும்
பரித்தி டப்ப னித்த வண்ப ழிப்பு டற்ப தைக்கவே
துாக்க மெய்ச்சு ழன்று ருண்ட துக்க ரைத்தொ குத்துவின்
டருக்க றச்ச தத்தி ருப்பு ருட்டி னிப்பர் தாளிலே.

(இ - ள்.) அழல்போன்ற இருப்புச் சங்கிலியினுல் கையையுங் கட்டி யந்தச் சங்கிலியைத் துக்கமுற வேந்துவித்து, அப்படிப் பழிப் புண்டாகிய சரீரம் பதைக்கத் தூரத்த வோடமாட்டாமற் றமதுடல் சுழன்று விழுந்து புரண்ட துக்கத்தையுடைய பாவிகளை மீளவுங் கட்டிப் பிடித்து மிகுந்த கர்வ மறும்படி நூறிருப்புண்டையை யிரண்டு காலினுங் கட்டி மீளவுந் தூரத்துவார்கள்.

(வி - ரை.) விண்டருக்கு-மேலானகர்வம். (கஙூ)

உன்னு வார்கண் முன்னை வல்வி னைத்தி றம்மு ளத்துளே
யென்னை செய்ய லாவ தென்று மெண்ணி நொந்தி ளைப்பருந்
துன்னு வாரு மில்லை யுற்ற துக்க நோய்து டைக்கவு
மன்னு மாம னத்தொ டல்ல தில்லை யூடல் வாய்மையே.

(இ - ள்.) முன்னே கூறப்பட்ட பாவிகள் தாம் முன்னே செய்த கொடுவினையின் திறத்தை விசாரிப்பார்கள். 'அதற்குப் பரிகாரம் யாது செய்வோம்' என்று தம்மனத்திலெண்ணி யுள்ளழிந் திளைப் பதுஞ் செய்வார்கள். தாம் பொருந்திய துக்கநோய் துடைப்பதற்கு அவ்விடத் தொருவர் வருவாருமில்லை யாகையால் ஊடலுந் தம்மனத் தோடன்றி வேறொருவருடனுமில்லை. இவைகளுண்மையே. (கசுக)

சித்த முந்தி கைக்க வேயி ரத்த முந்தெ றிக்கவே
மொத்து வார ழற்க சைக்கொ ழுந்த ழுந்தி மூளவுன்
குத்து வாரி ருப்பு லக்கை யைக்க ரத்தி னிற்கொடே
மத்த ரான தூதர் பாவ மேவி னரை வாடவே.

(இ - ள்.) மதத்தையுடைய எமதூதர்கள், பாவஞ் செய்தவர்களை மனந்தடுமாற இரத்தமுந் தெறிக்க அக்கினியைச் சொரிகின்ற கசையிற் கொழுந்தானது தசையைப் பீறி ஊனில் சென்று தைக்க அடிப்பார்கள். பின்பு இருப்புலக்கையைக் கையிலெடுத்துக்கொண்டு அவர்கள் தளரும்படி முதுகிலே குத்துவார்கள்.

(வி - ரை.) கசை-குதிரைச் சம்மட்டி. (கசுஉ)

இழுக்கு வார்கள் கார நீரு மொள்ள ழற்கு ழம்புமோ
தெழித்தி ரத்த வெள்ள முந்தி றக்க மெய்ம்ம றக்கவே
யழுத்தி வாளை யங்க மெங்கு மன்றி நின்ற திந்துடற்
புழுக்கு வாரெ ணெய்த்த டக்கு டத்தி னுட்பு குத்தியே.

(இ - ள்.) இப்படி யடிபட்டுப் புண்ணுகிய தேகத்தில் உப்பு முதலிய காரநீரையும் அக்கினிக் குழம்பையும் அதட்டி விடுவார்கள்.

அதுவல்லாமல், இரத்தவெள்ளமுந் திறந்தோட நீணைவுமறக்க வாள் கொண் டறுத்துச் சரீரமெங்குஞ் சின்னஞ் சின்னமாக அரிந்து பொரிய எண்ணெய்க் குடத்துக் குள்ளடைத்து வேகவைப்பார்கள்.

(வி - ரை.) 'அழற்குழம்புமோ' என்கிற ஓகாரத்தினுற் புளிநீர் முதலியவுங் கொள்க. (கஙக)

விட்டை மிக்க கூப வாய்வி ழுங்க வேய முங்குவார்
கட்ட மிக்க மேதை சிக்க லந்து ளங்க லங்குவார்
நிட்டு ரப்பு ழுக்கு ழிக்கு ணின்ற யர்ந்த நீங்கலார்
விட்ட றத்தி னைக்க ளித்த வம்பு ரிந்த வீண ரே.

(இ - ள்.) தருமத்தினைச் செய்யாம லொழித்து அதருமத்தைச் செய்த வீணர்களிற் சிலரை எமதூதர்கள் மிகுந்த மலகூபமாகிய நரகத்தில் போட அதில் மூழ்கிக் கிடந்து துக்கிப்பார்கள். சிலர், துன்பத்தை மிகவுங் கொடுக்கின்ற ஊனுஞ் சீயுமுடைய நரகத்தைப் பொருந்திக் கிடந்ததினுல் உள்ளங் கலங்குவார்கள். சிலர், கொடுமையான புழுக்குழி நரகத்தினின்று சோர்ந் ததனை நீங்கமாட்டாமல் கிடப்பார்கள். (கஙச)

கூரி தாய வாய வாய தாதி கோதி போதியு
மீர வீர வாறு போலி ரத்த முப்ப ரக்கவே
தீரு மாறு தேடு வார்க டய பாவ மேவினுர்
வீர மாய நாயு மாய வாயி னுல்வி டக்கடும்.

(இ - ள்.) தீவினைகளைச் செய்தவர்கள், கூரிய வாயினையுடைய காக்கை முதலாகிய புட்கள், காலா லடித்து மூக்கினுற் கொத்தியும் அறுக்க வறுக்க, வீரத்தினையுடைய நாயுங் கூரியவாயினுற் றமது சரீரத்தைக் கடிக்க, இரத்தம் ஆறுபோல் ஓடத் துக்கித்து, 'இத் துயர மொழிவது எப்படி?' என்று விசாரிப்பார்கள். (கஙரு)

செக்கி டைத்தி லத்தி னுக்கு மொப்பெ னத்தி ருக்குவார்
இக்கி னுக்கு மொப்பெ னக்க லைப்பர் வைத்தி யந்திரத்
தப்பி னைக்க லந்த வுப்பெ னத்த மூற்க முத்துவார்
தப்ப றத்த மக்க றம்பு ரிந்தி லார்க டமமையே.

(இ - ள்.) எமதூதர்கள் தமக்கென்று கருதிக் குற்றமறத் தருமஞ்செய்யாத துட்டரைச் செக்கிற் போட்டு எள்ளுப்போல அரைப்பார்கள். அதுவுமல்லாமல் ஆலையிட்டுக்கரும்புபோலவு நருக்குவார்கள். அதுவுமல்லாமல், நீரிலே கலந்த உப்புப் பின்னமல்லாமல் இருப்பது

போல இவர்கள் சரீரத்தை அக்கினியென்றுஞ் சரீரமென்றும் பின்னம் பண்ணும லக்கினிச்சுவாலையாகிய நரகத்திலும் போடுவார்கள்.

(வி - ரை.) கலைத்தல் - நருக்குதல். இயந்திரம் - கரும்பாலை.

பொய்யி னைப்பு கன்ற புல்லர் வாயி னைப்பு டைத்துநாக்
கொய்வர் துக்க பேத முங்கொ டுப்பர் தூதர் கோணு
வெய்யர் முன்பு சொன்ன பொய்யி னைத்தி றம்வி ளங்கவே
யைவ ரென்னை செய்வ மென்று தீரு மாறு நாடியே.

(இ - ள்.) எமதூதர்கள், பொய்சொல்லிய வாயிலடித்து அவர்கள் நாக்கினையு மறுத்துப் பல துக்கத்தையு முறுவிப்பார்கள். அப்பொழுதந்தப் பொய்சொல்லிய கொடியவர்கள் தாமுன்பு சொன்ன பொய்களெல்லாந் தம்மனத்தி லுதிக்க வுதித்தவாறே யதனாலுண்டாகிய பாவபலம் போமாறு விசாரித்து 'அதற் கென்னசெய்வோம்' என்று உள்ளமு மெலிவார்கள். (கஙஎ)

வேத மாதி நூலி லுள்வி திக்த றத்தி னைப்பழித்
தேத மான நூலி யம்பு மீனர் நாவெ ழுந்துபோய்க்
காத மோட ளைத்து ரங்க விக்க வெங்க லப்பையால்
வாதை கூரு மாறு கீழி யூறு செய்ய மாய்வரே.

(இ-ள்.) வேதாகம புராணத்தி லுண்டாகிய விதிமுறைமையைப் பழித்து அதற்கு விபரீதமாகிய நூலினைச் சொல்லு மற்பர்கள் நாக்கு ஒன்றரைக் காதவழிதூர மெழுந்து வளர அப்படி வளர்ந்த நாவி லவர்கள் துயரமுறும்படி எமதூதர்கள் கொடியகலப்பையினு லுழுது புண்படுத்த வதனாலே சோர்வார்கள். (கஙஅ)

நாலடித்தரவுக் கொச்சகக்கலிப்பா

விதித்திறத்தைச் செவிப்புலத்துள்
விளைத்தருள்செய் வேதியனைக்
கொதித்ததட்டு மவர்முகத்தைக்
குடைந்திரத்தங் குடித்திடலும்
பதைத்திடவெ ரட்டைபல
பருகியபின் னழற்காரம்
விதிர்த்தலற விட்டிடுவர்
தாமிரத்தின் வெவ்வழலும்.

(இ - ள்.) வேதாகம புராணங்களில் விதித்த முறைமையினைத் தன் காதிற் புலப்பட அருளிச்செய்த ஆசிரியனைக் கோபித்துப்பார்த்ததட்டும் பாவிகள் முகத்தை யட்டைகள் குடைந்து இரத்தங் குடிக்க

அதனாற் பதைத்து விழுவார்கள். அவ்வட்டைகள் குடித்துவிட்டபின் எமதூதர்கள் சுடுகிற காரநீரு முருக்கின செம்பும் அவர் மெய்நடுங்கி அலறும்படி காய்ச்சி விடுவார்கள்.

(வி - ரை.) வேதியன்-அறிவிப்பவன். புலம்-அறிவு. (கஙகூ)

உருகியபித் தனைத்தழலு மொழுக்கிடுவ ரதன்பின்பு
விரையவழ லுறுதயில மதுதனையும் விட்டிடுவர்
பொருகிருமி மலவளறும் பூரிப்பர் புல்லியரை
வெருவுறுத்தி நமன்றூதர் விதியிகந்த வினைவிடவே.

(இ - ள்.) எமதூதர்கள், வருணாச்சிரமத்துக்கேற்ற விதியினை விட்டவர்களுடைய பாவம் போம்படி யந்த அற்பரைப் பயமுறுத்திப் பித்தளையை யுருக்கி விடுவார்கள்; அதன்பின்பு எண்ணெயினையுங் காய்ச்சிச் சடுதியில் விடுவார்கள்; அதுவல்லாமல் புழுக்க ணெருங்கிய மலச்சேறுகிய நரகத்திலு மழ்த்துவிப்பார்கள். (கசo)

உற்றிடுவ ருரைத்ததுய ரனைத்தினையு பொறுவாதே
பெற்றெடுத்த தாய்தன்னைத் தந்தைதனைப் பெரியோரைப்
பற்றறவே பாடித்துக் கொதித்ததட்டிடும் பாவியருங்
குற்றமவர் செய்திடினும் பொறுத்திடுகை குணமன்றே.

(இ - ள்.) பெற்று வளர்த்த மாதாபிதாக்களையும் மகாத்மாக்களையு மவர்களிடத்து நேசமில்லாத வசனத்தைச் சொல்லிக் கோபித்துறுக்கும் பாவிகள், முன்னே சொன்ன நரகங்க ளெல்லாவற்றையும் நீக்கமின்றி யனுபவிப்பார்கள்; ஆகையா லவர்கள் குற்றஞ் செய்தாலு மதைப் பாராட்டாமற் பொறுத்தலே நன்மையாம். (கசக)

உத்தமரை மதியாதே யுபானபதத் தொடுநடக்கு
மத்தரையு மழற்சுரிமுள் ளிலவடர மறுதன்னிற்
பொத்திடுவர் முதுகறைவர் புளரிருப்பு முளைத்தண்டாற்
கொத்திடுவ ரங்குசத்தா லீர்வாளாற் குறைப்பருமே.

(இ - ள்.) பெரியவர்களை மதியாம லவர்கள் முன்னே மரவடி செருப்பு முதலியவற்றைத் தொட்டு நடக்கு மறிவில்லாதவர்களை எமதூதர்க ளக்கினி சொலிக்கிற முள்ளிலவமரமாகிய நரகத்தில் முகங் கீழாகப் போட்டு இருப்பு முளைகளை நெருங்கக் கடாவிய தடியினால் முதுகி லடிப்பார்கள், அதுவல்லாமல் குடாரியினாலுங் கொத்தி யீர்வாளாலு மறுப்பார்கள். (கசஉ)

உற்றிடுவ ருரைத்ததுய ரனைத்தினையு முயிர்க்கிரக்க
மற்றுவதைத் தவைதம்மை யவலமெனு தவற்றானைத்
துற்றினரு மற்றுமுள கொலைபுரிந்த துரிசினரும்
பற்றுமிலர் படுந்துயர்க்குக் கடுந்தூதர் வலிப்பட்டே.

(இ - ள்.) உயிருக் கிரக்கமற்றுத் தமக்குப் புசித்தற்கருகமாகிய மிருக முதலிய வுயிர்களை வதைத் தவற்றி னூன்களைக் குற்ற மென்று எண்ணுமற் புசித்தவர்களும், புசித்தற் கருகமல்லாத வுயிர் களை வதைத்த பாவிகளும், எமதூதர்கள் வலியி லகப்பட்டு அவர்கள் படுந்துயரத்துக் காதாரமு மற்று முன் சொன்ன நரகங்க ளெல்லா வற்றையு மனுபவிப்பார்கள். (கசங)

அரிந்தரிந்தே யுடலூனை யருத்திடுவ ரிரத்தமெலாஞ்
சொரிந்துகுடித் திடச்சொலுவர் தூதர்பசி தோன்றவன
மிரந்தவர்க்குப் பசிதணியா திருந்தருந்து மீனரையும்
அருந்தியிடக் குளிர்ந்தபுன லுதவாத வவலரையும்.

(இ - ள்.) எமதூதர்களாயினோர், பசித்து வந்த அதிதிகளுக்கு ஆகாரமிடாமற் ரூனே தனித்திருந்து புசிக்கு மற்பரையுந், தாகங் கொண்ட பேர்களுக்குத் தண்ணீர் கொடாத பொல்லாதவர்களையும், அவர்களுடைய மாமிசங்களை யரிந்தரிந்து புசிப்பித்துச் சரீரத்தையுங் குடைந்து இரத்தத்தை வாங்கி யவர்களைத்தானே குடிக்கச் சொல்லு வார்கள். (கசச)

பின்னுமவர் தமையாலைக் கரும்பெனவே பேதிப்பர்
துன்னுமசி தாலவனத் துடறுணியத் தொகுத்திடுப்பர்
பின்னமுற வுடலழுன்ற சூசிபல பெறுத்திடுவர் [வரே.
கொன்னவினுந் தழல்சூலக் கொழுந்தினுமெய் கொளுத்து

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அசிதாலவனம் - வாள்போன்ற மட்டையினை யுடைய பனங்காடு. சூசி - ஊசி. கொன் - அச்சம். (கசரு)

அறுத்தொறுப்ப ருறுப்பனைத்து மீர்வாளா லகத்தெலும்பு முறித்திடுவர் கண்கலங்க முகத்தறைவர் முரணழியப்
பொறுப்பரிய துயரனைத்தும் பொருத்திடுவ ரெரித்திடுவர்
கறுத்திடுவ ரிரங்காத கரிசுதனைக் கழித்திடவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அகம்-சரீரம். முரண்-வலி. கறுத்தல்-கோபித்தல்.

நிறுத்திடுவ ருச்வாச நிருச்வாச நிரயத்தும்
வறுத்தமணன் முகத்தறைவர் மாரௌர ரௌரவத்து
முறுத்திமிசு வொறுத்திடுவ ரொள்ளழற்கூ ரிருப்புமுளை
செறித்தறைவர் கோசத்தின் முகமதனிற் சிரத்தினுமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) உச்சுவாசம்-சுவாசம்விடுதல். நிருச்சுவாசம்-சுவாச மடைதல். (கஎஎ)

பதத்தறைவர் குதத்தறைவர் பதைத்தழுங்க வுரத்தறைவர்
விதிர்த்தகாத் தினுமறைவர் வெய்யவழற் செங்கவினு
மிதித்திழுப்ப ருதகான முதவாத வெட்டியரைக்
கதத்தெழுந்து நமனுணை கடவாத கடுந்தூதர்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) 'உதகானம்' என்றூர் உதகம்-அன்னம் என்பவை களை. கதம்-கோபம். (கஎஅ)

[மேற் பரதாரகமனம் பண்ணும் புமானையும் அங்ஙாரியையு
மெமதூதர்கள் துய்ப்பிக்கு முறையை யாறு
செய்யுளா லுணர்த்துகின்றூர்.]

பரிவுடைய பரதாரி யழலிருப்புப் பாவையினை
யுருகியிட வுடன்முழுதுந் தழுவியழு தூளைந்திடுவ [டியு
னுரியவனை யொழிந்தொருவற்குடல்கொடுத்த வொண்டொ
மெரியுருவப் பாவையவ னெனத்தழுவி யிளைப்பாளே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அழலிருப்புப்பாவை-சோர நாரி ரூபமாகிய இருப் பழற்பாவை. உளைதல் - துக்கித்தல். எரியுருவப்பாவையவன் - புமா னுருவமாகிய இருப்பழற்பாவை. (கஎகூ)

பிரிந்திடவே விரைந்திடமப் பேதைதனைப் பிரியாதே
பொருந்தியிட வழலுருவிற் புணர்த்திடுவர் கணவனைநீ
பிரிந்தனையே புணர்ந்தனையே பிறருருகின் பெரும்பாவம்
பிரிந்திடுநாள் பிரிந்திடுநீ யெனத்தூதர் பேசுவரே.

(இ - ள்.) வெளி. (கஅ௦)

மற்றவனு மழன்மயத்த வடிவுசுட வறிவுசெய
லற்றழிந்து பிரிந்திடவே யாதரிப்ப னவன்றனையு

மற்றொருவன் மனைமகிழ்ந்த வல்வினைநின் றனைப்பிரிந்தே
யற்றிடுநா ளகன்றிடுநீ யெனக்கடுகி யழுத்துவரே.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) மற்று-வினைமாற்று. ஆதரித்தல்-விரும்பல். (கருக)

இனையகடு வினையதனை யியற்றினரை யிருப்பாலே
வனைகுடத்துட் புகுத்தியதன் வாயடைத்து வன்றாதர்
கனன்மிசையே வைத்தெரிப்பர் கன்றவுட னுரலிடிப்ப
ரணலொழுகு சிலைதனினு முடல்சிதற வறைவாரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) வனைதல் - பண்ணுதல். (கருஉ)

வெருளவிருட் கூவத்தும் விட்டிடுவர் விள்ளவுடற்
பிரமரங்கள் பெறுத்திடுவர் நிறுத்திடுவர் பெருங்கிருமி
யுருவவுடல் குடைந்திடனு முதிரவெள மொழுகியிட
வெரியனைய காரவெள்ளக் கூவத்து மிறக்குவரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பிரமரம் - வண்டு. வெள்ளமென்பது திரிந்து நின்றது. (கருங)

பின்னுமவ ரெரிவாய நிரயத்துப் பெயப்பட்டுக்
கின்னமுற வுடலுருகக் கிடந்திடுவர் தொடர்ந்தவினை
தன்னையினைந் தழுங்கிடுவர் விதித்தவினை தனைத்தவறித்
துன்னினர்க டயரவிதந் தனைக்கொடுக்குந் துரிசினையே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பெய்தல் - போடல். கின்னம்-துக்கம். துரிசு - பாவபலம். (கருச)

[குரு முதலிய மூவருக்கும் ஏவல் செய்யக் கூசினவர்கள்
முதலாயினோர் படுந்துயாம் நான்கு செய்யுளால்
உணர்த்துகின்றார்.]

தேசிகர்க்குந் தேவர்க்குஞ் சிறப்புடைய வருந்தவர்க்குங்
கூசினரை யேவலுக்குக் கொதித்தமனக் கோணினரைத்
தூசினையும் பிறர்மனையிற் றொட்டெடுத்த சோரரையும்
பாசமுற வுறுப்பெவற்றும் பிண்டமெனப் பந்தித்தே.

(இ - ள்.) ஒரு லிங்க சங்கமாகிய அடியவருக்கு ஏவல் செய்யக் கூசினவர்களையும், அவர்களைக் கோபித்த பொல்லாத மனமுடையவர்களையும், புடைவை திருடின சோரரையும், எமதூதர்கள் தமது பாசக் கயிற்றினா லவர்க ளவயவங்க ளெல்லாவற்றையுங் கூட்டிக் கொட்டைக் கட்டாகக் கட்டி. (௧௫)

எறிந்தருந்த விருப்பமையத் தம்பிகளை யேவிடுவர்
செறிந்திடவுஞ் செந்தழலிற் செலுத்திமிக வொறுத்திடுவர்
பிறிந்திடவுஞ் செந்தழலிற் பெய்திடுவர் மையமுளா
மூறைந்தருகக் காரிட வழலிடையு முறுத்துவரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) காரீடவழல்-வறளித்தழல். (௧௬)

கூட்டிடுவ ருமியழற்குங் கொடிதாய வதுதன்னின்
மீட்டரைப்பர் சாசரத்த வெட்டியகற் பாறையினு
மூட்டிடுவ ருனைத்து முடலிடையே யுற்பவித்துத்
தேட்டுடைய விரைக்கிருமி யனைத்தினுக்குஞ் சிறப்புறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) உற்பவம் - உண்டாக்குதல். (௧௭)

அழுத்திடுவர் கிருமிசெறி யவக்குழிக்கு ளதன்மீட்டே
புழுத்ததசைக் குழியுள்ளு முறுத்திமிக வொறுத்திடுவர்
வழுக்கறவே பொருகிரியி னிடைநெருக்கி வருத்திடுவ
ரழற்குழியி னதோமுகமா வழுத்திடுவ ரவர்தமையே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) உழுத்ததசை-நாற்ற மாமிசம். பொருகிரியினிடை நெருக்கல்-இரண்டு மலையினால் நெருக்கல். அதோமுகமாவழுத்தல்-தலைகீழாகப் போடுதல். (௧௮)

[பரிவோடன்றி இடுவோர்கள் பரான்னத்தைப் புசித்தோர்கள் படுந்துயர முணர்த்துகின்றார்.]

அழலொழுகு மிருப்புண்டை யவைவிழுங்க வடித்திடுவர்
ஒழுகியிட வுதிரவெளங் கசையாலு மொலித்திடுவர்
பழுதுறவே பராமதியா திடுசோறுண் பரிசிலரை
யழுதழுவா கதறியவர் வீழ்ந்திடத்து துவாதிர்த்தே.

(இ - ள்.) வெளி. (௧௯)

[ஆலய முதலியவற்றுள் மலவிசர்க்க முதலியவை செய்தவர்கள் படுந்துயர மிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஈசர்திரு வாலயத்து மிடர்கடியும் புனற்றடத்தும்
வாசமலர்த் திருநந்த வனத்திடையு மடத்தினுளும்
மாசுகளைந் தருந்தியன மைதுனமற் றையதொழிலுங்
கூசமறப் புரிகின்ற கொடியாரை மிகக்கொதித்தே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மாசுகளைதல்-மலவிசர்க்கமுதலியன செய்தல். மற்றைய தொழில்-சயனாதிகள். கூச்சமென்பது திரிந்துநின்றது. ()

இக்கெனவே செக்கிடையிட் டியந்திரிப்பர் யமதூதர்
துக்கமுற நரகவித மெனைத்தனைத்துந் தொகுத்தொறுப்பர்
உக்கிரவா ரழனிரயத் தொடுக்கிடுவ ருருகிவிழத்
தக்ககதிர் மதியளவு மவரதனிற் றவிப்பாரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) உக்கிரவாரழனிரயம்-குரூரமாகிய எரிவாய் நரகம்.

[ஆசிரியனை நிந்திக்கக் கேட்டிருந்தவர்களுஞ், சிவயோகிகள் தபோதன ரிவர்களுக் கபராதம் பண்ணினவர்களு மனுபவிக்குந் துயரத்தை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

குரவனையு நிந்தனைகள் கூறியிடக் கேட்டார்த
மிருசெவியிற் றுளையுறவே யெரியிருப்பு முளையறைவர்
உருகியதா மிரமற்று மொழுக்கிடுவ ரவற்றுளுறப்
பருவரலுற் றிடநிரய விதத்துமுறப் பதிப்பாரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பருவரல்-துக்கம். (கசுஉ)

உற்றிடுவர் செவிப்புலத்தி னுறுதுயர மெனைத்தனைத்து
மற்றுமுள விந்திரியத் தபராத மருவினர்க
ணொற்றிவிழி நிருமலனை நினைந்துலக வியற்கைதனை
யற்றவருந் தபோதனர்க்கும் புரிந்தாரு மபராதம்.

(இ - ள்.) அந்த ஆசிரியர்க்கு மற்றுமுள்ள கண்முதலிய விந்திரியங்களினு லபராதம் பண்ணினவர்களு முதற்கண் செவிப்புலத்தினுக்குக் கூறிய துயரமெத்தனை யுண்டோ வத்தனையு மவ்விந்திரியங்

களி லனுபவிப்பார்கள். உலகவியற்கையை யொழித்துச் சிவத்தியானம் பண்ணியிருக்கும் ஞானிகளுக்குஞ் சாதகர் முதலிய தபோதனருக்கு நிந்தை முதலிய அபராதம் பண்ணினவர்களுங் குருநிந்தை சொல்லக் கேட்டிருந்தவர்க்குச் சமமா யனுபவிப்பார்கள். (௧௬௩)

[பிறர் மனையாளை யிச்சித்துத் தீண்டினோர்கள் துயரமுணர்த்துகின்றார்.]

மற்றொருவன் மனையாளை வாஞ்சையுறப் பரிசித்த
குற்றமறக் கூரழல்வாய்ச் சூசியினாற் குத்திடுவர்
முற்றுமுட லுதிரத்தின் முழுக்கனலு மொழுக்கிடுவர்
மற்றுமுள நிரயவிதத் தினுமழுத்தி வருத்துவரே.

(இ - ள்.) வெளி. (௧௬௪)

[பிறர் மனையாளை விழைந்து விகாரத்தால் பார்த்தவர்களை யெமதூதர்கள் துய்ப்பிக்கு முறையை யுணர்த்துகின்றார்.]

மனமுருக விழிகுளிர வாஞ்சையுறப் பார்த்திடினு
முனமுரைத்த துயரவிதங் கண்டனிலு முற்றுவிப்பர்
நினைவழிய வலிதொலைய நிலைமையினை நீங்கினர்க்குத்
துனியதனை முறையுறவே துய்ப்பிக்குந் தூதவரே.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) 'கண்டனிலும்'என்ற வும்மையாற் சரீரத்திலு மென்பதூஉங் கொள்க. (௧௬௫)

[ஆசிரியரைக் கோபத்தினாற் கண்செவந் தேறிட்டுப் பார்த்தவர்களையுஞ், சிவபூசை யக்கினிகாரிய மதிதிசற்கார மிவை செய்யாமற் புசித்தவர்களையும், எமதூதர்கள் துய்ப்பிக்கு முறையை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

எற்றியிட வினைப்புருவ மிரத்தவரி விழியிரண்டும்
பற்றியிடப் பரிவொழியக் குரவனுருப் பார்த்தாரை
பெற்றியிரு விழிமுழுது மெரிவிரவுஞ் சூசியினை
யுற்றுறுத்திக் காரவழ லொழுக்கிடுவ ருணர்வறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) இரத்தவரி-செவ்வரி. (௧௬௬)

பஞ்சவித லோகவழற் பதைத்தலறக் கவிழ்த்தொறுப்பர்
நஞ்சமுறிய மனமவரை மற்றைநர கினுகவிப்பர்
துஞ்சிருளி னடமாடி யடிப்பூசை தொடங்காதே
யஞ்சியழ லோம்பாதே யதிதியரை யருத்தாதே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பஞ்சவிதலோகம் என்பன:

சூத்திரம்

"பொன்னும் வெள்ளியுஞ் செம்பு மிரும்பும்
அன்ன வீயமு மைவகை யுலோகம்."

என்பதனு லுணர்க. 'துஞ்சிருள்' என்பது சங்கார காலம். (கசுஎ)

அருந்தினர்க ளுவினிடை யழலொழுகு மிருப்பாணி
பொருந்தியிட வொருநூறு புதைத்திடுவர் பதைத்தலற
வருந்தியிடக் காரவழ லுடன்முழுதும் வார்த்திடுவ
ரெரிந்தொழுகு தாமிரமு மிறைத்திடுவ ரிளைப்புறவே.

(இ - ள்.) வெளி. (கசுஅ)

[சிவனது நந்தவனத்துப் பூவையெடுத்து முடித்து
முகந்தோர்களைத் துய்ப்பிக்கு முறைமை
யுணர்த்துகின்றார்.]

இணையிலிநந் தனவனத்து ளினையாரு மணமலரை
பெணமிழந்து பறித்துமுகந் தெழிலுறவே முடிக்கணியிற்
றிணமுடைய வழலிருப்பு முளையறைவ ரவர்சிரத்தின்
மணமுகர்ந்த நாசியினுங் காரமுதல் வார்ப்பாரே.

(இ - ள்.) வெளி. (கசுகூ)

[சிவன் முதலாயினோரையுஞ் சிவாகமத்தையுந் தூடிப்போரையும்
எமதூதர்கள் துய்ப்பிக்கு முறைமை மூன்று
செய்யுளால் உணர்த்துகின்றார்.]

அமலனையுங் குரவனையு மமலனுக்கே யாட்பட்டுத்
தமலமறத் தவஞ்செய்யுந் தகுதியர்க ளவர்தமையு
நிமலனுரை யதுதனையு நிந்தித்தா ரவர்வாயுட்
டிமிலமுற விருப்பாணி யழலறைவர் துயருறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) துமிலம்-ஆரவாரம். (கஎ0)

திந்தத்தி னிடைதோறு மதபோட்ட மிவைதனிலுஞ்
சிந்தச்செங் குருதியொலாஞ் சிரத்திடையு முரத்திடையுஞ்
சந்தித்த விடைதோறு நாசியினுந் தழலொழுக
வெந்துற்ற விருப்புமுனை யறைந்தொறுத்து வெறுப்பாரே.

(இ - ள்.) வெளி. (கஎக)

ஒழுக்கிடுவ ரழுந்கார முடன்முழுதுந் தாமிரத்தி
னழுந்சொரிவர் மற்றுமுள வல்லவெலா மருத்திடுவர்
பழித்திடுவர் நிரயவித மனைத்துமுறப் பதைக்கவுடற்
றொழிறபலத்தை முறையுறவே துய்ப்பிக்குந் தூதுவரே.

(இ - ள்.) வெளி. (கஎஉ)

[கையினாற் பிறர்பொருளைக் கவர்ந்தவரையும், பிராமணர் வடிவிலுஞ்
சிவனுக்குக் கருதிய பதார்த்தங்களினுஞ் சிவாகமத்தினு
மறந்தாயினுந் தங் கால்படச் செய்தவரையும், எம
தூதர்கள் துய்ப்பிக்கு முறைமை இரண்டு
செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அன்னியர்தம் பொருளதனை யங்கையினாற் பற்றிடினு
மன்னுபுகழ் விப்பிரர்தம் வடிவிடத்து மறந்தேனுந்
தன்னுடைய பதம்படினுஞ் சங்கரர்க்குக் குறித்தபொரு
ளின்னிசைய வாகமமென் றியம்பியிடு மிவைதனினும்.

(இ - ள்.) வெளி. (கஎங)

கரமதனிற் பதமதனிற் காரவழற் கவிழ்த்திடுவ
ருருகியதா மிரத்தினையு மொழுக்கிடுவர் வழுக்கறவே
நிரயவித மனைத்தனைத்து முணர்வறவே நிறுத்திடுவர்
கரவினையும் பதவினையுங் கட்டதரங் கட்டதரம்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) வழுக்கு-நீக்குதல். கட்டதரம்-மிகுந்தகொடுமை. ()

[சிவாலய முதலியவற்றில் மலமூத்திராதிகளை விட்டவர்களை
யெமதூதர்கள் துய்ப்பிக்கு முறைமை மூன்று
செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஈசர்திரு வாலயத்து மெழிலுறுநந் தனவனத்து
மோசகனை மலமதனை மூத்திர முராழித்துக்

கோசமதிற் பீசமதி லயோமயத்த குறுந்தண்டா
லோசையுற நமன்றூதர் நருக்கிமிக வொறுப்பாரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அயோமயத்த தண்டு - இருப்புத்தடி. (கஎரு)

அனலொழுகுஞ் சூசிபல வழுத்திடுவ ரவைதம்மிற்
கனலொழுகு மயோமயத்த தண்டமதிற் கண்டகமு
மினலுறவே குதத்தியற்றிச் சிரத்தின்மிசை யெழவேற்றி
நினைவழிய வலிதொலையத் துயரவித நிறுத்துவரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கண்டகம் - முள். இன்னல் - துக்கம்; இன்னல் என்பது இரிந்துநின்றது. (கஎசு)

கனலனைய காரவழ லவைதம்மிற் கவிழ்த்திடுவ
ரனலொழுகு தாமிரமு மலறிடவே சொரிவார்க
ளினையதுயர் மற்றுமுள விந்திரியத் தியற்றிடுவர்
வினையவல மவற்றூலும் விதியிகந்து விளைத்தவர்க்கே.

(இ - ள்.) வெளி.

(வி-ரை.) 'மற்றுமுள்ள விந்திரியம்' என்பது மற்றையதென்பது. சுட்டியதற்கினம் என்பதனல் வாக்கு முதலியனவுங் கொள்க.

[மிகவுந் தனதானியங்களைப் படைத்திருந்தும் அறஞ்செய்யாதோரை எமதூதர்கள் வேதனைப்படுத்து முறைமை ஏழு செய்யுளா லுணர்த்துகின்றூர்.]

தனமிகுதி தரித்திருந்துந் தானவினை புரியாரை
மனைதனிற்செஞ் சாலிமிக வுளராயும் வறியார்வந்
தனமுளதே யெனவிரந்த வதிதியரை யருத்தாதே
தனியிருந்துண் ணவலரையுந் தண்டதரன் றமர்தாமே.

(இ-ள்.) எமதூதர்கள், மிக்க திரவியத்தை உடைத்தாயிருந்துந் தானதர்மங்களைச் செய்யாதவர்களையுந், தம்முடைய மனையினிடத்துச் செஞ்சாலிமுதலிய வெகுதானிய முண்டாயிருக்கவும் பசி மிகுதியால் வந்து 'ஆகாரம் வேண்டும்' எனக் கேட்ட அதிதிகளைப் புசிப்பியாமற் றூமே தனித்திருந்து புசிக்கும் பொல்லாதவர்களையும், ()

அறைந்திடுவர் கூறியவா யிருப்புமுளை யவர்மிடற்றுட்
புறம்புறுமவ் வாணிவளைச் சிறுங்கல்லையைப் பூட்டிடுவர்

சிறந்தவய விருதம்பத் திடைக்கணையிற் செறித்திடுவர்
பறந்திடவே பதம்பாணி பக்கமுறப் பயிற்றுவரே.

(இ - ள்.) கூரிய வாயினையுடைய இருப்பு முளைகளை அவர்கள் கழுத்தினுள் ளிறங்க வடித்துப், புறமபே பொருந்திய இருப்பாணி வளையத்தில் சங்கிலியைப் பூட்டி, இரண்டிருப்புத் தூணை நாட்டி, அதன்மே லுத்திரத்தைப் போட்டு, அதனடுவே தூறலருடங் கிடக்கும்படி கட்டித் தூக்கிக் காலுங் கையும் இரண்டு புறத்திலும் பறக்கத்தக்கதாக விடுவார்கள்.

(வி - ரை.) சிருங்கலை - சங்கிலி. (களகூ)

சிரத்தறைவர் குளத்தறைவர் திறந்துறவாய் தனிலறைவ
ருரத்தறைவர் பதத்தறைவ ரொள்ளழற்கூ ரிருப்புமுளை
கரத்தறைவர் வருத்தமுறக் கசிந்தன்பாற் கடும்பசியி
லருத்தியிடா தருந்தவரை யருந்தியதி வினையறவே.

(இ - ள்.) வெளி. (கஅ0)

வாக்கதனைக் கிருமிபல மண்டியுண வயத்துண்டக்
காக்கைபறித் தருந்தியிட மற்றுமுள கடிந்துயர
மாக்கிடுவர் நாக்கினடுத் தொளைத்தழன்ற வயத்தொடரால்
வீக்கியதி பாரவிருப் புண்டைபல விடுவாரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கிருமி - புழு. அயத்துண்டக்காக்கை - இருப்பு மூக்கையுடைய காக்கை. அயத்தொடர்-இருப்புச்சங்கிலி. வீக்குதல்-கட்டுதல். (கஅக)

கட்டிடுவர் பீசத்துங் கோசத்துங் கடியதொடர்
விட்டதனை நான்றிடவே வியனிருப்புக் கட்டிதனைக்
கட்டிடுவ ரதன்முடிவிற் கரத்துமிவற் றிரட்டிரட்டி
நிட்டூரரை நிதியுதவக் கருதாத நெஞ்சரையே.

(இ - ள்.) எமதூதர்கள், திரவியத்தைத் தருமத்திற் செலுத்த விசாரியாத நெஞ்சினையுடைய கொடிய பாவிகளுடைய பீசத்திலுங் கோசத்திலும் இருப்புச் சங்கிலியைக் கட்டிவிட் டதனுனியிலே மூக்கூறிய இருப்புண்டைகளி லிருமடங்கு கனமுள்ள இருப்புக் கட்டியைக் கட்டித் தொங்கவிடுவார்கள். அதற்குப் பின்பு கைகளிலும் இருப்புச் சங்கிலியைப் பூட்டி நான்மடங்கு கனமுள்ள இருப்புக் கட்டியைக் கட்டி விடுவார்கள். (கஅஉ)

அரிந்தரிந்தே யவராகந் திலமெனவே யருத்திடுவர்
சொரிந்திரத்தங் குடித்திடவுஞ் சொல்லிடுவர் சூசியினு
லெரிந்தொழுகுங் காரவற விறைத்திடுவர் தாமிரமுஞ்
சொரிந்திடுவ ரழலொழுகுந் தயிலமும்பின் சொரிவாரே.

(இ - ள்.) எமதூதராயினோர் அந்தப் பாவிகள் சரீரத்தை எள்ளுப்போல அரிந்து அதனைத் தின்னச்சொல்லுவார்கள். அதுவல்லாமல் ஊசியினாலும் அவர்கள் சரீரத்தைக் குடைந்து உதிரத்தையேற்றுக் குடிக்கச் சொல்லி அப் புண்வாயிலே அக்கினிச்சுவாலை போன்ற காரநீரையும் இறைத்துச் செம்பினையும் உருக்கிவிடுவார்கள். அதற்குப் பின் எண்ணெயினையும் நெருப்புப்போலக் காய்ச்சி விடுவார்கள். (கஅங)

அதிதூர வழலிடையு மழுத்திடுவ ரதன்பின்பு
கொதியாமற் றையநிரயத் துயரனைத்துங் கொடுத்திடுவ
ருதராங்கி தனைமிகவு முதிப்பித்தே யொறுத்திடுவ
ருதகாசை யுறத்தபன வழலினையு முதிப்பிப்பார்.

(இ - ள்.) எமதூதர்களாயினோர் அப் பாவிகளை மிக்க ஆழத்தினையுடைய எரிவாய் நரகத்தினும் மற்றுள்ள பொங்கு நரகங்களிலும் போட்டுத் துக்கங்கள் எல்லாவற்றையு முறுவிப்பார்கள். பின்பு, 'அதிதிகள் பசித்திருக்கப் புசித்தீர்' என்றவர்கள் உதரத்திலே மிகவும் பசியை யுண்டாக்கித் தண்ணீர்மேல் ஆசை யுண்டாக்கும்வண்ணந் தாகத்தையும் உண்டாக்கி வேதனைப்படுத்துவார்கள்.

(வி - ரை.) தபனவழல்-தாகம். (கஅச)

[நரகவேதனைகளை அளவிடப்படாதென்று
முடித் துணர்த்துகின்றார்.]

ஒருநிரயத் துயர்பலவே யுரைப்பனவோ வுரைத்திடினு
நிரயவித மனைத்திலுங்கு நிரந்தரதுயர் நிச்சயித்து
வருடமொரு சதமுறினு மதித்துரைக்க வலரிலரே
யருநிரயக் கடற்றுயரப் பெருவெளத்துக் களவுண்டோ.

(இ - ள்.) ஒவ்வொரு நரகவேதனையை விசாரிக்குமிடத்து அனந்தமாயிருக்கும். அதனைச் சொல்லப்படுமோ. சொல்லுமிடத்து நரகங்களெல்லாவற்றிற்கும் பொருந்திய வேதனையை அளவிட்டு நூறுவருடஞ் சொன்னாலும் அமைத்துச் சொல்ல வல்லவர்களில்லையே. ஆதலா லுரைத்தற்கு அரித்தாகிய நரகக்கடலிற் றுக்கமாகிய பெருவெள்ளத்துக்கு முடிவுண்டோ முடிவில்லை. (கஅரு)

[நரக வேதனையின் அதிசய முணர்த்துகின்றார்.]

வேதத்தி னாகமத்தின் விதிபிகந்து விடுத்தார்கள்
வாதிக்கப் படுவரவற் றனைத்தினுந்தா மரியாரும்
மேதைக்குண் மாதுரியர் கேட்டவுடன் வீவரெனப்
போதிக்குங் கடுந்தழலிற் கொடுவினையார் புகுவாரே.

(இ - ள்.) வேதாகமங்களிற் கூறப்பட்ட வழியில் நடவாது அதனைக் கடந்துவிட்டவர்கள் இப்படிக் கூறப்பட்ட நரகவகைக ளெல்லாவற்றினும் எமதூதர்களால் வேதனை பண்ணப்படுவார்கள். அப்படி வேதனைப்படினுஞ் சாகவுஞ் செய்யார்கள். புத்தியினுன் மிக வுங் கூரியராயினோர் இவ் வேதனையைக் கேட்டமாத்திரத்தில் தானே சாவாரென்று வேதாகமங்கள் சொல்லுமாதலால் அறக் கொடிய துன்பங்களைச் செய்கின்ற அனல்போன்ற நரகத்தில் யார் தான் புகுவார்கள்?

(வி - ரை.) வீதல் - சாதல். (௧௮௬)

[எமதூதர்கள், நரகத்திலே கிடந்து வேதனைப்படும் ஆன்மாக்களுக்கு அவர்கள் முன் செய்த பாவங்களை எடுத்துக் கூறி அறிவுறுத்துந் திறத்தைப் பதினொரு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

கலிநிலைத்துறை

வித்தக னற்றுணை யென்று மதித்து விரும்பீரே
பொத்தை யுடற்பொறை நிற்கு மெனப்பொய் புகன்றீரே
யொத்து மருற்ற துயக்க மயக்க மொழித்தாரோ
மித்திர ரைப்பரி வுற்றதன் மத்தை விளைத்தீரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) வித்தகன்-சிவன். உமர்-சுற்றத்தார். மித்திரர்-இட்டர். (௧௮௭)

யாதனை யுண்டுகொ லென்று துயங்கி யிருந்தீரே
நாதனு முண்டுகொ லென்று கயந்து நவின்றீரே
போதன முண்டுகொ லென்றவர் தம்மை யொழித்தீரே
வேதனை கண்டுவி யந்து பயந்து விழுந்தீரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) 'உண்டுகொல்' என்புழி, ஒகாரம் ஐயப்பொருட்டு. துயங்குதல்-அறிவு வேறுபாடு. கயத்தல்-தூடனம், வியப்பு - அதிசயம். (௧௮௮)

கண்டக ரோடுக ளித்தற நீதி கறுத்தீரே
யுண்டொரு தெய்வமு மென்றவர் தம்மை யுவர்த்தீரே
யண்டர்த மாலய மாமர மற்று மறுத்தீரே
மண்டனில் வாழ்வைம தித்தெளி யாரை வதைத்தீரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கண்டகர்-துட்டர். கறுத்தல்-நீக்குதல். உவர்த்தல்-கோபித்தல். (௧அ௯)

பஞ்சக பாதக மன்றெளி தென்று பயின்றீரே
நஞ்சன வெஞ்சொலை நற்றவ ரோடு நவின்றீரே
வஞ்சக நெஞ்சக மாதர் களிப்பு மதித்தீரே
யஞ்சன வேல்விழி யாருறு கற்பு மழித்தீரே.

(இ - ள்.) வெளி. (௧௯௦)

ஓர வழக்கினை மன்றி லிருந்து முரைத்தீரே
யாரெதி ரென்றுமை யேமிக மேன்மை யறைந்தீரே
பாரென வேபொறை யாரையு நொய்மை பகர்ந்தீரே
நீரென வேயினி யாரையும் வெல்ல நினைந்தீரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) நீரெனவே யினியார் - தண்ணீர்போல இனிமை செய்கின்ற சாத்துவித குணத்தை யுடையவர்கள். (௧௯௧)

உற்ற விடுக்க ணொழித்தவர் தம்மையு மோரீரே
மற்றவர் காணியு மெம்மது வென்ன மதித்தீரே
சிற்றின மேயின மென்று தெளிந்து செறிந்தீரே
மற்றின மொன்றிடு னன்பு மறுத்து மருண்டீரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சிற்றினம் - அற்பர். மற்றினம் - பெரியோர். ()

ஆதுல ருற்றிடு னேச மவர்க்கு மறுத்தீரே
வாத விணைதிகள் வந்துறி ஞைசையை வைத்தீரே
யேதிலர் குற்ற மெடுத்திணை யாம விசைத்தீரே
சூது பொருந்தொழி னன்றென வன்று துணிந்தீரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஆதுலர் - மிடியர். ஏதிலர்-குற்றமில்லாதவர்கள்,

ஊனற்றி லொக்கு மொருதுயிர் மெய்யை யொறுத்தீரே
வேறல வெம்முட லோடு மொருது மிசைத்தீரே
பேறுண வல்லது மில்லை யெனக்கை பிசைத்தீரே
சீறுத லேபொரு ளென்றுயி ரன்பு செகுத்தீரே.

(இ - ள்.) நம்முடைய தேகத்திற் புண்பட்டால் நோமாறு போலவல்லவோ அவ்வுயிர்க்குமென்று எண்ணாமற் பிறிதுயி ருடல்களைக் கொன்றீரே; நம்முடைய சரீரமும் அதனுடைய சரீரமும் பேதமல்லவென்று எண்ணி அதனை விரும்பித் தின்றீரே; இப்படிப் புசிப்பதே பரமமான பேறல்லாமல் வேறில்லையென்று தரும நெறியை விட்டீரே; கோபமே மேலானதென்று ஆன்மாக்களிடத்துக் கிருபை வையாமல் விட்டீரே.

(வி - ரை.) மிசைதல் - புசித்தல். (கக௪)

ஈயு மவர்க்கிடை யூறுக டேற விசைத்தீரே
காயு மவர்க்கனு பந்தரு மாயுள் களித்தீரே
நோயு முறப்பிறர் தீமை யுடற்கு நுவன்றீரே
தூய ரியற்றி யிடாவவ லம்பல சொன்னீரே.

(இ - ள்.) ஒருவருக்கொருவர் ஒன்றை யுவந்து கொடுக்குமிடத் தவர்கள் மனம் பேதிக்க விக்கினங்களைச் சொன்னீரே; ஒருவனை யொருவன் கோபிக்கும்போது அவனைத் தடுக்காமல் அதற்குடன்பட்டுச் சந்தோஷத்தை யடைந்தீரே; பிறர் சரீரத்துக்கு வருத்தமுறப் பொல்லாங்குகளையே சொன்னீரே; சுத்தான்மாக்கள் செய்யாத பொல்லாங்கைச் செய்தாரென்று பலவாகச் சொன்னீரே.

(வி - ரை.) அனுபந்தர் - வடமொழி. (கக௫)

ஒழுக்குடை யார தி மேதையர் தம்மையு மோராதே
புழுக்க மழுக்கு மனத்துற வெம்மை புகன்றீரே
சழக்கெழு வாய்வினை வாதனை யுற்றமை தன்னாலே
யழற்குழி யாங்க ளழுத்த வழுங்கி யறிந்தீரே.

என்றழல் வாயழி வாரொடு தூத ரிசைப்பார்க
ளன்றறி யோமிவை யென்றவர் தாழு மயர்ந்தாழ்வர்
பொன்றுவ ரோவினை போமள வுந்துயர் பூரித்தே
நின்றுறு வார்முனை வல்வினை யாவு நினைந்தேதாம்.

(இ-ள்.) ஒழுக்க முடையவரையும், மிகுந்த அறிவுடையவரையுமவர் மகிமையை ஆராயாமல் உம்முடைய பொல்லா மனம் புழுக்

கும்படி கொடுமைகளைச் சொன்னீரே; நீங்கள் மனக்கோணல் முதலியவற்றால் இயற்றிய பாவத்தின் வாதனை பலத்தா லழற்குழியாகிய இந் நரகங்களிலே யாங்கள் வீழ்த்த இப்பொழுது வீழ்ந்தறிந்தீரே' என்று இங்ஙனங் கூறிய பலவற்றையு மழல்வாய்ந்த நரகத்தில் அழுவாரோடு எமதூதர்கள் சொல்லுவார்கள். அப் பாவிகளும் 'அன்று இதனை யறிந்தோ மில்லை' என்று சோர்ந்து விழுவார்கள்.' இவ்வாறு வேதனைப் படுகையினும் உயிர் விடுவரோ; உயிர் விடுவதுஞ் செய்யார். பின்பு தாஞ் செய்த பாவந் தொலையுமளவுந் துக்கத்தையே நிறையப் பொருந்தி முன் தாஞ்செய்த கொடுவினைகளெல்லாந் தம் மனத்தி னினைத்து அந் நரகங்களிற் கிடந்து துயர மடைவார்கள்.()

[அதிபாதக முதலிய பாதகத்தைச் செய்தோர் அனுபவிக்குங் காலம் மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

வேறு

உற்றிடுவ ரெழுநான்கு கோடியினு மொருவாதே
பற்றியதி பாதகத்தைப் பரித்தார்கள் பாரினையு
மற்றையவின் டலத்தினையும் வாரிகொளு நாள்வரையு
முற்றுமதி பாதகத்துக் கிணையதனை முடித்தாரும்.

(இ - ள்.) அதிபாதகத்தைச் செய்தவரும், அதிபாதகத் துல்லியத்தைச் செய்தவரு மிருபத்தெட்டுக்கோடி நரகத்தையும் பொருந்திப் பிரமப்பிரளய காலமாகிய ஆயிரஞ் சதுர்யுக மதனைவிட்டு நீங்கா தழுங்குவார்கள். (௧௧அ)

இரவிமதி யுள்ளளவு மிவற்றழுங்கி யிடுவார்கள்
பிரமவதை முதலாய பிழைபுரிந்த பேதையர்கள்
விரவிடுவர் பாதகத்தை விளைந்தார்கள் பதினான்குட்
பிரமனொரு பகற்பாதி மற்றையர்க்கும் பேசிடுவாம்.

(இ - ள்.) பஞ்சமாபாதகத்தைச் செய்தவர்கள் இருபத்தெட்டுக்கோடி நரகத்திற் சந்திராதித்த ருள்ளவரையிலுங் கிடந் தழுங்குவார்கள். பாதகத்தைச் செய்தவர்கள் பதினாலுகோடி நரகத்தில் பிரமனது நித்தியப் பிரளயத்திற் பாதியாகிய ஐஞ்ஞூறு சதுர்யுகமளவுங் கிடந்தழுந்துவார்கள். மற்றப் பாதகர்க்கு மேற் சொல்வாம். (௧௧௯)

பாதமுறப் பகலதனிற் பதினான்கிற் பாதிதனில்
வாதையுறு வார்களுப பாதகத்தை மருவினர்கள்
பாதத்திற் பாதியுற மூன்றரையிற் பாவியர்கள்
கேதமறும் பொழுதவல வினையனைத்துங் கேட்டிடுமே.

(இ - ள்.) உபபாதகத்தைச் செய்தவர்கள் எழுகோடி நரகத்தி லிருநூற்றைம்பது சதுர்யுகமளவுங் கிடந்தழுங்குவார்கள். அதற்குத் தண்ணிதான பாவத்தைச் செய்தவர்கள் மூன்றரைக்கோடி நரகத்தில் நூற்றிருபத்தஞ்சு சதுர்யுகமளவுங் கிடந் தழுங்குவார்கள். இவ்வாறு விதித்த காலங்க ளளவும் அதிபாதக முதலிய பாவத்தைச் செய்தவர் கள் நரகத்தில் கிடந்து துக்கங்களை அநுபவித்துத் தொலையும்பொ ழுது அவர்களைத் தொடர்ந்துநின்ற கொடிதாகிய பாவமெல்லாம் விட்டு நீங்கும். (உ00)

[பாவிகளாயினோர் இவ்வாறு நரகபேதங்களை யனுபவித்து அக்காலந் தொலைந்தவாறே நரகசேடம் அநுபவிக்கும்படி மீளவும் பூமியில் வந்து பிறப்பா ரென்பதை இந்த செய்யுளால் உத்தரோத்தர விசிட்டமாக உணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

பாவ பேதம் பயிற்றிய பாவிக
ளேவ மாய நரகிட ரெய்தியுந்
தீவினைப் பல சேடமுஞ் சேரவே
சேர்வர் முன்பயின் மண்மிசைத் திண்ணமே.

(இ - ள்.) வெளி. (உ0க)

அடைவர் தாபர பேத மனைத்தையும்
படர்வ ரங்குள துன்ப பலத்தினும்
விடுவர் தாபர யோனியை விட்டபின்
றொடுவர் கீட வுருவுந் துரிசரே.

(இ - ள்.) இவ்வாறு பூமியில் வந்த பாவிகள் தாந்தாஞ் செய்த கர்மத்துக்கீடாக முதலிற் றாபரயோனி பேதங்கள் எல்லாவற்றையு மெடுத் தாண்டுள்ள துக்கங்களெல்லாம் அநுபவிப்பார்கள். பின்பு அத் தாபரயோனியை விட்டுப் புழுவாய்ப் பிறந்து துக்கங்களை அநுப விப்பார்கள். (உ0உ)

கிட்டியே நின்ற கீட வுருவமும்
விட்டு மற்றை விகங்க வுருவினைத்
தொட்டு நின்ற துயர்பல துய்த்தபி
னெட்டு வார்விலங் கின்னுரு யாவையும்.

(இ-ள்.) இவ்வாறு புழுவாயெடுத்த தேகத்தை விட்டு, அதற்கு வேறாகிய பறவையுரு எடுத்து, அதினால் உண்டாகிய துக்கங்களெல்

ளர் அனுபவித்துத் தொலைந்தவாறே மிருகாதிகளாய்ப் பிறந்தாண்டுள்ள துக்கங்களை அனுபவிப்பார்கள். (உ0௩)

விட்டு நின்ற விலங்கி னுருவினைத்
தொட்டு ளார்பசு வின்னுருத் துன்பமும்
பட்டு ளார்துய ரம்பல பட்டபின்
விட்டி ளார்பெற்ற மாகிய மேனியும்.

(இ-ள்.) பின்பு மிருகசாதிகளாய் எடுத்த தேகத்தை விட்டுப் பசுச்சாதி வடிவெடுத் தாண்டுள்ள துக்கங்களெல்லாம் அனுபவிப்பார்கள். அவ்வாறு துயரங்கள் பலவற்றையும் அனுபவித்துத் தொலைந்தவாறே அப் பசுசாதியா யெடுத்த தேகத்தை விடப்படுவோர்கள்.

(வி-ரை.) சூத்திரம்

"ஆவும் பெற்றமும் பகவு மானுங்
கோவுங் குடஞ்சுட்டுஞ் சாதிப் பொதுப்பெயர்."

என்பதனு லறிக. (உ0௪)

இனைய யோனி விதம்பல வெய்தியே
துனிய னைத்தையுந் துய்த்துத் துரிசுறு
வினையி னீங்கி முன் னல்வினை மேவவே
மனித ராகிப் பிறப்பர்கள் வாய்ப்பினால்.

(இ-ள்.) இவ்வாறே தாபரமுதலிய யோனிபேதங்களை யெடுத்து அந்தந்தச் சனனங்களி லுண்டாகிய துக்கங்க ளெல்லாவற்றையு மனுபவித்துப், பின்பு பாவசேடம் அமைந்த தீவினையினின்றும் விடப்பட்டு, முன்னுட் பரிபாகப்பட்ட நல்வினைப் பகுதி வந்து பொருந்த அந்த நல்வினையின் பலத்தினால் மானிடராகப் பிறப்பார்கள். (உ0௫)

[இவ்வாறு மானிடசரீர மெடுத்தவர்கள் உத்தரோத்தர விசிட்ட முதலியன வுணர்த்துகின்றார்.]

அரிய மானிட யாக்கை யடைந்தபின்
பரம லோக பலத்தினைப் பற்றவு
மொருவி யேயுல கஞ்சிவர் தொன்றவு
மிருளை நீக்கவு மெண்ணில ரென்கொலோ.

(இ-ள்.) இவ்வாறு கிடைத்தற் கரிதாகிய மானிட தேகத்தைப் பெற்றவர்கள் மேலாகிய சிவலோகத்துள்ள போகத்தைப் பொருந்தவும், அப் போகத்தை வெறுத் தாணவாதி மலத்தை நீக்கிச்

சிவனோடைக்கம் பெறவு மெண்ணினார்களில்லை யென்னை கொல்லோ. (உ0௬)

[இதுவுமது]

அரிது மானிட யோனிய வற்றுளு
மரிது பூசுர ராகையு மாகியு
மரிது நான்மறை யாய்கையு மாசற
வரிது வாமொடு முத்தி யடைகையும்.

(இ - ள்.) தாபரமுதலிய அறுவகை யோனியினுள்ளு மானிட தேக மெடுத்தலே யரிது; அம் மானிடருள்ளும் பிராமணவருண மெடுக்கை யரிது; பிராமண வருண மெடுத்தாலும் நாலு வேதங்களை யுங் குற்றமற வாராய்த லரிது; அவைகளை யாராய்ந்தாலு மேலாகிய போக மோக்ஷங்களை யடைதலு மரிது. (உ0எ)

[இதுவுமது]

பெற்று மந்தண ராய பிறப்பினைக்
கற்று நான்மறை வேள்விக் கருமமு
முற்றி வானவ ராக முயல்கிலார்
குற்ற மேபெரி தாகிய குற்றமே.

(இ - ள்.) மிகவுங் கிடைத்தற்கரிய பிராமண வருணத்தை யெடுத்தும், நாலுவேதங்களையு மோதியும், யாகாதி கருமங்களைப் பண்ணித் தேவர்களா யிருக்கும்படி விசாரித்தார்களில்லை; அந்தப் பிராமண ரிவ்வாறு செய்யாத குற்றமே மிகுந்த குற்றமாம். (உ0அ)

[இதுவுமது]

இந்தப் பாரத மெய்தற் கெளியதே
வந்து பாரதந் தன்னினு மானிட
ரந்த வான மடையுங் கருமமுஞ்
சிந்தி யார்சிவன் சேவடி சேரவும்.

(இ - ள்.) இப்பூவுலகத்தி லுண்டாகிய நவகண்டப் பிருதுவிக ளுக்கும் விசேடமான பாரதகண்டத்திற் றோன்றிய குமரித்தீவிற் றோன்றுதல் கிடைத்தற் கெளியதே, எளியதல்ல; அச் சிறப்பினை யுடைய பாரதகண்டத்திற் றோன்றியு மானிடர்கள் சற்கருமத்தை யனுட்டித்து மேலாகிய சிவலோகத்தை யடையவுஞ் சிவனுடைய சீபாதத்திற் பொருந்தவு மேனோ விசாரித்தார்களில்லை?

(வி - ரை.) ஏனைய கண்ட மெட்டு மிலேச்சதேச மாகையா லிப் பாரதகண்டமே விசேடமாகச் சிறப்பித்தார். ஏகாரம்-எதிர்மறை.

[இதுவுமது]

வேத நீதி விளங்குமிவ் வெல்லையு
ளோதி யுண்மை யுணர்ந்துயி ரொன்றிய
வாதி பாத மடையு மருந்தவஞ்
சாதியார் றமக் கேவஞ்சர் தாமரோ.

(இ - ள்.) இவ்வாறு வேதாகம புராண நீதி விளங்கிய இக் குமரிகண்டத்திற் றோன்றிய மானிடர்க ளவ்வேதாகமங்களை யோதி யதனாற் பதிமுதலிய வுண்மை ஞானத்தை யுணர்ந்து உயிர்க்குயிராகிய சிவனது ஸ்ரீபாதங்களை யடைதலாகிய அரிய தவத்தினைச் செய்யாராகையா லவர்கள் தம்முடைய ஆன்மாக்களுக்குத் தாமே வஞ்சகராவார்.

(வி - ரை.) அரோ - அசை. (உ௪0)

[இதுவுமது]

ஈரும் வாளுயிர்க் கென்றறி யாரெழு
வார மாகி வருந்தின மானிடர்
தார மாதியுந் தாமு நிலையென்றே
கோர மாய குழிவிழு வார்களே.

(இ - ள்.) மானிடராயினோர். ஞாயிறுமுதலா யேழுவாரமாய் வருந் தினத்தை யுயிரை யீரும் வாளென் றறிந்து சடுதியில் தன்மத்தைச் செய்யாமற் றமது சரீரத்தையுந் தமது மடவார் முதலிய பொருள்களையும் நிலையென்று கருதிப் பாவத்தையே செய்து குரூரத்தையுடைய நரகக்குழியில் விழுவார்கள்.

(வி-ரை.) "ஈரும் வாளுயிர்க் கென்றறி யாரெழு
வார மாகி வருந்தின மென்றது
நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்."
எனத் திருவள்ளுவனார் கூறியது மிப்பெற்றிநோக்கி யென்க. (உ௪௧)

[இதுவுமது]

அழியு மாக்கைகொ டேயழி யாப்பதங்
கெழுவு வார்பெற்ற தேநல்ல கேள்வியு
மழியு மாக்கை தனையழி யாதென
விழுவ ரேநர கக்குழி வெய்யரே.

(இ - ள்.) நிலையுதலில்லாத தேகத்தைக் கொண்டு நிலையுத லுள்ள மோக்ஷத்தைப் பொருந்துவோர் பெற்ற கேள்வியே நல்ல

கேள்வி; அழிகின்ற தேக மழியாது நெடுநா ளிருக்குமென்று விரும்பிய பொல்லாதவர்களே, நரகக் குழியில் விழுவார்கள். (உகஉ)

[இதுவுமது]

ஆக்கை தானிலை யாதென் றறிந்துதம்
வாக்கி னாலரன் மந்திர மோதியே
நோக்கி னாலவன் மேனியை நோக்கியே
பார்க்குள் வாழ்பவர் நன்பயன் பற்றினார்.

(இ - ள்.) இம் மானிட தேகம் நெடுநாள் நில்லாதென் றறிந்து தமது வாக்கினாலே சிவனது திருநாமமாகிய பஞ்சாக்கரத்தை யுச்சரித்துக், கண்ணா லவனது திருவுருக்களையும் புலப்படச் சேவித்திப்படி நாடோறுஞ் சபத்தியானங்களைச் செய்து பூமியில் வசித்திருக்கும் அவர்களே மோக்ஷத்தை யடைந்தவர்கள். (உகங)

[இதுவுமது]

இந்த நாட்டுள் வினைநன் கியற்றின
ரந்த நாட்டிடை யேபய னார்வர்க
ளந்த நாட்டி னிடையிருப் பாரவ
ரிந்த நாட்டட் கரும மியற்றியே.

(இ - ள்) இப் பூமியிற் கன்மத்தை வழுவாமற் செய்தவர் சுவர்க்கலோகத்திற்சென் றாண்டுள்ள போகங்களைப் புசிப்பார்கள். ஆதலா லவர்க ளிப்பூமியில் திரும்ப வந்து சற்கருமமாகிய சிவபூசை முதலியவற்றைச் செய்து சுத்தாத்துவபுவன மீறாயுள்ள புவனங்களெல்லாவற்றினுஞ் சென்று திவ்யபோகங்களை யனுபவித்துக்கொண்டிருப்பார்கள்.

(வி - ரை.) பிராகிருதி சம்பந்தத்தை 'இந்த நாடு' என்றார். சுத்தாத்துவாவை 'அந்த நாடு' என்றார். கன்மமென்பதனை யிருபாலுங் கூட்டுக. (உகச)

[இதுவுமது]

பதிகர் தாமன்ன பானத்தொ டேசெலிற்
புதிய வெல்லையை யின்பொடு புல்குவர்
விதியி னின்றவர் விண்ணுறல செய்தியே
புதிய போக விதமும் புணர்வரே.

(இ - ள்.) வழிச் செல்வோர்கள் தம் கையிலே யன்ன பானாதியைக் கொண்டுபோனா லதைப் புசித்துத் தாம் புதிதாய்ச் செல்லு

மெல்லையைச் சுகமா யடைவார்கள்; அதுபோல, வேதாகமங்களிற் கூறப்பட்ட நெறியில் நின்று சற்கருமத்தை யனுட்டித்தவர்கள் சுவர்க்கமுதலியவை யடைந்து தமக்குப் புதிதாகிய போக பேதங்களைப் புசித்திருப்பார்கள். (உகரு)

[இதுவுமது]

வேத நீதியை விட்டவர் தாமிக
வேத மாய நரகினை யெய்துவ
ராதலா லென்றுஞ் செய்க வறத்தினைக்
காத லோடுநல் வானிற் களிக்கவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) ஏதம்-துக்கம். காதல்-விருப்பம். (உகசு)

[சிவபத்தராஞோர் பாவஞ் செய்தாலு நரகத்தில் வீழா ரென்பதனை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஆதி நாத னமல னரன்றிருப்
பாத முன்னினர் பாவம் பயிற்றினும்
வேத ஞர கக்குழி வீழ்வரோ
நாத ரேயம னிக்கவர் நாடினே.

(இ - ள்.) ஒரு காலத்தில் தோன்றப்பட்டவைகளுக்கெல்லாம் நாதனுமாய் நின்மலனுமா யிருக்கிற சிவபிரானது ஸ்ரீபாதத்தைத் தியானம் பண்ணினவர்கள் பாவத்தைச் செய்தார்களானாலுந் துக்கந் தரும் நரகக்குழியில் வீழ்வரோ வீழார்கள்; அவர்களுக்குத் தொழில் யாதென்று விசாரிக்குமிடத்தி லெமலோகத்துக் கதிகாரிகளா யிருப்பார்கள். (உகஎ)

முற்றக் கால முருக்குங் கொடுந்தொழி
லற்றுச் சங்கர னூரும் புரத்தினைப்
பற்றிப் பண்ணிய புண்ணியப் பாங்குறத்
துற்று வார்சிவ லோக சுகோதயம்.

(இ - ள்.) எமபுரத்துக்கு அரசனாயிருக்குங் காலந் தொலைந்தவாறே யக்கொடுந் தொழில் செய்யுஞ் சரீரத்தை விட்டுச் சிவலோகத்தை யெய்தி முன் செய்த புண்ணியவியல்பினை யடைந்து அச் சிவலோகத்தி லுண்டாகிய போகத்தை யனுபவித்திருப்பார்கள். ()

[சிவஞானிகள் பாவத்தைச் செய்தாலும் பாவபலத்தை யடையா ரென்பதை யுவமை முகத்தா லுணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

என்றுமிறை யைத்தம கருத்துற விருத்தா
நின்றவர்க ளீசனடி யோடொருமை நின்றார்
துன்றுதுரி சோடுமவர் தோய்விலர்க ளிர்தா
மென்றியிடு மோதளின பத்திரம துற்றே.

(இ - ள்.) எந்தக் காலத்திலும் சிவபிரானை அயிக்கமுறத் தியானம்பண்ணியிருக்கு மவர்களே, சிவபிரானது திருவடித்தாமரையை நீக்கமின்றி அடைந்தவர்கள்; அந்த ஞாதாக்க ணெருங்கிய பாவத்தைச் செய்தார்களே யாயினும் பாவபலத்தை அடையார்கள். அது வென்னெனில், தாமரை தண்ணீரோடு கூடியிருக்கவும் அதனைக் கலவாதவாறுபோல. (உகக)

[முடிந்ததை உணர்த்துகின்றார்.]

என்றுதிவி வாழ்வுதிர யத்துய ரிசைத்தான்
குன்றவர் மடக்கொடி தனக்கருள் கொடுத்தான்
வென்றுபுல னைந்தினையும் வெய்யவினை நையநின்றமுனி யன்றுணர நிற்குண னினைந்தே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) திவி-சுவர்க்கம். (உஉ0)

## சிவத்துதி

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

வடவரை வில்லெய வல்லவனே!
மண்புனன் மற்றறய வல்லவனே!
படவர வங்கையிற் பற்றினனே!
பத்தரைத் தீர்த்திடும் பற்றினனே!
அடியிணை காண்டற் கரியவனே!
அகம்பர மென்னுக் கரியவனே
விடையத னேல்வரு வீரியனே!
விதிமுக மொன்றற வீரியனே!

(இ - ள்.) மகாமேருவை வில்லாக வளைத்தெய்யும் வல்லபத்தை யுடையவனே! மண், நீர் முதலான தத்துவங்களல்லாமல் அதற்கு வேறாயிருக்கின்றவனே! படத்தையுடைய பாம்பைக் கையில் பிடித்த

வனே! பத்தர்கள் பாவத்தைத் தீர்க்கும் அன்பினை யுடையவனே! வராகவடிவாய் மாயவன் தேடவுங் காணுதற்கு அரிதாகிய பாதார விந்தங்களை உடையவனே! அகம் பிரமமென்பார் நாக்கை யரிகிற வனே! இடபவாகனத்தின்மேல் எழுந்தருளும் வீரப்பாட்டை யுடைய வனே! பிரமனுடைய ஐந்தாவதாகிய சிரத்தை நகத்தா லறுத்தவனே!

[இதுவுமது]

வேறு

ஈடு பெற்றினை யாவின வேற்றனே!
இகலும் புன்சம யத்தவ வேற்றனே!
ஆடி டுந்தில்லை யம்பல வாணனே!
அதுல னேயர வாட்டிய வாணனே!
தேட ரும்பொரு ளாகிய தேசனே!
சிறந்த காஞ்சி வளநகர்த் தேசனே!
வேட னாய்விச யற்கருள் வில்லியே!
விமல நேயவ னேயுற வில்லியே!

(இ - ள்.) வலியமைந்து இளமை வயதினையு முடைத்தாய்த் தளராமலிருக்கிற இடபவாகனத்தை யுடையவனே! மாறுபாட்டினை யுடைய அறிவில்லாத புன்சமயிகள் தவத்துக்கு வேறாய் நின்றோனே! தில்லையம்பலத்திற் றிருநடனஞ்செய்து வாழ்கின்றவனே! தனக் கொப்பொருவரு மில்லாதவனே! அரவினையாட்டிய ஆண்மையை யுடையவனே! ஆன்மாக்கள் தேடுதற்கரிய பொருளாகிய பிரகாசத் தை யுடையவனே! சிறப்பினையும் வளப்பத்தினையுமுடைய காஞ்சி மாநகரத்தைப் பதியாகவுடையவனே! அருச்சுனற்கு வேடனாக வந்து கிருபை செய்த வில்லினை யுடையவனே! மனவழுக் கில்லாதவர்க ளிடத்தில் நேசத்தையுடையவனே! அன்பில்லாதவரிடத்து உற வில்லாதவனே! (உஉஉ)

## குமரன் துதி

எண்சீர்க்கழி நெடிலாசிரியச் சந்த விருத்தம்

ஆறாறு கூறு முதித்த வப்பற
மாளான சேட ரவர்க்கி ருப்பிடம்
வீறான வேதக சிற்க னப்புரி
மீளாத வாழ்வெ னக்க ளிப்பவ
னீறேறு மேனியி னித்த னுத்தம
னோரார்க ளூரு மெரித்த நிட்டுர

ஞ்நீறு வேணி யளித்த வற்புத
ஞ்ஞொரு மாறு முகத்தெ னத்தனே.

(இ - ள்.) திருநீற்றை யணியு மேனியை யுடையானுமாய், எப்போது முள்ளவனுமாய், உத்தமனுமாய்ச், சத்துருக்களுடைய முப்புரத்தையெரித்த கிட்டேரத்தையு முடையானுமாய்க், கங்கையைத் திருச்சடையிற் றரித்தவனுமா யிருக்கின்ற சிவபிரான் அளித்த அதிசயத்தினையும் வீரத்தினையுமுடைய ஆறுமுகமுடைய பிள்ளையாரே மண்முதலாகிய முப்பத்தாறு தத்துவங்கட் கப்புறமான மோக்ஷத்தைத் தனக் கடிமையான சிறப்பினையுடைய அடியார்க் கிருப்பிடமாகக் கொடுப்பவரும், வீடுபே றறிவிப்பிக்கின்ற ஞான சொரூபமாகிய சிவதத்துவத்தி லுண்டாகிய காதகலா புவனத்தில்போய்த் திரும்பி வாராமலிருக்கின்ற வாழ்வை யெனக்குத் தருவோருமாம்.()

## அகத்தியர் துதி

மாறும லாளென வற்றி யற்றிடு
மாயாவி காரவ வப்ப வக்கட
லேறுது யானென வுற்ற சுற்றமு
மீசேச ஞானமு மூற்றி யுற்றிடெ
வீறுன வேதக விக்க னுத்தமன்
வேதாக மாதிய னைத்த னைத்தினு
மாறுறு மாறு மதித்த கத்தினு
ளானுத ஞான வகத்தி யற்கெனு.

(இ - ள்.) வீறு யறிவிக்கப்பட்ட நித்தியனுமா யுத்தமனுமாகிய சிவபிரா னருளிச்செய்த வேதாகம முதலிய நூல்க ளொத்தனை யுண் டத்தனையும் வேதாங்க மாதினையு முப்பத்தாறு தத்துவத்தினையு முள்ளத்தில் நிச்சயித்து நீங்காத ஞானத்தினையுடைய அகத்தியமுனிவனுக்கு இடையறுமலடிமையென்று என்னுலானவண்ணம் சொன்னமாத்திரத்தி லெனக்கு மாயையினின்று நானுவிகாரமாகத் தோற்றப்பட்ட வவலமாகிய சனனசாகரமும் வற்றியற்றிடும்; யானென தென்னுஞ் செருக்காகிய தோடமும் பொருந்தாது; கடவுளர்க்கெல்லாங் கடவுளாகிய சிவபிரானது ஞானமு மிகுதியாய்ப் பொருந்தும்.

ஏழாவது
சுவர்க்கநரகவியலுரை முற்றும்.

---

எட்டாவது

# சனனமரணவியல்.

[மேல் இவ்வோத் தென்னுதலிற்றோவெனின், ஒத்து நுதலியதூஉ மோத்தினது பெய ருரைக்கவே விளங்கும். ஆயின், இவ்வோத் தென்ன பெயர்த்தோ வெனின், சனன மரண துக்கங்களைச் சொல்வதனாற் சனனமரண வியலென்னும் பெயர்த்து. முற்கூறிய வியலிற் சுவர்க்க நரகங்களின் முறையைக் கூறிச் சுவர்க்க நரக சேடத்துக்குச் சரீரமானது எடுக்கவேண்டுகையா லதன்பின்னிதனை வைத் தார். இதனு ளித்தலைச் செய்யு ளென்னுத லிற்றோ வெனிற், புண்ணியத்தாலும் பாவத்தாலும் புண்ணிய பாவத்தா லுஞ் சரீரமெடுப்பதனைத் தொ குத் துணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

பாதளக் குழியி னாழும் பாவிகள் படிவந் தானு
மீதலத் தடையு மேன்மை விண்ணவ ருடலந் தானும்
பூதலம் பொருந்து மற்றை யுயிர்ப்பொறை தானும் பொற்
மாதவ வுதிக்கு மாறும் வகையுற வறைகு வாமே. [றை

(இ - ள்.) மலயமலையி லிருக்கு மிக்க தவத்தையுடைய அகத்தியமாமுனியே! சுவர்க்கமடையுமவர்கள்: மேன்மையான தேவசரீர மெடுக்கு முறைமையினையும், இருவினைக் கீடாகப் பூமியின் மற்றை மானிடர் முதலிய தேகமெடுக்கு முறையினையும், யாம் வகுத்துச் சொல்வாம்; அதனை நீ கேள்! (க)

அருந்துயர்க் குழியி னாழ்வா ராகமே பாவத் தாகும்
பொருந்திய பூதத் தாலே யிமைத்திடும் போது தன்னுட்
புரிந்துவின் புகுவா ராகம் புண்ணியத் தாலே யாகும்
பொருந்திய பூத சாரத் தொருகணப் பொழுது தன்னில்.

(இ - ள்.) நரகத்தி லழுந்துவோருடைய தேகம், பாவபலத்தில் பஞ்சபூதத்தினின்று மிமைப்பொழுதி லுண்டாகும்; சுவர்க்க மடைவோருடைய தேகம் புண்ணியபலத்தினால் பூதசாரத்தினின் றுங் கணப்பொழுதி லுண்டாகும். (உ)

[இருவினைக் கீடாக எடுக்கு மானிட தேகத்தையும் நால்வகைத் தோற்றத்தையு முணர்த்துகின்றார்.]

புண்ணிய பாவத் தாலே பூதத்தின் பரிணா மத்தால்
மண்ணிடை மனித ராக மற்றைய வடிவ மெல்லாம்
நண்ணிடுஞ் சராயு சத்தி னரர்தனு விலங்கு மற்றைத்
திண்ணிய கமடம் பாம்பு சிறைப்புளு மண்டஞ் சேரும்.

(இ - ள்.) இருவினையினுல் பூமியின் மானிடதேகமும், விலங்கின் தேகமும், சராயுசமாகிய பையினின்று முண்டாகும்.

(வி - ரை.) 'சிறைப்புள்ளும்' என்கிற வும்மையால் தவளை, முதலை, மீன், அரணை, உடும்பு, ஓந்தி, இப்பி முதலியவும் பறவைகளுங் கொள்க. (கூ)

[இதுவுமது]

கிருமிகள் கீட மற்றுங் கசிவினிற் கெழுமித் தோன்று
மரமெழு வாய வெல்லா மண்டணில் வாரி சேர
விரவிட வனிலம் வெய்யில் விதத்தினும் விளங்கித் தோன்று
மரியன வவற்று ளெல்லாம் யவைமுதற் செந்நெ லந்தம்.

(இ - ள்.) புழு, எறும்பு முதலானவைகள் வேர்வையினின்றும் நெருங்கி யுற்பவிக்கும். மரம், கொடி, கிழங்கு முதலிய வெல்லா மண்ணில் தண்ணீர் காற்று வெயி லிவைகள் பொருந்துவதனுல் விதைகண் முதலியவற்றினின்று முண்டாகும். அவ்வாறு கூறிய வற்று ளெல்லா மரியன யவைமுதல் செந்நெ லீருகிய நெல்லின் பேதமாம்.

(வி - ரை.) 'விதத்தினும்' என்கிற வும்மையாற் கொடியினுங் கிழங்கினும் வேரினுங் கொப்பினுங் கொழுந்தினு மிலை முதலியவற்றினு மென்பதூஉங் கொள்க. (ச)

[இதுவுமது]

எண்ணிரண் டேக மென்ற செந்நெலே யிறுதி யெல்லாம்
நண்ணிடு பலபா கத்தி னசித்திடு நாடுங் காலை
மண்ணிடை மனிதர்க் கெல்லா மவுடத மாக வாய்க்குந்
தண்ணிய வுணவே மற்றைத் தானிய விதங்க ளெல்லாம்.

(இ - ள்.) யவைமுதல் செந்நெலீறுகப் பதினேழுவகை நெல்லினையும், அறுத்துமடக்கி யரிசியாக்கி நானுவிதமான பாகத்தைப் பண்ண அவைகள் நாசத்தை யடையும். அதனை விசாரிக்குமிடத்துப்

பூமியிலுள்ள ஆன்மாக்களுக்கெல்லாம் பசியென்னும் வியாதிக்கு அவுடதமாய்ப் பொருந்தும். மற்றை வரகு, கேழ்வரகு, சாமை, கம்பு, தினை, சோளமுதலாகிய தானியங்க ளெல்லாஞ் சிறப்பினை யுடைத் தல்லாமல் அதற்குத் தாழ்ந்த உணவாகி இருக்கும். (ஞ)

[இதுவுமது]

தானிய விதத்தா னருந் தண்டுலம் பிண்டி பேத
மூனமி லோத னாதி யுறுமவற் றழனீ ரொன்ற
மானிட ரருந்தும் போது வயினனு சயத்தின் வைகிப்
பானமும் பருகப் பட்டுப் பக்குவா சயமும் பற்றும்.

(இ - ள்.) இவ்வாறு கூறப்பட்ட நெல் முதலாகிய தானிய விதங்களி லுண்டாகிய அரிசியும், அதினின்று முண்டாகிய மாவின் பேதமும், நீருடன் கூட்டி யக்கினியிற் பாகம்பண்ணும் அன்னம் - அபூபமுதலாகிய உணவின் பேதங்களு முண்டாகும். அவைகளை மானிடரானோர் புசித்துச் சலத்தையும் பானம் பண்ணினால் அவை கள் பஞ்சாசயத்துட் டலைமையாகிய வயினனுசயத்தை அடைந்து பின்பு பக்குவாசயத்தி லிறங்கும்.

(வி - ரை.) அபூபம் - அப்பம். (சு)

[இதுவுமது]

பக்குவா சயத்தி னன்ன பானத்தைப் பிராண வாயுத்
தொக்கிரு கூறு செய்யச் சொன்றிமேல் தோயங் கீழா
மட்கியு மறலின் கீழே யாகலும் வாயு வங்கிப்
புக்கிரு பாக மாக்கப் பொருந்திடுஞ் சாரங் கிட்டம்.

(இ - ள்.) அவ்வாறு நாபிக்குமே லிருக்கிற பக்குவாசயத்தி னிருந்த அன்னபானத்தைப் பிராணவாயு பொருந்தி யிரண்டு கூறு க்கி யன்னம் மேலுந் தண்ணீர் கீழுமாகப் பண்ணும். தண்ணீருங் கீழே நாபியினின்று ஒரு நெற்பிரமாணம் அக்கினிபொருந்த அதனை வாயு குழல்கொண் டூதுகிறதுபோ லக்கினியைச் சொலிப்பித்த வனவி லெங்கு மொக்கவெந்து பாகமாயந்த வன்னபானஞ் சாரமென வுங், கிட்டமெனவு மிரண்டாம்; எண்ணெயும் பிண்ணாக்கும்போ லப் பிறியும்.

(வி - ரை.) ஆனைமுத லெறும்பீறுயுள்ள பிராணிகளுக்கு அக் கினி சொலிக்குமா றெவ்வாறெனில்: யானை, குதிரை, ஒட்டக முதலானவைகளுக்கு ஓரங்குட்டமாத்திரமும்; கீழ்நோக்கி நீண்ட

வாலினையுடைய பசுக்களுக்கும், மேனோக்கிக் குறகின வாலினை யுடைய மிருகங்களுக்கு மொருமென்மாத்திரமும்; காக்கை, கோட்டான், கொக்கு முதலியவற்றுக்கு ஓமொன்மாத்திரமும்; கிருமிகீடமுதலிய சென்றுக்களுக்கு ஒரு மெல்லரிசி ஊனிமாத்திரமும் அக்கினி உதரத்தினின்றுஞ் சொலிக்குமென்றறிக. இதனை வாகடத்தில் விரிவாகக் காண்க. (எ)

[மேற் றொகுத்த முறையானே கிட்டம் பன்னிருபேத மாமா றுணர்த்துகின்றார்.]

நோக்கினுட் செவியின் மூக்கி னெய்பன வழுக்கே யாயும்
வாக்குறு நாக்கிற் பல்லின் மிடறதி னுள் வழுக்கே யாயு
நீக்கிடு மலநீ ராய நிகழுகி ரழுக்கே யாயு
மாக்கையின் வேர்வ தாயுங் குதகுயத் தவலமாயும்.

(இ - ள்.) கிட்டங் கண்ணினின்றும் பீளையாயுஞ், செவியினின்றுங் குறும்பியாயும், மூக்கினின்று மழுக்காயும், வசனித்தற்குரித்தாகிய நாவினும் பல்லினும் அழுக்காயும், மிடற்றினின்று கோழையாயும், புறம்பே விடப்படும் மலசலங்களாயும், நகங்களிற் பொருந்திநின்ற அழுக்காயுஞ், சரீரத்தில் வேர்வையாயுங், குத குய்யங்களில் வினையும் பொல்லாத அழுக்காயும் புறப்படும். (அ)

[அன்னசாரம் பன்னிரு பேதமாகப் பிரியு முறையை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

பன்னிரு பேத மென்னப் பழுதுட னுறுப்பிற் பாறு
மன்னிய வன்ன சார மிருதய மலரின் வாய்த்துத்
துன்னிய நாடி தோறுஞ் சொரிந்திடுஞ் சமானன் றொக்கும்
பின்னையு முடலாற் சாரம் பெற்றிடும் பாக பேதம்.

(இ - ள்.) கிட்டம் முற்கூறிய முறையே பன்னிரு பேதப்பட்டுப் பொல்லாத வுடலிலுள்ள அவயவங்களினின்றும் புறப்பட்டுப் போகும். சரீரத்தை யடைந்த அன்னசாரம் இதயகமலத்திற் சென்று சமான வாயுவினோடு கூடி யுடலி னிறைந்த எழுபத்தீராயிர நாடித் துவாரங்கடோறும் பரம்பும். பின்னையும் அச்சாரம் பிராணவாயுவினாலே யுடலின் உஷ்ணத்தைப் பொருந்திப் பாகபேதத்தைப் பெறும்.

பெற்றிடும் பாகந் தன்னிற் பிறந்திடுந் துவக்குத் தன்னி
லுற்றெழு முதிரந் தன்னி னிணத்துட னூனு திக்கு
மற்றைய நரம்பு வாய்க்கு மயிர்தசை தன்னி னூடி
யுற்றெழு நரம்பி னென்பு நாடியி னுதிக்கு மன்றே.

(இ - ள்.) முற்கூறிய பாகபேதத்தினின்றுந் தோல் உண்டா கும். அத்தோலினின்று மிரத்தமுண்டாகும். அவ் விரத்தத்தினின்று நிணமு மிறைச்சியு முண்டாகும். அவ் விறைச்சியினின்று நரம்பு மயிரு முண்டாகும். அந் நரம்பினின்று மதற்கினமாகிய நாடிகளுண் டாகும். நாடிகளினின்று மெலும்புண்டாகும. (௧௦)

தோற்றிடு மூளை யென்பிற் சுழனுதி நகமுந் தோன்றுந்
தோற்றிடு மூளை தன்னிற் சுக்கிலங் கருத்தான் ஹேன்றும்
பாற்றுசுக் கிலத்திற் பத்தாப் பாரிதன் பகத்திற் பாங்கா
லேற்றமா மிரத சார மிம்முறை யீரா றுமே.

(இ - ள்.) அவ்வெலும்பினின்றுந் தசையு நகமு முண்டாகும். அதிற் சுக்கில முண்டாகும். கணவன் மனைவியைக் கூடி யவளு டைய யோனியில் விடும் அந்தச் சுக சுக்கிலத்தினின்றுங் கர்ப்ப முண்டாகும். இவ்வாறு சரீர முண்டாவதற்குக் காரணமாகிய அன்ன சார மிப்படியே பன்னிரு பேதமாம். (௧௧)

[மேற் சுக்கில சுரோணிதத்தால் ஆண் பெண்
அலியாமா றுணர்த்துகின்றார்.]

சுக்கில மதிக மாயி னுமெனு முருவந் தோன்றுஞ்
சுக்கிலங் குறையிற் பெண்ணுஞ் சோணிதந் துலையே யாகிற்
சுக்கிலத் தலிதான் ஹேன்றுந் தோய்ந்தவவ் விருவர் பாலு
மெக்குண மிலங்கு மக்கள் பாலுமக் குணமே யேயும்.

(இ - ள்.) கணவனிடத் துண்டாகிய சுக்கில மதிகமானல் ஆணய்ப் பிறக்கும். அந்தச் சுக்கிலங் குறைந்து மனைவியினிடத் துண்டாகிய சுரோணித மதிகமானற் பெண்ணய்ப் பிறக்கும். சுக்கில சுரோணித மிரண்டுஞ் சமமாகக் கூடினல் அலியாய்ப் பிறக்கும். அந்தச் சுக்கில சுரோணிதங்களை யக்காலத்துப் பிராணவாயு வந்து மோதி இரண்டாய்ப் பிரிக்கி லிரட்டையாய்ப் பிறக்கும். அப்படி யிருவருங் கூடிய காலத்துச் சாத்துவித முதலிய முக்குணத்து ளெந் தக் குணத்தை யடைந்திருந்தார்களோ அந்தக் குணமே பிள்ளைக ளிடத்து முண்டாகும். (௧௨.)

[ஆன்மாப் புரியட்டகரூபியாய் வந்து பிறக்கு
முறை யுணர்த்துகின்றார்.]

அட்டக வுடலத் தோடே யுயிர்பிதா வருந்தன் னுதி
தொட்டவ னுதரந் தொக்குச் சுக்கிலத் துடனே தோன்றிப்

பட்டனே பகத்தின் மற்றைக் கருப்பையிற் பதிந்து முற்றிச்
சட்டக மென்னத் தோன்றித் தரையிற் றங்கிச் சாயும்.

(இ - ள்.) ஆன்மா இவ்வாறு கூறப்பட்ட புரியட்டக தேகத்தை யெடுத்துப் பிதா புசிக்கு மன்னபானத்துடன் சென்று அவனுதரத்தைப் பொருந்தியிருந்து அவன் விட்ட சுக்கிலத்துடனே மாதாவின் யோனியை யடைந் ததற்கு வேறாகிய கர்ப்பாசயப் பையிற் றரித்து அவயவங்களெல்லாமுண்டா யொருவடிவாகப் பூமியிற் பிறந்து வளர்ந்து இறக்கும்.

(வி-ரை.) 'புரியட்டகம்' ஆவது 'வாய்ந்தமனம் புத்தி யாங்காரந் தன்மாத்திரையு மாய்ந்த புரியட்டகமென்றார்.' என்பதனாலு மறிக. (கக)

[ஆன்மா பூத சரீரத்தில் வருந் தன்மையையும், அதில் வேதனையுறுந் தன்மையையும், பதினொரு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

வேறு

காந்த னிருது மதிதன்னிற்
கலந்து களித்த சுக்கிலந்தான்
றோய்ந்த பொழுதிற் சோணிதத்திற்
றுயக்க முறவே யவள்பகத்திற்
பாய்ந்து பயின்ற காணத்தாற்
பண்டை வினையாற் பரிப்பெய்திச்
சேர்ந்து நிற்குஞ் சிவனொரு
தினத்திற் குன்றித் திரளெனவே.

(இ - ள்.) புருடன் தன் மனைவியை நாலாநாண்முதலிய நாட்களில் தான் பயின்ற கரணத்தினால் சற்புத்திரன் நிமித்தமாகக் கூட அவ்வா றுண்டான சுக்கிலம் அவள் சுரோணிதத்திற் றோய்ந்தபோது சீவன் அமைந்து அவளுடைய யோனியிற் சென்று கர்ப்பாசயப் பையிற் றரித்து முற்செய்த கன்மத்துக் கீடாக அவளாற் றாங்குதலைப் பெற்று ஒருகணத்தி லிரண்டு திரிசரேணுக் கொண்ட பருமையாய் ஒரு நாழிகை சென்றா லொருபேனளவு வடிவா யிப்படி யேறி யேறி யொருநாள் சென்றாற் குன்றிபோலத் திரண்டிருக்கும். (கஉ)

தினமோ ரைந்தி னவ்வுருவந்
தெண்ணீர்க் குமிழி யெனச்சிறக்குந்

தினமோ ரேழி னிள்ளூனும்
பருவஞ் செறிந்து திரண்டிலங்குந்
தினமீ ரேழிற் றிரளுறுயைச்
செந்நீர் பாந்து செறிந்திலங்கும்
தினமூ வேழு மொருநான்குஞ்
செறியப் பேசுஞ் சிறிதுதிக்கும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) பீசம்-அண்டம். (கஙி)

சிரமே களமே சிறுபுறமே
திரண்டு திணிந்த முதுகெலும்பே
வருமே தினமோ ராறைந்தின்
மற்றை யிரண்டா மாதத்திற்
கரமே பதமே கடிதடமே
கவிபா ரிசமே கனதாளே
வருமே மாத மொருமூன்றில்
வடிவிற் சந்தி வகுப்பெல்லாம்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) சிறுபுறம்-பிடரி. கடிதடம்-அரை. கலிபாரிசம்-விலாப்புறம். கனதாள்-உள்ளங்கால். சந்தி - ஒன்றோடொன் றொட்டுக் கலங்க ளிருபத்தெட்டு. (கரு)

உதிக்கும் விரல்கள் சதுர்மாதத்
தொளிசேர் முகநா சிகைகன்னம்
உதிக்குங் குய்ய முகிர்தந்த
வொழுங்கூன் மாத மோரைந்தின்
உதிக்கு மோசைப் புழைகன்னத்
தற்ற மாத மோராறுள்
உதிக்கு மாத மோரேழு
ளுபத்த மிலிங்க மொளிபெறவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) உகிர் - நகம். தந்தவொழுங்கூன் - எயிறு. ஓசைப்புழை - செவித்துவாரம். (களை)

குதமுந் தோன்றுங் கொப்பூழுங்
கூறுஞ் சந்தி பேதமெலா

முதய மான விருநான்கு
　　ளுதிக்குங் கேச முயர்சிரத்திற்
றிதமே யங்கப் பிரத்யங்கஞ்
　　செறிந்த மற்றை யுறுப்பெல்லாம்
விதமாம் பிராண வாயுமுத
　　லைந்தும் விரவி விளங்கிடுமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கேசம்-மயிர். அங்கப் பிரத்தியங்கம்-தலைமுதலிய அவயவங்கள். பிராணவாயுமுதலைந்து - பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன் ஆக ஐந்து என்க. (க௮)

அன்னை யருந்து மாகாரத்
　　தாறு சுவையு மடைவுறவே
துன்னு நாபி ரூத்திரத்தா
　　லுதரத் திடையே தொகுமதனன்
மன்னு மனாதி யவற்றானு
　　மாந்துந் துக்கஞ் சுகஞ்சீவன்
முன்னைச் செயலுங் கனவெனவே
　　முளைக்கும் பிரியு மோகமுமே.

(இ - ள்.) தாய் புசிக்கு மாகாரத்தில் அறுசுவை யடைகாக ஏரியினின்றும் வாய்க்கால் புறப்படுமாறுபோலக் கர்ப்பத்தி னூபி சூத்திரத் துவாரத்தாற் போய் வயிற்றிற் பொருந்தும். அதனால் மனம்-புத்தி-ஆங்காரம்-சித்தமாகிய காணங்க ளுண்டாகி யவற்றாற் சீவன் சுக துக்கங்களை யனுபவிக்கும். பின்பு, பூர்வ சனனங்களிற் செய்த புண்ணிய பாவங்களும் புத்தியிற் சொப்பனம்போலத் தோன்றும். அப்போது அதனிடத்துண்டாகிய அஞ்ஞானமு நீங்கும்.

(வி - ரை.) அறுசுவையாவன: தித்தித்தல், புளித்தல், கைத்தல், துவர்த்தல், கூர்த்தல், காழ்த்தல். இவ்வறுசுவையா லுண்டாவன: மதுரத்தாற் சுக்கிலமும், புளிப்பினால் மச்சையும், உப்பினால் எலும்பும், கைப்பினால் மேதையும், காழ்த்தலினாற் றசையும், துவர்ப்பினால் இரத்தமுமாம். இம்முறையே யுண்டாய்ப் பிள்ளை வளரும் என்க. ()

இறந்தே முனமே யினிப்பிறப்பே
　　பென்று மிந்த முறையினியாம்
பிறந்த பொழுதே பிறவாத
　　பெருமை யுடைய பிஞ்ஞகனை

யறிந்தே யவலப் பிறப்பிறப்பை
யறுத்து விடுவோ மவனருளாற்
செறிந்தே குரவன் றிருவடியைத்
திகழ்ந்த வேதா கமந்தெருண்டே.

(இ-ள்.) அக்காலத்தில் அக்கர்ப்ப முன்னே 'பூட்டையு நீரும் போல அனேகஞ் சனனமெடுத் திறந்தோம். இன்னமும் பிறந்து திரிவோம். அதனால் வேதனையே மிகவு முண்டாகும். ஆகையா லிக்கர்ப்பத்தினின்றும் பூமியிற் பிறந்தபொழுதே சிவபிரானது திருவருளினால் ஞானாசிரியன் திருவடி யடைந்து பிரகாசமுள்ள வேதாகமங்களை யையந் திரிவு விகற்பம றவுணர்ந்து, ஒரு காலத்தினுந் தோன்றுத லில்லாத பெருமையினையுடைய சிவபிரான் சொரூப சுபாவத்தை யறிந் தவலமாகிய பிறப்பை யொழித்து விடக்கடவோம்' என்று விசாரித்திருக்கும். (உ௦)

(வி-ரை.) பூட்டை - இறைகூடை.

என்றென் றெண்ணி யிருக்குமுயி
ரிடர்ப்பட் டழியு மெழில்வரைக்கீ
ழொன்று மொருவன் றனைப்போலக்
கருப்பா சயப்பை யுறுத்துதலான்
மன்ற வுதலி மறிந்தாழ்வான்
வருத்த மென்ன வருந்தியிடு
நின்ற கருப்பா சயவுதக
வெள்ளங் கொள்ள நிறையழிந்தே.

(இ-ள்.) இவ்வாறு எண்ணிக்கொண்டிருக்கும் உயிர் அக்கர்ப்பாசயப்பை உறுத்துதலினால் அழகிய மலையின்கீழ் நெருக்கப்பட்டு ஒருவன் துயரமடைவதுபோல மிகவுந் துக்கத்தை யடைந்து மனமழிந்து சோரும். அதுவல்லாமலுங் கர்ப்பாசயத்து நீராகிய வெள்ளங்கொண்டு நிற்கையினால் சமுத்திரத்தின் மரக்கலத்திருந்து அமிழ்ந்தினவன் றுயரமடைவதுபோலவுந் துக்கித்துப் புத்தி மயங்கியிருக்கும். (உக)

அங்கி யதனிற் றங்கியிடு மயோம யத்த கும்பத்திற்
றங்கு மொருவன் றபனம்போற் றபன மெய்துந் தாயுதரத்
தங்கி கூடவே யழலினைய சூசி யதனா லாகத்தைப்
பங்கித் திடவே படுமிடரி லிருநாற் குணிதம் பட்டழுங்கும்.

(இ-ள்.) இக் கர்ப்பம் தாயின் உதராக்கினி சுடுகையினால் தீயினின்று நீங்காம லிருக்கிற இருப்புக் குடத்தில் வைக்கப்பட்ட

வன் துயரமடைவதுபோலத் துக்கத்தை அடையும். இதுவல்லாமல் விருப்பூசியைக் காய்ச்சிச் சரீரத்தைத் தொளைத்திடப்படுபவன் துயரத்தி லெண்மடங்கு துயரமடைந் தழுந்தும். (உஉ)

கருப்பா சயமே கட்டதா
மதனி னதிகங் கடுங்கானு
முரிக்க மிகவு மோகவுற
முன்னை யுணர்வு மந்நிலையே
மரிக்க வாலைக் கரும்பெனவே
யோனி வழியின் வலிதொலைய
நெருக்கப் பட்டு நிலமிசையே
தோன்று முயிறு நிலையுடனே.

(இ - ள்.) இவ்வாறு துயரமடைவதனாற் கருப்பாசயப்பையித் கிடந் தனுபவித்தன் மிகுந்த துக்கம்; அதனினு மதிகமாக வைட்டிணுவமென்னுங் காற்றும் பிரவேசித் துடலை மடக்கித் தலைகிழாகத் தள்ளுமாகையா லக்கர்ப்பத்திலிருக்கு முயிர் தன் பலமுங் கெட்டு மிகவு மயக்கமடைந்து 'முன்னேயநேக சன்மமெடுத்தோம், நாமினிப் பிறந்தாற் சற்கன்மத்தைச் செய்து மோக்ஷத்தை யடையவேண்டும்' என்றெண்ணி யிருந்த அறிவு மிவ்வாறு மயக்கத்தை அடைந்த வவசரத்தில் கெட்டு ஆலையினெருக்கப்படுங் கரும்புபோல் தாய்யோனி யந்திரத்தில் நெருக்கப்பட்டுச் சரீரத்துடன் பூமியில் வரும். (உ௩)

(வி - ரை.) வைட்டிணுவம்-வியானனென்னும் வாயு.

சூக்க வுருவைத் தொட்டெழுந்த
தூல வுருவைத் துதைந்தந்த
வாக்கை தன்னை யானென்றே
யபிமா னித்தே யறம்பாவ
மாக்கும் பயனை முறையுறவே
யருந்திப் பின்னு மறம்பாவ
மாக்கி யானென் செருக்காலே
யடங்கிப் பிறக்கு மாருயிரே.

(இ - ள்.) உயிர் சூக்குமவுடல் காரணமா யுண்டான தூல தேகத்தை யடைந்து அத் தூலதேகத்தைத் தானென் றபிமானித்துப் புண்ணிய பாவத்தைச் செய்யும். அப் புண்ணிய பாவ பலங்களை மேலெடுக்குஞ் சனனத்தி லடைவி லனுபவித்துப் பின்னு மதனாலுண்டாகிய தேகத்தினால் யானெனதென்னுஞ் செருக்கினாற் புண்ணிய பாவத்தைச் செய்து இறந்து பிறந்துழன்று திரியும். (உ௪)

[இவ்வா றுண்டாகிய சரீரத்தி லுரோமமதந்த முதலியவற்றை வரையறுத் துணர்த்துகின்றார்.]

முற்று முடலின் முளைத்தமயிர்
மூன்று கோடி யரைக்கோடி
மற்று முளவே நாடிகளு
மதிக்கி லனைத்தே வாயதனுட்
பற்றி முளைத்த பல்லெழுநான்
கொருநான் கெனவே பார்த்திடுக
வுற்ற வுகிரு மொருபஃதே
காத்திற் பதத்து மொருபஃதே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) 'மதிக்கி லனைத்தே' என்பதனுன் மயிருக்குச் சொன்ன மூன்றரைக்கோடி யவ்வளவு நாடிக ளுளவாம். உகிர்-நகம். பஃது-பத்து. (உ௬)

[நாடிமுதலிய உறுப்புகளி னளவையை யாகமங்கடோறும் பேதித்துச் கூறுமென்பதற்குப் பரிகார முணர்த்துகின்றார்.]

நாடி யளவு மயிரளவு
நாடின் மற்றை யுறுப்பளவு
நாட வரிய பராபரன்று
னவின்ற மற்றை யளவுரையிற்
கூடும் பேத முழிதொறுஞ்
சிருட்டி பேதங் கூடுதலா
லூடும் பொருள்க ளொப்பிலித
னுரைக்கு முண்டோ வுணருங்கால்.

(இ - ள்.) நாடி மயிர் முதலிய வுறுப்புக்களி னளவையை விசாரிக்குமிடத்துத் தியானித்தற்கரிய பராபரனுகிய சிவபிரா னருளிச்செய்த இதற்கு வேருகிய வேதநூல்க ளிப்படியே யல்லாமற் பேதமாகக் கூறுவது சங்காரகாலந்தோறும் சிருட்டி பேதித்துப் பேதித்துண்டாகையினு லக்காலத்திற் ருேன்றிய நூல்களும் பேதித்துச் சொன்னதொழித்து ஒப்பில்லாத சிவபிரா னருளிச்செய்த ஆகமங்களுக்குட் டம்முள் விரோதமுண்டோ. அது இல்லை.

(வி - ரை.) வாகடத்திலே சுக்கில முழக்கென்றும், இரத்தங் குறுணி யென்றுஞ், சுத்தாத்த நாழி யென்றுங் கூறும். கர்ப்

போபகிஷத்திலே யெலும்பு நூற்றிருபது பலமென்றுஞ், சுக்கில மிரண்டு பலமென்றும், மேதசு பன்னிரண்டு பலமென்றும் கூறும். இவ்வா றாகமசாத்திரங்களில் பேதித்துக் கூறினமை யறிக. (உசு)

[இன்னுஞ் சரீரத்தின் றன்மையை மூன்று செய்யுளால் விரித்துணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

உற்றவுடற் பித்தமுழக் குரியுடனே காறுழி [ஞான்
மற்றையிடற் றுறுகபமும் வசைகினாத்தின் பலமைஞ்
குற்றகவி லப்பலமு மொருபஃதென் பறுபஃது
மற்றுமிரு நூறுமொரு நூறுமுள மதிக்குங்கால்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கபம்-சிலேட்டுமம். கவிலம்-செந்நீர். (உஎ)

ஒருபஃதே பலம்பித்த வுருவான மேதைக்குப்
பெரியபல மைஞ்ஞூறு பெற்றிடுமூ ஞெருநூறு
முருகுதிர மிறுகுதிர மொருமூன்று பலமாகு
மிருமூன்று மிருமுன்று மூளையினுக் கெய்திடும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மேதை-மாமிசம். இறுகுதிரம் - கட்டியிரத்தம். ()

வீரியமு மாழாக்கு விளம்பியிடு மிவையெல்லா
மோரளவு படவுணரி னுகிர்மயிரென் பொடுமொன்றப்
பாரவுடற் குறுபலமு மாயிரமே பழுதாய
நீரினுக்கு மலத்தினுக்கு நிறையில்லை நிகழ்த்துங்கால்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) வீரியம்-சுக்கிலம். (உகூ)

[இவ்வாறுண்டாகிய தேகத்தை யறிவுடையோர் நிலையெனக் கருதமாட்டார்க ளென்பதை யுணர்த்துகின்றார்.]

பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிக்கு போர்வைதனை
நில்லாத நீரெழுத்தை நிகரிலிதன் றிருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருளாக வொருகணமு நாடாரே.

(இ - ள்.) வெளி. (௩0)

[இத்தேகத்தினு லுண்டான குற்றத்தை யெத்தனை வகையினுற் சொல்லித் தூடித்தாலு மறிவில்லாதவ ரதனை நிச்சயம் பண்ணுரென்பதை யுணர்த்துகின்ருர்.]

தன்னுடலத் தருவருப்பைத் தானறிந்துஞ் சரீரத்து
ளன்னிருப்பா மெனத்துளங்கி யிளையாத விழுதைக்குப்
பன்முறையா லுடற்பழுதைப் பாடித்தும் பயனில்லைச்
சொன்னிரையிற் றுணிவாரோ காட்சியினிற் றுணியாரே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) துளங்கல்-கலங்கல். இழுதை-மூடன். பன்முறை-பலமுறை. பாடித்தல்-சொல்லுதல். (௩௧)

[மலபாண்டமாகிய தேகத்தை யாது காரணத்தினு லருவருக்காம லிருக்கின்ருரென்பதைத் தூஷித் துவமை முகத்தா லுணர்த்துகின்ருர்.]

பொற்கடத்துண் மலம்பொருந்திற் புல்லியரும் பொருணை
லக்கடத்தைப் பற்றிடா ரங்கையினு லவனிதனின் [சையா
மக்கடம துடலினைத்தா மலபாண்ட மெனவறிந்து
மெக்கணக்கா லிகழாதே யருவருப்பற் றிருக்கின்ருர்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கடம்-குடம். புல்லியர்-அற்பர். மக்கள்-மனுடர்.()

[தேகத்துக் கெத்தனை சுத்தி பண்ணினுலுஞ் சுத்தமாகா தென்பதை யுவமைமுகத்தா லுணர்த்துகின்ருர்.]

அருந்திடு னமிர்ததனை மலமாக்கு மலவாக்கை
பொருந்திடுமோ நலம்புனித தீர்த்தத்திற் பொருந்திடினும்
விரிந்தகரும் கம்பளத்தின் வெள்ளைநிறம் விளைந்திடுமோ
சொரிந்திடினு மான்பாலை யொருபொழுதுந் துறவாதே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) புனிதம்-சுத்தம். (௩௩)

[மேல் அகச்சுத்தியின் மகிமை யுணர்த்துகின்ருர்.]

அருவருப்பை யாகத்தைச் சுத்திபண வார்வல்லார்
கரிசறுத்து மனமதனிற் கருதரியன் கழலடியி
லொருமையுற வுயிர்ச்சுத்தி யுவமனிலாப் பதமுதவுங்
குரவனரு ளியபரம வாக்கியத்தைக் குறிக்கொண்டே.

(இ - ள்.) அருவருப்பை யுடைய சரீரத்தைச் சுத்தி பண்ண வல்லவர் யார்தான்? அவ்வாறு சுத்திசெய்ய வல்லவ ரில்லாமையா லத்தேக சுத்தி வாராமையின் ஆன்மசுத்தியும் பிறவாது. ஆகையா லாமன்சுத்தி யுண்டாவ தெங்ஙன மெனில், இணையில்லாத மோக்ஷத் தைத்தருவோனாகிய ஞானாசிரிய னுபதேசித்தமேலான வாக்கியத்தை நிச்சயமாகக் கொண்டு, உறவு பகை யாசையாகிய தன் குற்றத்தைப் போக்கி, யாவரு மனத்தா னினைத்தற்கரிய சிவபிரானது சீபாத தாமரையி லான்மாவை யயிக்கியம் பண்ணியிருத்தலே யான்ம சுத்தியாவது. (௩௪)

[ஞானவான்கள் புறம்பெல்லாரோ டொத்திருந்தாலு முள்ளம் வேறுபட்டிருப்ப ரென்பதை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

மனத்துமய லுற்றனனே மனைவிதனைத் தழுவியவன்
றனக்குமக டனைத்தழுவித் தங்கினனோ வங்குமயன்
முனைப்பயனை யருந்திடினுந் தெருண்டார்கண் மோகமிலா
வினைப்பயனை வியந்தருந்தி மற்றையரே வினைவிளைப்பார்.

(இ - ள்.) ஒருவன் தன் மனைவியைத் தழுவி மோகத்தை யடைந்தவன் அவன்றானே தன் மகளைத் தழுவி யவ்விடத்து மய லடையான். அதுபோலப் பூர்வ கன்மபலத்தைப் புசித்தாலு முற் செய்த கன்மமாயிருக்கும். யாம் புசிக்கிறோ மென்பதில் விருப்பற் றிருக்கு மறிவுடையோரிடத் தாகாமியமென்பதில்லை. முற்செய்த கன்ம பலத்தைப் புசிக்கும்போது யானென் றகங்காரங்கொண்டு விருப்பத்துடன் புசிப்பவரே யாகாமியத்தை யுண்டாக்குவார்கள். ()

குழவிபயக் தவர்குபத்தை
வருடுதலுங் குழைக்துமன
மொழுகுமுலைப் பாலூட்டி
யொருவாத பரிவினளே
கொழுநனவள் குயம்வருட
வவன்புயத்தைக் கூடுதற்கு
விழைவினளே யித்தகையார்
வினைகெடுப்பார் வினைவிளைப்பார்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) குயம்-முலை. கொழுநன்-கணவன். (௩௫)

[அகச்சுத்தியின் மகிமையை வேறு மோர்வகையா லுணர்த்துகின்றார்.]

அகச்சுத்தி யுடையார்க ளறுத்திடுவர் பிறப்பினையு
மகச்சுத்தி தனையின்றி யாகத்தைச் சுத்திசெய்வார்க்
குகத்தக்க தீயவினை யொன்றுமிலை யுணருங்காற்
புகத்தக்க புண்ணியத்தின் பலந்தானும் புல்லியதே.

(இ-ள்.) உள்ளும் புறம்புமொத்த சித்தசுத்தியை யுடைய ஞாதாக்கள் அநாதியாய்த் தொன்றுதொட்டு வரும் சனனத்தையு மொழிப்பார்கள். அவ்வாறு சித்தசுத்தி யில்லாம லுள்ளம் பிறிதொன்றா யிருந்து புறம்பே மலையத்தனை மண்ணையுங் கங்கையி லுள்ள சலத்தையுங் கொண்டு சரீரத்தைச் சுத்தி பண்ணினாலும் அவர்களுக்குப் போகத்தக்க தீவினை யொன்றேனு மில்லை. அதனை விசாரிக்குமிடத்து அவர்களுக்குக் கிடைக்கும் புண்ணியபலமு மற்பமாகும். (௧௭)

[இப்படி யகச்சுத்தி யுடையவர்களே பரம சுகத்தை யடைபவர். அது இல்லாதவர் மாதரைக் கூடுமிடத் துண்டாகிய சுகத்துக் குவமான மிரண்டு செய்யுளால் உணர்த்துகின்றார்.]

குட்டவுடற் கொடுக்குமிதங் கூடினழற் கொடியிடையா
ரிட்டமுமிம் முறையெனுக விளையவர்தம் பருவம்போற்
குட்டமழற் கூடிகனுள் கொழுநனுக்கொப் பெனக்கொள்க
தொட்டதுவக் கிந்திரியஞ் சொற்பொருளுந் துணிவாரே.

(இ-ள்.) குட்ட வியாதியை யுடையவன் அக்கினியைச் சேர்ந்த விடத்தி லங்நேரத்துக் கெப்படி சுகத்தைப் பொருந்துவானோ அதுபோலக் காமவியாதியை யுடையவர்கள் கொடிபோன்ற இடையினையுடைய மடவாரைக் கூடியபோதுள்ள சுகமு மிவ்வளவென் றறிக. அதைப் பிறித்தறிந்தால் குட்டவியாதி பாலியவயதை யுடையவர் காமப்பருவத்துக் கொக்கும். அக்கினியான மடவாரைச் சேர்தலுங் கணவனுக் கொப்பென்க. ஆதலா லக்கினியைச் சேர்ந்ததோலாகிய விந்தியத்தினா லுண்டாகிய சொல்லின்பொரு ளிவ்வள வென் றுணர்க. (௧அ)

மூத்திரத்தை மலமதனை மோசிக்கு மப்பொழுதும்
வாய்த்துளதே சிறிதின்ப மவ்வளவே வனிதையர்கள்

மூத்திரத்தை மோகிக்குஞ் சுழி யினிமை முடைப்பன்றி
நாத்தனக்கு நலமலமே மலநலமோ நாடுங்கால்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) முடைப்பன்றி-நாற்றத்தையுடைய பன்றி. (௩௯)

[சிற்றின்பத்தை யுவர்த்துப் பேரின்பத்தை யுறுதலே
சிறப்பென்று உணர்த்துகின்றார்.]

நாயினுக்கும் பேயினுக்கு நரியினுக்குங் கழுகினுக்கு
மீயினுக்கு மினிதுபிண மெனிலதுதா னினியதுவே
வாயினுக்கு மனத்தினுக்கு மதிப்பரிய மாதேவன்
றேயினுக்கே சிவமதனைத் திளைப்பாரே சிறந்தாரே.

(இ - ள்.) பிணம்: நாய், பேய், நரி, கழுகு, ஈ இவைகளுக்
கின்பத்தைக் கொடுக்கும். அதுபோல, மாத ரின்பமும் காமவிகார
முடைய மூடர்களுக்கே யினிமை. அது ஒழிந்து அறிவுடையோர்
கள் விசாரிக்குமிடத்து இது நிலைமையல்லவே. ஆகையா லதனைச்
சீயென் றுவர்த்து வாக்கு மனத்துக் கெட்டாத சிவபிரா னருளினால்
தமது சிற்சத்தி யனுபவமான பேரின்பத்தை யனுபவித்துக்கொண்
டிருக்கும் அவர்களே சிறப்புடையவர்கள். (௪௰)

[இவ்வாறு செய்யாதவர்க ளடையும் பலனை உணர்த்துகின்றார்.]

புரிந்தவர்க ளவினையைப் பொருவரிய னடிக்கன்பு
பிரிந்தவர்கள் வனிதையரைப் பெறற்கரிய பேறென்றே
யிருந்தவர்கள் நடந்தவர்க ளிழுக்காய குழிவழிக்கே
யெரிந்தவர்கள் கிடந்தெரிவாய் நிரயத்து மிளைப்புறவே.

(இ - ள்.) ஒப்பில்லாத சிவபிரானது சீபாதத்துக்கு அன்பு
செய்யாமற் பாவத்தைச் செய்தவர்கள் அப் பாவ மேலீட்டால் மாத
ருடைய போகங்களைக் கிடைத்தற் கரிய பேறென்றே மதித் தனுப
வித்திருந்தவர்களே; எரிவாய் நிரயத் துக்கத்தையடைய விருந்தவர்
களும் நடந்தவர்களும் பொல்லாத நரகக்குழியில் விழுந்தவர்களு
மவர்களே. (௪௧)

[மாதர் மயக்கத்தால் வருந் துன்பத்தை யைந்து செய்யுளா
லுணர்த்துகின்றார்.]

வேறு

வைத்தவ ரமுக்கினில் வாஞ்சை மையலாற்
றுய்ந்தவ ரளவிலாச் சோக வாரியே

வித்தகப் பொருளினை விரும்பு வார்மல
முத்தரின் புறுவர்க ளநாதி முத்தனால்.

(இ - ள்.) வெளி. (சஉ)

உருத்திரன் மணவினை யுவந்த நாளினிற்
றரித்தனன் சதுமுகன் சாப சோகமும்
வரத்தினால் வலியுடைத் தக்கன் மாமகள்
கருத்தினி லடங்கிடாக் கதத்தி னாலரோ.

(இ - ள்.) தக்கனுடைய புத்திரியாகிய தாக்ஷாயணியைப் பரமேசுவரன் கலியாணம் பண்ணுகிற காலத்திலே பிரமன் அவளைக் காமுற அதைத் தாக்ஷாயணி யறிந்து மிகவும் கோபித்துக்கொண்டு அவனைச் சபித்ததனாற் சாபம் அடைந்து அதனாலே துக்கமுற்றான்.

(வி - ரை.) அரோ-அசை. (சங)

இந்திரன் முனிமனை யிணங்கி யெய்திய
வந்தர மினைத்தென வளப்ப தல்லவே
சந்திரன் குருமனை தன்னிற் றங்கிய
வந்திடுந் துயரினை மதிக்க வல்லரோ.

(இ - ள்.) கௌதமவிருடி மனைவியாகிய அகலிகையை இந்திரன் ஆசைகொண்டு இராத்திரி யருணோதயத்துக்குமுன் அகாலத்தில் அவராச்சிரமத்திற் காகமாய் வந்து கூப்பிடப் பொழுது விடிந்ததென்று அவர் அனுட்டானத்துக்குப் புறப்பட்டுப் போக அதன்பின் இந்திர னவளுடனே கூடினான். அகாலமென் றிருடி மீண்டும் வந்து இந்திர னிவ்வாறு கபடமாய் வந்ததறிந்து அவனை யவ் விருடி கோபித்துக்கொண்டு, அகலிகை கல்லாகவும், 'ஒரு யோனிக்காக ஆசைப்பட்டதனால் உன்னுடல் முழுதும் ஆயிரம் யோனியாகக்கடவது' என்று சபிக்க, அவன் பட்ட துயரத்துக்கோ அளவில்லை. சந்திரனுந் தன் ஆசிரியரான வியாழபகவானுடைய மனைவியைத் தீண்டியதனால் அவனுக்குக் கயரோக வியாதியுண்டாய்த் துயரமடைந்ததை யாவர் விசாரித்துரைப்பார்கள்? (சச)

நளனது மனைவியை நச்சி வேடுவ
னெளியனென் றவடனைத் தினைக்க வெண்ணின
னளவில் துயருறச் சாம்ப லாயின
னுளமுனைந் தவள்பகர் சாப மொன்றியே.

(இ-ள்.) கலிதோடத்தால் நளனும் அவன் மனைவியாகிய தமயந்தியும் வனத்திற் சஞ்சரிக்கிற காலத்தில், மூங்கிலின்மேல் பாம்பிருக்

கையிற் காட்டுத்தி யடியிற்பற்றி யெறிகிற சமயத்தில் அந்தப் பாம்பைக் காக்கவேண்டுமென்று அவன் ஒருகோலைக் கொடுத் திறக்க, அவள் கழுத்தை வந்து சுற்றிக்கொள்ள, அது தன்னை வேதனை செய்யுமென்று பயந்து கூப்பிட, அந்தச் சமயத்தில் வேடன்வந் ததனை விடுவித்துத் 'தன்னந்தனியா யிருக்கின்றனை ளிவளேனுய்யள்' என்று அவளைக் கூடும்படி எண்ணியதறிந்து, அவனை 'எரிந்துபோக' என்று சபிக்க அவனும் துக்கத்தை யடைந்து அச் சாபத்தினுல் சாம்பலாயினன். (௬௩)

அரக்கனுஞ் சானகிக் காசை யுற்றனன்
சிரக்கன மிழந்தனன் றினைத்து மல்லவே
தரித்தவ ராசையைத் தைய லார்கள்பால்
வருத்தமே மருவினர் மண்ணும் விண்ணுமே.

(இ - ள்.) இராமபிரானுஞ் சீதாபிராட்டியுமாசப் பஞ்சவடி தீரத்திலிருக்கின்ற சமயத்தி லிராவணன் மாரீசனை யனுப்பிப் பொன்மானாக வரவிட, 'அம்மானைப் பிடித்துத் தா!' என்று சீதாபிராட்டி சொல்ல, இராமபிரான் முன்னேபோகப் பின்பு இளையவனுமதன்பிறகே தேடிப்போன சமயத்தில், இராவணன் சந்நியாசியாய் வேடமாறிவந்து அவளைக் கொண்டுபோ யிலங்கா நகரத்தில் சிறைவைத்திருக்கையி லிராமபிரான் பின்தேடிப்போ யவனுடைய பட்டணத்தையு மழித்து அவளைக் கூடாமலிருக்கவும் பாணப் பிரயோகஞ் செய்ய, அவனுடைய தலை யிழந்தான். ஆதலாற் பெண்மோகத்திலாசையுள்ளவர்கள் பூமியிலுஞ் சுவர்க்கத்திலுந் துக்கத்தையே யடைந்தார்கள். (௬௪)

[சுவர்க்கத்தில் சரீரமெடுத்த தேவர்கண் முதலாயினோருந் துக்கமடையு முறையைப் பன்னிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

இந்திரன் புயத்துற வாத மீடிலன்
சந்திரன் கயாமயந் தரித்தி ளைத்தனன்
மந்தனு முடவனே மற்றை யார்களு
மிந்தவா றெவருட லெடுத்தி டர்ப்பட்டார்.

(இ - ள்.) தேவர்களுக்கெல்லா மிறைவனாகிய இந்திரனும் நாளாயினிக்கு ஆசையாய்க் கைலாசத்துக்கே யழைத்துக்கொண்டுபோ யுமாதேவியுடனே நடனம் செய்கின்ற சிவபிரானை யெண்ணுமல் வச்சிராயுதத்தா லோச்ச, அப்போது இறைவன் திரும்பிப்பார்த்ததனுற் கைவழக்க மற்றுப்போய் வலத்தோளில் வாதவியாதியாய்த்

துக்கத்தை யடைந்து வலியிழந்தான். சந்திரனுங் கயரோகத்தினாலே துக்கத்தை யடைந்து இளைத்துப்போயினான். சனிபகவானுந் தன் மாற்றாந்தாயாகிய பிரதியுசாதேவி யென்பவளைத் தனக்குபகரிக்க வில்லையென் றுதைக்க, அப்போதவள், 'அழுகிக் கால்விழுந்து போக' என்று சபிக்க அதனா லவனு முடலனாய்த் துக்கத்தை யடைந் தான். மற்றவர்களும் இவ்வாறாக வுடலெடுத் திடர்ப்படாதவர்யார்? ஒருவருமில்லை. (சஎ)

தக்கனுஞ் சுரத்தினை யுடலிற் றாங்கினன்
றொக்கிடத் தலைவலி யரியுந் துக்கிதன்
மிக்குறச் சலோதரம் வருணன் வீறில
னுக்குடற் பழுதுள னுதய பானுவும்.

(இ - ள்.) தக்கனுஞ் சரீரத்தில் சுரத்தினால் வேதனையை யடைந்தான். மாயனுந் தலைவலியாற் றுயரத்தை யுடையவனாயினான். வருணனு நீர்க்கோவையென்னும் வியாதியைப் பெற்றுத் தன் பல மெல்லாங் குறைந்தான். சூரியனுந் தன் தேவி யுசாதேவியென்பவள் 'சூரியனுடைய தேசசு பொறுக்கப்படாது' என்று பிதாவாகிய விசுவ கர்மாவினிடஞ் சொல்லி யவன் சாணையினாற் கடைய தேசமழுங்கித் தொக்குத்தோஷமென்னும் வியாதியான் மனநைந்து துயரமடைந் தான்.

(வி - ரை.) உம்மை-எண். (சஅ)

காமனுந் திருவுருக் காயப் பட்டனன்
பூமக னொருசிரம் போக்கப் பட்டன
னாமக ணாசியு நறுக்கப் பட்டனள்
சேமமாஞ் சிவனவன் சினந்து சீறவே.

(இ - ள்.) வெளி. (சகூ)

கன்றிய காலனுங் களையப் பட்டன
னொன்றிய புரத்துளா ரொழிக்கப் பட்டன
ரன்றிய வரிசிர மரியப் பட்டனன்
பன்றியின் கொம்பினை பறிக்கப் பட்டதே.

(இ - ள்.) மார்க்கண்டருக்காகச் சிவபிரானால் கோபிக்கப்பட்ட ஜமராசனும் வலப்பாதத்தா லுதைக்கப்பட்டான். அனேகங் காலத் துக் கொருகால் அற்பகாலம் திரிபுரத்துக் கதிபராகிய வித்தியுன் மாலி முதலிய மூவருந் தகிக்கப்பட்டனர். அதுவல்லாமல் குருக்ஷேத் திரத்திற் றேவர்களெல்லாருங் கூடிச் சத்திரயாகஞ் செய்த சமயத்தி

லப்போது கிருட்டினன் எக்கியமூர்த்தியாயவதரித்து வில்லெடுத்துக் கொண்டு தேவர்களைத் துரத்திப் பின்பு திருவாரூரில் வந்து வில்லைத் தாடியி லூன்றி மோகித்து நிற்க, அப்போது வியாழபகவானுந் தேவர்களுங் காரியவிசாரம் பண்ணி வில்நாணிற் செல்லை யேவியவப்போது வில் நிமிர்ந்தது. அதனாற் றலை யறுக்கப்பட்டான். மாயன், கிருட்டியில் வராகவடிவமெடுத்துப் பாதாளமளவாகத் தன் கோட்டாலெடுத்தோமென் றகங்காரம் வர அவன் அகங்காரத்தைப் போக்கும்பொருட்டு அதன் கொம்பைப் பறித்துத் தரித்தார். (௯௦).

தக்கனு மிழந்தனன் றலையைப் பல்லெலா
முக்கிழந் தருணனு மொடுங்கி யோடின
னக்கியுங் கரமிழந் தஞ்சி யெஞ்சினன்
றுக்கமே மிக்குறச் சுரரு மோடினார்.

(இ - ள்.) சிவபிரானை யிகழ்ந்த குற்றத்தால் தக்கனும் வீரபத்திரர் கையாற் றலையறுப்புண்டான். அவனுடன் கூடிய சூரியன் தன் பல்லெல்லா முடையும்படி யடிபட்டு வலி குறைந்து ஓடினான். அக்கினியுந் தன் கை தறிப்புண்டு ஓடினான். மற்றைத் தேவர்களு மிகவு மடிபட்டு ஓடினார்கள். (௯௧)

தாருகன் காளியாற் றறிக்கப் பட்டனன்
சூரனெம் வே லினாற் றுணிக்கப்பட்டனன்
போருடை யசுரரும் போக்கப் பட்டனர்
பாரத குலத்தினுட் பார்த்த னெய்யவே.

(இ - ள்.) தாருகாசுரன் பத்திரகாளியால் தறிக்கப்பட்டான். சூரபதுமனும் நம்முடைய வேலினால் சங்கரிக்கப்பட்டான். பாரத குலத்துட் டோன்றிய அருச்சுனன் மகாபல பராக்கிரமசாலிகளாகிய நிவாதகவசரென்கிற அசுரரைச் சங்கரித்தான். (௯௨)

பாம்பென நருடனும் படியில் வீழ்ந்தன
னோம்பிய வருமுனி சாப மொன்றியே
தேம்பினன் பரசுடன் சிறந்த ராமனும்
வாம்பரித் தயரதன் மகன்வ லிக்கரோ.

(இ - ள்.) நகுடனென்னு மரசன் அசுவமேதயாகம் செய்து சுவர்க்க லோகத்துக்குச் சத்தவிருடிகளும் சிவிகை தாங்க அதன்மேலேறிப்போகையி லிந்திராணியை யடையச் சடுதியிற் போகவேண்டுமென்னு மாதரவினால் பெருவிரலூன்றி யகத்திய முனிவரை

நோக்கிச் 'சர்ப்ப சர்ப்ப' என்னும் மொழியாற் கடுகிப்போகவென்ன, அகத்தியமுனிவர் கோபங்கொண்டு 'நீ சொன்ன சத்தத்தின்படியே சர்ப்பமாகக் கடவை' என்று சபிக்க, அப்படியே யவனும் பாம்பாய்ப் பூமியில் வீழ்ந்தான். தாவிச் செல்லும் பரியினையுடைய தயாதச் சக்கரவர்த்தி திருக்குமாரனாகிய இராமபிரான் மிதுலையிற்போய்ச் சனகராசன் கன்னிகை சீதாபிராட்டியை வில்வளைத்துக் கலியாணம் செய்துகொண்டு வருகிறவழியில், பாசுராமன் தானொரு வில்லைக் கொண்டுவந்து 'இதனை வளை' என்று கொடுக்க, அப்பெருமானந்த வில்லை வாங்கி வளைத்து நாணையேற்றிச் சரந்தொடுக்கப் பரசுராமன் தன் தவமெல்லாம் அந்தச் சரத்துக்கிலக்காகக் கொடுத்து வாட்டமடைந்தான். (௩௩)

ஆயிரங் கரமுடை யசுர வாணனு
மாயனு விருகர மலாவி ழந்தன
னயனு மொருசிர மாவின் வீழுவே
யாயுவு மிழந்தன னங்க மங்கவே.

(இ - ள்.) ஆயிரங் கைகளையுடைய வாணாசுரன் சிவபிரான் திருநடனத்துக்குக் குடமுழா முழக்கிச் சேவிக்கச் சிவன் சந்தோடப்பட்ட காலத்தில் 'தேவரீ ரென்னுடன் யுத்தம் பண்ணவேண்டும்' என்று கேட்க, 'நம்முடைய சத்தியாகிய நாராயணனைக்கொண்டே யுத்தம் பண்ணுவிக்கின்றோம்' என்று சிவபிரான் அருளிச்செய்கையால்அந்நாராயணனது கிருட்டிணவதாரத்திற் பௌத்திரனாகியஅநிருத்தன் அவ்வாணாசுரன் மகள் உஷையைக் காமுற்றுக் கன்னிமாடத்திற் கூட, அதனை வாணாசுரனறிந் தவனைக் காவல் செய்ய, அதனை நாரதர் சொல்லக் கிருட்டின னறிந்து, அதுவே காரணமாக வாணாசுரன் சிவார்ச்சனை பண்ணிய விரண்டுகையையு மொழித்து நின்ற கைகளை யெல்லாம் வாளா லறுக்கப்பட்டான். இவ்வாறு வாணாசுரன் கைகளைச் சேதித்த கிருட்டினனும் ஆலிலையின்மேல் பள்ளிகொள்ளுகிற வவதாரத்தி லொருவேடன் சென்று அவன் சீபாதஞ் சிவந்திருப்பதைக் கண்டு புறுவென்று கருதி யெய்த அம்பினா லாலினின்றும் வீழ்ந்து சரீரம் நாசமா யுயிரு மிழந்தான். (௩௪)

ஆபனும் புறகிட வவன்று வாரையுந்
தாயமுந் தனதெனத் தரித்த சந்தனும்
வாயுசன் வீமனால் வதைக்கப் பட்டனன்
வாயுவோ டேடிய சேடன் வாடினன்

(இ - ள்.) கிருட்டினன் தோற்றுப்போம்படி பொருது அவன் துவாரகாபுரியையு முரிமையான பண்டி பண்டாரத்தையுந் தன் வச மாகக் கட்டிக்கொண்ட சராசந்தனுந் தன் யாகத்தில் யுத்ததானங் கேட்ட வாயு புத்திரனாகிய வீமனோடு பொருது அவனால் தன்னுடல் கிழிக்கப்பட்டான். வாயுவுடன் மாறுபட்டு மகாமேருவைக் காத்த சேடனுங் காக்கமாட்டாமல் துபாமடைந்தான். (கூ)

(வி-ரை.) வாயுபுத்திரனென்பது உபசாரப்பெயர்.

அழிவிலா வரமுடை யனும னாகமும்
பழுதுறப் பகலவன் பதறிப் பாற்றின
னெழுகதிர் தடைபட வெதிர்ந்து வானிடைக்
குழுவிய குயினிலை வளியிற் குன்றுமே.

(இ - ள்.) அழிவில்லாத வரத்தினையுடைய அனுமான்; சூரியன் சிவந்திருக்கையாற் பழமென்று தாவுதலினா லவன் கிரணத்தாற் சரீரம் பழுதுபட் டோடும்படி விரைவிற் றாத்தினான். இச் சிறப்பினை யும் விட்டு விளங்குகின்ற கிரணத்தையுமுடைய சூரியனு மாகாசத் திற் றோன்றிய மேகத்தினால் மறைக்கப்பட்டான். அம் மேகம் தன் னைப் பற்றப் பலமாயிருக்கிற காற்றினால் தமது கூட்டத்தைச் சிதற வடிக்கப்பட்டது.

(வி - ரை.) வாயு தன் மைந்தனாகிய அனுமானுக்குத் தேவர்க ளாயுதங்களால் வேதனை உண்டாகா திருக்கவேண்டுமென்று பிரமனை வரங்கேட்டுக் கொள்ளுகையால் 'அழிவிலா வரமுடை யனுமன்' எனச் சிறப்பித்தார். (கூ)

சிற்றுயிர் படுந்துயர் செப்பு வாமெனை
நெற்றியின் விழியுடை நிமலன் பிரியத்
துற்றுடல் குமரனென் றுரைக்கப் பட்டயான்
சற்றல வசுரரா லுற்ற சங்கையே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) குமாரன் என்பது திரிந்து நின்றது. 'கு' என் பது 'குற்சிக்கப்பட்டது' 'மார்' என்பது 'மாணம்'; இவ்வாறு குற்சிக் கப்பட்டதை நாசமடைவிப்பதனாற் குமாரனெனப் பெயராயிற்று. இதனைக் குமாரதந்திரத் தோதப்பட்டது. குற்சிதம்-அசுத்தம். (கள)

அபனொரு தினந்தனி லமரர் மற்றையர்
வயவலி தொலையவே வருந்தி வாடுவ

ரயனுமற் றவருட னழிவ ளுண்டுகள்
கயமுறப் பரார்த்தமெண் ணிரண்டு காட்டியே.

(இ-ள்.) மானிடவருட முந்நூற்றறுபது கொண்டது தேவ வருடம். அத் தேவவருடம் ஆயிரத்திருநூறு கொண்டது கலியுகம். தேவவருட மிரண்டாயிரத்து நானூறு கொண்டது துவாபரயுகம். தேவவருட மூவாயிரத்தறுநூறு கொண்டது திரேதாயுகம். தேவ வருடம் நாலாயிரத்தெண்ணூறு கொண்டது கிரேதாயுகம். ஆக இவ்வாறு தேவவருடம் பன்னீராயிரங் கொண்டது ஒரு சதுர்யுகம். அச் சதுர்யுகம் இரண்டாயிரங் கொண்டது பிரமனுக்கு ஒருநாள். அவ்வொருநாளில் தேவர்கள் அட்டதிக்குப்பாலகர்கள் சந்திர சூரியர்களெல்லாருந் தங்களிடத்துண்டாகிய பலமும் வயதுந் தொலையவே துக்கித்துச் சிவபிரானால் சங்கரிக்கப்படுவார்கள். பரார்த்தகால மிரண்டிப்படி கழிந்தவுடன் பிரமனுக்கு நாசமுண்டாம். மற்றுள்ள தேவர்கள் தங்கள் தங்கள் காலாவதி சென்றவாறே நாசத்தை யடைவார்கள்.

(வி - ரை.) பரார்த்தம்-பிரமகற்பத்தரை. (ருஅ)

[முற்கூறிய மானிடயோனிகள் துயரம் பத்துச்
செய்யுளா லருளிச்செய்கிறார்.]

கருப்பையு ளுணர்வினைக் காலு மோதலாற்
பிரித்துயிர் பிறத்தலாற் பேசப் பட்டதே
விரித்துநூ லேதமும் விளங்க வாய்கிலார்
மரிப்பரே பிறப்பரே மனிதர் தாமுமே.

(இ - ள்.) கர்ப்பத்தில் ஞானத்துடன் கூடியிருக்கிறவனைச் சண்டமாருதம் வந்தடித்து அதனால் முன்புள்ள அறிவு கலங்கி யபானவாயுவினால் கிழே தள்ளப்பட்டுப் பூமியில் வந்தவளவி லனேக துன்பத்தை யடைவானென்று நூல்களிற் சொல்லப்பட்டதே; இப்படி வருத்தமடைந்து பூமியிற் பிறந்த மானிடர் வேதாகம முதலிய நூல்களோதி நன்று யாராய்ந்து கதியடையாமல் வீணில் காலத்தைக் கழித்து மரிப்பதும் பிறப்பதுமே தொழிலாய்த் திரிவார்கள்.

அன்னைதன் வயினிடை யநேக துன்பமே
பின்னையும் பிறப்புழி பெரிது துன்பமே
தன்னயர் வறவுரை தரிக்கத் தாதையோ
சொன்னவில் குரவனுஞ் சுளியத் துன்பமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) அயர்வு-மறதி. சுளிய-கோபிக்க. (கூ0)

ஒருமைய வுணர்வின ருரைக்கும் வாசகத்
தருமைய பொருளவ ரருளி னாற்பெறும்
பெருமையைப் பெறற்கரும் பேறென் றெண்ணிலா
ரிருமையு மிழப்பரே யினைய ரிச்சையால்.

(இ - ள்.) மோட்சத்தை யடைவதற் கொருப்பட்ட அறிவினை யுடைய ஞானவான்க ளருளிச்செய்யுந் திருவாக்கினா லுண்டாகிய அருமைப்பொருளை யுட்கொண் டந்த ஞானவான்க ளருளினாற் பெற்ற நன்மையை யடையவேண்டு மென்னும் புத்தியில்லாமன் மடவார்மேலும் புத்திர மித்திர களத்திராதிகண்மேலும் வாஞ்சையை வைத்தவர்கள் போகமோட்சங்க ளிரண்டையு மிழப்பார்கள்.

துடியிடைத் தடமுலைத் துளங்கு தோள்வளைப்
பிடிநடைக் கடுவிழிப் பேதை மாதரார்
கடிதடக் கலவியிற் காம மீதுறப்
படுமிடர்க் களவிலைப் போகர் பாருளே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) தடம் - பெருமை. பிடி - பெண்ணானை. கடு - விடம். கடிதடம் - அல்குல். (சஉ)

விடக்கினை விரும்பியே வெறுப்பு மேவிடக்
கடித்திரு நாய்தமிற் கதறு மாறுபோன்
முடைப்புழுக் குரம்பையின் மோக மெய்தியே
விடைப்பரே மனிதருந் தம்மில் வெவ்வவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) விடைத்தல் - அடித்தல். (சங)

திலத்தினை யினிமையைத் தினைக்க மானிடர்
மலைக்கிணைத் துயரினை விரைய மாந்துவார்
துலைக்கணக் கறிகிலாத் துரிசி னாரவர்
கலைக்கணக் கினத்தலை காண வல்லரோ.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) திலம் - சிறுமை கூறியது. துலைக்கணக்கு - துலா நிறைக்குங் கணக்கு. துரிசு - பாவம். கலை - வேதாகமம். (சச)

பனியினும் பனிப்பரே பவன னெய்தினுந்
துனிவெயிற் கதிரின் மிகவுந் துன்பமே
யினையன துயர்பல வின்ப மெய்துவர்
மனிதர்க ளெப்பொழு துறுகண் மாறியே.

(இ - ள்.) ஆன்மாக்கள் முற்பனியாகிய மார்கழி தையினும், பின்பனியாகிய மாசி பங்குனியினும், முதுவேனிலையுங் காற்றினையு முடைய ஆனி ஆடியினுங், குளிர்காலமாகிய ஐப்பசி கார்த்திகையினும், மற்றைக் கார்கால மிளவேனிற் காலங்களினு மிகவுந் துன்பத்தை யடைவார்கள். இக் காலங்களில் துக்கத்தையே யனுபவிப்பதல்லாமல் சுகத்தை யெப்போதுதான் அனுபவிப்பார்கள்.

(வி - ரை.) சூத்திரம்

"காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனி லென்றாங்
கிருமூ வகைய பருவ மென்ப." என்பதனு லறிக.

காலையு மலத்தினாற் கடிய துன்பமே
காலவும் பசியினாற் றளர்வ ருச்சியின்
மாலையிற் காமமும் மலிய வாடுவர்
வேலைக டொறுமிடர் விளையும் விஞ்சியே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) முற்கூறிய ஆறு இருதுவிலுந் துக்கமடைவதல்லாமல் சிறுபொழுதாகிய நாடோறுந் துக்கமடைவதனை 'வேலைகடொறும்' எனப் பிரித்துங் கூறினர். (சுசு)

ஆக்கையை நிலையென வாட கந்தனை
யாக்கலு மருந்துய ரஞ்சிச் சோரரைக்
காக்கலுங் கடிந்துயர் களித்த வின்முத
லாக்கலு மருந்துய ரழியும் போதுமே.

(இ - ள்.) நிலையில்லாத சரீரத்தை நிலையென்று பொருளைத் தேடுமிடத்தும், அதைக் கள்ளர் கொண்டுபோகாம விரட்சிக்குமிடத்தும், பலங் கண்டு களிக்கும் வீடு உண்டாக்கு மிடத்தும், உண்டான வீடு இடிந்துபோமிடத்துந் துக்கத்தையே யடைவார்கள்.

(வி - ரை.) துக்கம் என்பது முழுதுங் கூட்டுக. (சுஎ)

ஆடையு மொன்றலா லதிக மென்செய
வீடுமொன் றல்லது வேண்டு மோபல
பாடுடைப் புவிமனர் பாவ சாதனந்
தேடிய மற்றைய வினைத்துந் தேரினே.

(இ - ள்.) பண்ட முதலியவற்றைப் பிரயாசப்பட்டுத் தேடினும் அவர் தரிக்கப்போகிற புடவை யொன்றல்லவோ; மாடகூடங்

கட்டிருனு மிவன் படுக்கப்போகிறது பாய்விரியல்லவோ; இவ்வா றிருக்கப் பாவசிந்தனையா யிருக்கிற அரசர்கள் கோட்டை யுப்பரிகை முதலாயினவற்றை யுண்டாக்குவதை விசாரித்தால் எல்லாம் பாவத் தைத் தேடுவதொழிந்து புண்ணிய மொன்றுமில்லை. (சுஅ)

[அரசர்களுந் துயரமடைவதனை யுணர்த்துகின்றார்.]

அஞ்சுவர் புதல்வனை யரையர் மற்றையர்
தஞ்சலில் பிறரிடைச் சாற்று வாமெனை
விஞ்சிய வரசர்கள் வெகுண்ட வேலையிற்
றுஞ்சுவர் சமர்தனிற் றுயரந் துய்த்துமே.

(இ - ள்.) சதுரங்க பலத்துடன் கூடியிருக்கிற அரசர்களுந் தான் பெற்ற பிள்ளை தன்னைச் சேதித்து இராச்சியங் கட்டிக் கொண்டு அனுபவிக்கப்போகின்றானென்று பயப்படுவார்கள். அது வல்லாமல், தன்னிலு மிருந்தபரமண்டலத்துள்ள அரையர் வெகுண்டு படையெடுத்துவந்த காலத்தும் யுத்தகளத்திற் பொருது அதனாற் சிறிதுபேர் இறந்துஞ் சிறிதுபேர் துன்பமடைந்து மிவ்வாறே துக் கத்தை யடைவார்கள். (சுகூ)

[இனி விலங்குகளும், பறவைகளும், ஊர்வனவுந், தருக் களுந் துயரமடைவதனை ஐந்து செய்யுளா லுணர்த்துகின்றார்.]

கரிபரி முதலவுங் கனங்க டாங்கியே
புரவலர்க் கேவலர் புடைக்க நொந்திடும்
பொருகள மதனிடைக் குருதி பொங்கவே
சாமுறத் தளர்வுறச் சாய்ந்து வீழுமே.

(இ - ள்.) பாகனு லங்குசம் பரிக்கோல்முதலியவற்றாற் றுயர மடையும் யானை; குதிரைகள் வாதுவராற் றிருத்துவிக்கு மிடத்துக் கசையினால் வேதனையுறும்; ஒட்டக மெருது முதலாயின பாரங்க ளைச் சுமந்து அதனாற் றுயரத்தையுறும்; அதுவல்லாமல் யுத்த களத்திற் பகைவர் கைப்பாணம் வாள் முதலியவற்றாற் குருதி பொங் கப் பாடுகொட்கு மரிக்கும். (எ0)

பானினங் கானவர் வலையின் வாடிடு
மானினம் புலியுறி னழுங்கி யஞ்சுமே
வானற வுணவற வருந்தி வாடிடு
மேனைய மிருகமு மிடுக்க ணெய்துமே.

(இ - ள்.) வேடர் முதலியவரால் வலையில் காடை புலி மான் பன்றி முதலியவை துக்கமடையும். பசுக்களினது கூட்டமும் புலி வந்து பாய்ந்தவிடத்துத் தறையிற் படிந்து அதனாற் றுயரமடையும். அதுவல்லாமல், மழையில்லாமையால் புன் முதலாயின வுணவற்றுப் போக அதனால் வருத்த முற்றும் வாடும். மற்றை மிருகமு மிப்படி யே துன்பமடையும். (எக)

வியங்க முழம் வருந்திடும் வெயிலின் மாரியின்
வயங்கெடத் துயங்கிடும் வாடை வீசவும்
நயங்கெடு முணவற நார மாறினு
மியங்கினும் பகையினுக் கச்ச மெய்துமே.

(இ - ள்.) பறவைகளானவை மிகுந்த வெயிலினாலு மழை களினாலும் வேதனையடையும்; அதுவல்லாமல், வாடைக்காற்றுக் கடு கில் தங்கள் பலங் கெட்டுத் துக்கமடையும்; அதுவல்லாமல், ஏரி முத லானவற்றிற் சலம் வற்றிப்போக மீன்முதலிய வுணவில்லாமையினா லும் வாட்டமடையும்; அதுவல்லாமல், ஆகாசத்திலே சஞ்சரிக்கு மிடத்துக் காக்கையானது வலியான் - கோட்டானாலுங், கொக்குக் குருவி முதலாயின இராசாளி வல்லூற்றினாலு மிப்படி யொன்றுக் கொன்று பகையாகிய பக்ஷிகளினாலே துயர மடையும். (எஉ)

பசியுறப் பகையுறப் பாம்புந் தேம்பிடும்
நசமுறும் வலையுற நார மீனுமோ
கசிவினிற் கிருமியுங் கவித்த மூங்கியே
வசமறும் வெயிலினோர் தினத்துண் மாயுமே.

(இ - ள்) பாம்புகளும் பாம்பாட்டிகள் பிடித்துப் பெட்டியி லடைக்கப்பட்டுப் பசிவந்து பொருந்தப் பக்குவத்தி லிரை பெறாமை யாலுந், தனக்குப் பகையாகிய கருடன் கிரி முதலியவற்றைக் கண்ட விடத்து மயக்கத்தை யடைந்தும் வருந்தும். சலத்திலுண்டாகிய மீன் களும் வலைக்காரராற் பிடிக்கப்பட்டு நாசத்தை யடையும். புழுக்களும், வேர்வையிலு மீரத்திலு நெருங்கித் தோன்றி வெயிலினால் துக் கத்தை யடைந்து ஒருநாளிலேதானே சனித்து மரிக்கும்

(வி - ரை.) நாசமென்பது 'நசம்' எனக் குறுக்கல் பெற்றது. 'மீனுமோ' என்ற ஓகாரத்தினால் மற்றுமுள்ள செந்துக்களுங் கொள்க. (எ௩)

வருந்திடு தாவர வுருவ மாதவ
ரிந்திட வற்கலை யதனை யாக்கவும்

பொரிந்திடும் பனியினும் பொருகை யானைகள்
முரிந்தறு மூலமும் பறிக்க மூசியே.

(இ - ள்.) தாவரவடிவமாகிய மரங்கள்: மகத்தாகிய விருடிகள் மரவுரி தரிப்பதுபற்றி பட்டையை வெட்டி யுரிப்பதனாலும் வேதனை யெய்தும். அதுவல்லாமல், பனிப்பெய்கையினாலும் பொரிந்துபோகும். அதுவல்லாமல், பொருகின்ற கையினையுடைய யானைகள் கூடி வேரைப்பறிப்ப வதனாலு முரிந்து நாசத்தை யடையும்.

(வி-ரை.) மூசுதல்-கூடல். (எச)

[இவ்வாறு கூறி மேற் பொதுவிதி யுணர்த்துகின்றார்.]

பெற்றிடுஞ் செல்வமும் பீடை செய்திடு
மற்றுயர் வாழ்வினை மதித்த வேலையி
னுற்றிடு முணர்வுமிம் முறையி னொத்திடுஞ்
சிற்றுயிர்க் குடற்சிறை செறித லாலரோ.

(இ - ள்.) ஒருவன் செல்வமு மற்றொருவன் அதிக செல்வத்தைக் கண்டவிடத்து, 'நமக் கவ்வள வுண்டாகவில்லையே' என்னுந் துக்கத்தைக் கொடுக்கும்; தான் கற்ற கல்வியும் பிறனொருவன் மிக்க கல்வியைக் கற்றவிடத்து மிவ்வாறு துக்கத்தை விளைக்கும்; சிற்றுயிராகிய ஆன்மாவுக்குச் சிறைச்சாலையாகிய வுடல் பந்தமாகக் கூடுவதா லிவ்வாறு விசாரிக்கச் செய்யும். (எ௫)

[இதுவுமது]

பரிமிசைக் களியுறப் பயின்ற பாவகன்
றரைதனிற் சிவிகையுட் டங்கி னொனிர்
வரமுனைக் களிப்பினை மாற்றி மையலும்
பிரிவிலன் றேர்வரச் சிவிகைப் பேதையும்.

(இ - ள்.) பூமியிற் கால்நடையாய் வந்த ஒருவன் தனக்கெதிரே சந்தோஷத்துடன் குதிரையேறி வருபவனைக் கண்டு 'நாமுங் குதிரையேறப் பெற்றோ மில்லையே' என்று துக்கத்தை யடைவான். அக் குதிரையுடையவனுந் தண்டிகை பல்லக்கேறி யெதிரே வருபவனைக் கண்டு முன்னுள்ள சந்தோஷத்தை யொழித்துத் தனக்கு அது உண்டாயிற்றில்லையே யென்று துக்கத்தை யடைவான். அப் பல்லக்கில்வரு மறிவில்லாதவனுந் தேரேறி வருபவனைக் கண்டு துக்கத்தை யடைவான். ஆகையா லொருவர்க்கொருவ ரிவ்வாறே யுத்தரோத்தரத் துயரமடைவார்கள். (எ௬)

[இதுவுமது]

இம்முறை யமரரு மிடுக்க ணெய்துவர்
தம்மினு முயர்ந்தவர் பதத்தைத் தாமுனி
யெம்முறை யானுமெய் யிடுக்க ணேதுவே
செம்மைய செல்வமே சிவாநு பூதியே.

(இ - ள்.) இவ்வாறே தேவர்கள் முதலாயினோரும் தமக்கு மேலாகியபேர் பதப்பேறுகளையடையக் கருதி யுத்தரோத்தரந் துக்கத்தை யுறுவார்கள். இவ்வாறெந்தெந்த விதத்தால் சரீரத்தை யெடுத்தாலுந் துக்கத்துக்குக் காரணமே யாகையாற் சிவபிரானுடைய ஸ்ரீபாதகமலத்தை யடைந்து சிவானந்தாநுபூதியில் திளைத்திருப்பதே யழியாத செல்வமாம். (எள)

[தங்கள் தங்கள் கன்மத்துக் கேடாகத் தேவர்களா லசுரரும் இராக்ஷதருந் துயரமடைவா ரென்பதூஉம், அவ் விருவ ராலுந் தேவர்கள் துயரமடைவார்க ளென் பதூஉ முணர்த்துகின்றார்.]

சமர்தனி லமரரா லசுரர் தாழ்வரே
யமரரு மவர்களா லபச யத்தரே
யிமையவர் தயித்திய ரிந்த நீர்மையர்
தமதம வினைபரி பாகஞ் சாரவே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) தயித்தியர்-இராக்கதர். (எஅ)

[மேற் கன்மமுங் காலமும் பலத்தைக் கொடுக்கமாட்டாது, சிவனே கொடுப்ப னென்பதனை யுணர்த்துகின்றார்.]

கருமமும் பலத்தினைக் காட்ட வல்லதே
பருவமுந் தனக்கது பண்ண வல்லதே
யிருவினைப் பருவமும் பலமு மீசனே
தருவனென் றுணர்கிலா ருடலிற் சார்வரே.

(இ - ள்.) கன்மமுங் காலமுஞ் சடமாகையா லான்மாக்களுக்குத் தானாய்ப் பலத்தைக் கொடுக்கமாட்டாது; ஆகையால், அவரவர் புண்ணியபாவ பக்குவத்தையு மதனா லுண்டாகிய பலத்தையு மறிந்து தருகிறவன் சிவனே யென் றறியாதவர்கள் பூட்டையு நீரும்போல மீளவுஞ் சனன மரணத்தா லுழல்வார்கள். (எகூ)

[வியாதியால் வருந் துக்க முணர்த்துகின்றார்.]

அருந்துய ரடையுமே யவர்கத மாதியின்
மருந்தினை யருந்தினுந் துயரம் வந்துறு
மருந்திடுந் துயரினை யறிவர் யாவரும்
விரிந்திட விவ்விடத் துரைக்க வேண்டுமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) 'வேண்டுமே' என்ற ஏகார மெதிர்மறையிக் கு.
(அ௭)

[நரை, திரை முதலிய துன்பத்தை யுணர்த்துகின்றார்.]

நரை திரை வருதலி னடலை யோபெரி
திரைதரு மவரென ரென்ன வேங்கியே
வருதுய ரளவிலை மரண வேலையில்
விரவிய தூதரான் மிக்க துக்கமே.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) திரை-உடம்பு திரைதல். (அக)

[இதுவுமது]

ஆயுவுஞ் சதமென வறையப் பட்டதே
யாயினு மவரவர் கருமத் தாலுடன்
மாயுமென் றறிகமா துயர மேவருந்
தேயுமந் நாடனிற் காலன் சேரவே.

(இ - ள்.) ஆன்மாக்களுக்குப் பூரணமான வயது நூறென்று வேதாகமங்களிற் சொல்லப்பட்டதேயானாலு மவரவர் செய்த கன்மத்துக்கு ஈடாகக் கற்பத்தி னழுவிப்போவதும், பிறந்தவுடனே யழிவதும், வளர்ந்து பாலதருண விருத்த தசையையடைந் தழிவதுமாயிருக்குமென் றறிக. இங்ஙனம் ஆன்மாக்க ளசத்தை யடையுங் காலத்தி லெமதூதர் வந்து பொருந்துகையினாற் பயந்து மிக்க துயரத்தையே யடைவார்கள். (அஉ)

[அம் மரணகால மிருவகைப்பட்டிருக்கு மென்பதனை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

மிருத்திய மிருவித மொன்று மீண்டிடு
மருத்திய மருந்தினு மழலை யோம்பினு
முரைத்தமந் திரத்தினு மோத ஞதியைக்
குருத்தவர்க் குதவினு மன்பு கூரவே.

(இ - ள்.) மரணம், காலமிருத்தியு வென்றும், அவமிருத்தியு வென்று மிருவகைப்பட் டிருக்கும். இதில் அவமிருத்தியு வாகடநூலிற் சொன்ன ஔடதம் புசிக்கையாலும், சிந்தித்தண்டு முதலிய திரவியங்கொண் டோமம் பண்ணுவதனாலும், மிருத்தியஞ்செய மந்திர சபங்களினாலும், பெரிய தபோதனர்களைக் கிருபையுடனன்ன முதலிய பாகபேதத்தைப் புசிப்பிக்கையாலுந் திரும்பப்படும்.

மற்றைய மிருத்தியும் வந்த வேலையி
லுற்றெவ ருடலிடை யிருப்ப ரோர்ந்திடிற்
பற்றிய வுடலினை விட்டுப் பாறியே
முற்றிய வினைப்பயன் சீவன் மூளுமே.

(இ - ள்.) மற்றைக் காலமிருத்தியு வந்தகாலத்தில் அதனை விசாரிக்குமிடத்து ஒருவரு முடலிலிருக்க வல்லவரில்லை. ஆகையால், ஆன்மா பிராரத்த கன்மம் புசித்துத் தொலையவந்த காலத்து மிருத்தியு வந்தவுடன் பொருந்தியிருந்த தேகத்தை விட்டுப் போய்ப் பரிபக்குவமான கன்மத்துக்கீடா யதற்கேற்ற தனு காணுதிகளைப் பொருந்தும். (அஎ)

[அம் மரணகாலத் துண்டான துக்கத்தை யுணர்த்துகின்றார்.]

விட்டிடும் வேலையின் வியந்த வச்சமே
கட்டிடப் படுந்துயர் பகரற் பாலதே
கட்டுவை நீங்கியே காதல் செய்யுமண்
கட்டுவை தன்னையும் பின்னைக் காமுறும்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) கட்டுவை-கட்டில். (அஅ)

[இதுவுமது]

தனத்தினை மனைதனைத் தாளி யந்தனை
நினைத்தினி பெவரனு பவிப்பர் நீங்குநா
ளெனக்கிவை யன்னிய மாகு மேயென
மனத்துயர் மலியவே மாயு மாவியே.

(இ - ள்.) வெளி. (அகூ)

[இதுவுமது]

பாம்பழல் வாயினுற் பற்ற மண்டுகந்
தேம்பிடுந் துயருறுஞ் சீவன் றேயுநா

ளோம்பிட வல்லரே யுற்ற மற்றையார்
போம்பொழு தருந்துணை புரிந்த புண்ணியம்.

(இ - ள்.) வெளி.

(வி - ரை.) மண்டுகம்-தவளை. ஓம்பல்-பாதுகாத்தல். (அஎ)

[ஆன்மா மற்றொரு தேகத்தைப்பற்றியே யிதனை விடுமென்பதற்
குவமைமுகத்தா லுணர்த்துகின்றார்.]

திரணுறுஞ் செழுகைபோற் சீவன் நீண்டியே
வருமுரு வதனைமுன் னுருவ மாற்றிடுந்
தருமமே பருவமேற் சாரும் வானினைப்
பருவமேற் றீவினை நிரயம் பற்றுமே.

(இ - ள்.) புல்லினிடத்துப் பொருந்திய சாணளவான புழு வொருதலை பற்றி யொருதலை விடுவதுபோல ஆன்மா அந்திய காலத் தெதிரே வரும் யாதனா சரீரமாகிய சூக்குமதேகத்தைப் பற்றிப் பின்பு அப் பூதசரீரமாகிய தூல வுடலை விட்டு நீங்கும். அப்படி யாதனா சரீரத்தை யெடுத்துக்கொண்டு செல்லும்போது நல்வினைப் பரிபாகமானாற் சுவர்க்கத்தை யடையும்; தீவினைப் பரிபாகமானால் நரகத்தை யடையும். (அஅ)

[மரிப்பதைப்பற்ற இரத்தலுங் காத்தலுமே யிருந்த
துக்கமென் றுணர்த்துகின்றார்.]

மரிப்பதி னருந்துயர் மதிக்கின் மற்றிலை
யிரப்பதே யதனினும் பெரிய வின்னலை
கரப்பதூஉ மிரப்பதிற் கடிய வின்னலை
யிரப்பதூஉங் கரப்பதூஉ மின்மை யின்பமே.

(இ - ள்.) மிக்க துக்கங்கள் பலவுளவேனும் விசாரித்துப் பார்க்கும்போது மரிப்பதைப் பற்றவு மருந்துயர் வேறில்லை; அதனினு மிருந்த துக்க மொருவன்பாற் சென்று 'ஈ-தா-கொடு' என் றிரத்தலேயாம். அதனினு மிக்க துக்கம் இரப்போர்க்கில்லையென்பதேயாம். ஆதலால், தான் ஒருவன்பாற்சென் றிரவாதிருத்தலுந், தன்பால்வந் திரப்போர்க் கில்லையென்று திருத்தலு மிம்மை மறுமை யிரண்டினுக்கு மின்பமாவது. (அகூ)

[துறவுடையோர் மகிமையை யிரண்டு செய்யுளா
லுணர்த்துகின்றார்.]

மண்ணினுந் தனத்தினு மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந்

துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்.

(இ - ள்.) மண் முதலாகிய பூமியினுந், தனதானிய முதலிய வற்றினுந், தன் மனைக் குரித்தாகிய நற்குணத்தையுடைய பெண்டிருடனும், பிள்ளைகளிடத்தினுந், தன்னைப் பெரியோனென்று சொல்லுங் கீர்த்தியினு முண்டாகும் ஆசையை விரைவில் விட்ட சுத்தரே, தேவலோகத்தினு மின்பத்தோடுகூடிக் கீர்த்தியைப் பொருந்தியிருப்பவர்கள்.

(வி-ரை.) 'விண்ணினும்' என்ற வும்மையால் மண்ணினு மவர்களே நன்மையை யனுபவிப்பார்களென்றறிக. (கூ0)

ஆக்கையிற் றுயர்பெரி தற்ப மின்பமென்
றூக்கையை யறவெறுத் தார்வங் கூர்வரே
லாக்கையி னநாதியே முத்த னுக்கவ
னாக்கையுந் துயரமு மறுப்ப னாணையால்.

(இ - ள்.) சரீரமெடுத்ததினால் துக்கம் பெரிது, இன்பஞ் சிறிதென்று விசாரித்துத் தேகாதிப் பிரபஞ்சத்தை நன்றாக வெறுத்துத் தேகத்தினின்றும் அநாதிமல முத்தனாகிய சிவபிரானுக்கு அன்பு பொருந்தி யிருப்பாரானால், அச் சிவபிரானும் ஆக்கினாசத்தியினால் யாக்கைக் கேதுவான மல மாயா கன்மமாகிய துக்கத்தை யொழிப்பான்.

(வி - ரை.) 'அநாதியே முத்தனுக் கார்வங் கூர்வரேல்' என்று கூட்டிப் பொருளுரைக்க. (கக)

[ஆசையானது இருவகைப்படுமென் றுணர்த்துகின்றார்.]

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆசை தானிரு பேத மேயவை
யேய நாதியி லாதவன்
பேசு நூல்விதி பேணி யேசெயும்
பெற்றி தான்முதன் மற்றதுந்
தேசு சேர்வினை தீர வேவரு
சேத னவிப ரீதமே
யாசி லாவர னாணை யாலவை
யாள்வ ரேயுட லாளரே.

(இ - ள்.) ஆசை யிரண்டுவகைப்பட்டிருக்கும். அதிலொன்று, அநாதிகாலந் தொட்டு ஆசையில்லாதிருக்கும் சிவபிரா னருளிச்

செய்த வேதாகமத்தின் வழி தப்பாம னடக்கு மியல்பு; மற்றொன்று, நல்வினை நீங்கிய அறிவு மயக்கத்தினால் 'இதுவே நிச்சயம்' என்று கருதிச் செய்யுந் தீவினை; ஆகையால், சரீரத்தை யெடுத்தவர்கள் அந் நல்வினை தீவினை யிரண்டினையுங் குற்றமில்லாத சிவாக்கினையினா லனுபவிப்பார்கள். (கஉ)

[ஆன்மாவுக்கு முற்கூறிய ஆசை முதலாயினவை நீங்கி வைராக் கியம் பிறக்கவே மோக்ஷமுண்டாமென் றுணர்த்துகின்றார்.]

ஆசை மாசற வாக வேரற வாண வாதியு மாயவே
பாச நாசக வீச ஞசிவி பாத தாமரை நாண்மலர்
வாச நேசநு பூதி யாவது வாதை யேதுமி லாததே
தேசு தேசமொ ரேக மோசிவ னேசர் பூரண தேசரே.

(இ - ள்.) ஆன்மாக்களுக்கு ஆசை யுண்டாக்குங் கன்மம் நீங் கச் சரீரத்துக்குக் காரணமாகிய மாயையும் வலிகெட, ஆணவகாரியங் களு நீங்கினவாறே பாசத்தை நசிப்பிப்பவனுந், தனக்கு ஆணவாதி குற்ற மில்லாதவனுமான சிவபிரானுடைய ஸ்ரீபாத கமலங்களை யன் புட னனுபவித் திருத்தலே வேறொரு வேதனையு மில்லாதது. அப் படி யவ்வனுபவத்தையுடைய முத்தான்மாக்களுடைய ஞானம் ஏக தேசமன்று. சிவபெருமானைப்போல சருவஞ்ஞத்துவாதி குணங்க ளோடு கூடி வியாபித்திருக்கும்.

(வி - ரை.) 'ஆணவாதி' என்பதனால் விந்து திரோதானமுங் கொள்க. (கங)

[முற்செய்யுளி லான்மாவை வியாபி யென்றதை யிச்செய்யுளிற் சாதித் துணர்த்துகின்றார்.]

வேறு

ஏக தேசவுட லுற்ற வர்க்கறிவு
மேக தேசமல தில்லையே
யேக தேசவுட லற்ற போதுமறி
வேக தேசமென லென்சிவ
னேக தேசவுட லற்ற வன்னறிவு
மேக தேசமல வாதலா
லேக தேசவுட லற்ற முத்தனறி
வேக தேசமல வென்பரே.

(இ - ள்.) ஏகதேச வுடலை யடைந்த ஆன்மாக்களுக் கறிவு ஏக தேசமேயல்லாமல் வியாபகம் விளங்காது. ஏகதேச வுடலாகிய பந்த

தத்தை நீங்கியபோது அறிவை யேகதேசமென்று சொல்லவேண்டுவ தில்லை. அது என்னகாரணத்தா லெனில், சிவன் ஏகதேசசரீர மில்லாதவ னாகையால் அவனுடைய அறிவும் ஏகதேசமன்று வியாபியே; அதுபோல, ஏகதேசவுட னீங்கின முத்தான்மாக்க ளறிவு மேகதேச மல்ல, சருவ வியாபியேயாம். (கஏ)

[முத்திக்கு மலக்ஷயம் பிறத்தலே மேலான காரணமென் றுணர்த்துகின்றார்.]

வேர றப்பணையு மற்று மற்றொழியும்
வேற வற்றுமுதன் மேவுமே
யார ணத்திணையு மாக மத்திணையு
மாயு மற்புதன லாரியன்
பேர ருட்பெற வநாதி முத்தனொடு
பேத மற்றநிலை பேறுதான்
கூரி ருட்குழுவ றுத்த றுக்குமுடல்
கூட முத்தனனு கூலமே.

(இ - ள்.) மரம் ஒன்று வேரற்றவாறே யதனுடைய கொம்பு பணை காய் பூவெல்லாம் நாசமடைந்து மேலுமுற்பத்தியு முண்டாகாத வாறுபோல, ஆணவமாகிய நிறைந்த விருணீங்கியவாறே யுடல் மல மாயா கன்மத்தோடுங் கூட நாசத்தை யடைந்து முத்தியை யடையும். அதுவென்னெனின், வேதாகமங்களை யையந் திரிபற வுணர்ந்த ஞானாசிரியன் மிகுந்த கிருபைபெற்று அநாதிமலமுத்தனாகிய சிவ பிரானோடு கூடி யிரண்டற்ற வயிக்கியமா யிருப்பதே மேலான பேறு.

(வி - ரை.) தான்-அசை. (கஅ)

[இப்படிப் பெற்ற முத்தான்மாவின் தன்மையும், அவர்கள் சிருட்டியாதி கிருத்தியங்களைப் பண்ணு ரென்பதூஉ முணர்த்துகின்றார்.]

முத்தி பெற்றவ னழுக்க னைத்திணையு
முற்ற விட்டுமுளை யற்றவ
னித்த னுத்தம னிருத்த சுத்தசுக
சிற்க னத்துநிலை யுற்றவன்
புத்த னத்துவித முற்று மிக்கபிர
புத்த னைக்கெழுவு பூர்ணன்
றத்து வத்தொகைம லத்தொ டற்றுமுட
லைப்பெ றப்பிறர்ச மைப்பனோ.

(இ - ள்.) முத்தான்மா ஆணவாதி மலங்களை முழுதும் போக்கி மேற் சனன மில்லாமலிருப்பவன், நித்தியனுமா யுத்தமனுமாய் ஒரு பொருளினும் பற்றில்லாத சுத்தனும் சுகஞான சொருபத்தில் நிலை யே றுடையவனு மெக்காலமும் புதுமை செய்திருப்பவனுமாய், அப் பொருள் வகைகளெல்லாவற்றினும் பொருந்திப் பிரபுவுமாயிருக்கிற சிவபிரானோ டயிக்கமாயிருக்கிற அவ்வியாபி கருவி கரணங்களோடு கூடிய தத்துவக் கூட்டத்தையும் ஆணவாதி மலங்களுடன் கூடப் போக்கடித்திருந்து மற்ற ஆன்மாக்கள் உடலைப் பெறுதற்குத் தான் சிருட்டி முதலிய திருத்தியங்களைப் பண்ணுவானோ பண்ணான்.

(வி - ரை.) ஓகாரம் - எதிர்மறை. (கூச)

[மேல், 'முடிந்தது முடித்தல்' என்னுந் தந்திரவுத்தியால் உணர்த்துகின்றார்.]

கலிவிருத்தம்

என்றுபிற வித்துய ரிறப்பல விசைத்தான்
குன்றவர் மடக்கொடி தனக்கருள் கொடுத்தான்
வென்றுபுல னைந்தினையும் வெய்யவினை நைய
நின்றமுனி யன்றுரைர நிர்க்குணா வினோதே.

(இ - ள்.) வெளி. (கூரு)

[மேற் சிவத்துதி யுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

மூரிவல் லானை முருக்கினனே!
முதிர்சடை சூடு முருக்கினனே!
பாரியோர் பாலுறப் பண்ணினனே!
பாடிய நான்மறைப் பண்ணினனே!
கூரிரு ளாடிய கொள்கையனே!
கோல்வளை யார்பலி கொள்கையனே!
காரிய காரண னானவனே!
கரிசறக் காயமுன் னானவனே.

(இ - ள்.) ஆங்காரத்தையும் வலியினையும் உடைய யானையின் தோலை யுரித்தவனே! முதிர்ந்த சடாபாரத்திற் பலாசப் பூமாலையைத் தரித்தவனே! பார்வதியாரை ஒருபாகத்தில் பொருந்த வைத்தவனே! நான்கு வேதங்களைப் பாடிய இசையையுடையவனே! மகா சங்கார காலத்தில் திருநடமே தொழிலாகச் செய்யுங் குணத்தலைமையுடையவனே! அழகிய வளையைத் தரித்த இருடிபத்தினிமாரிடம் பிச்சைக்கு

ஏற்குங் கையையுடையவனே! நாதமுதலிய காரியங்களுக்கு நிமித்த காரணனு யுள்ளவனே! ஆணவாதி தோஷங்களை யறும்படி தகிக்க முதன்மையையுடையவனே!

(வி - ரை.) கோலமென்றது கடைக்குறை. (௬அ)

[இதுவுமது]

என்வினை தன்னை யிறுத்தவனே!
ஏதுயி ரென்ன விறுத்தவனே!
முன்மலை வாரை முருக்கினனே!
முன்னினர் நெஞ்சு முருக்கினனே!
அன்னையு மத்தனு மற்றவனே!
அகமெனு மற்பனு மற்றவனே!
முன்னொரு வேள்வி முடித்தவனே!
முதிர்சடைக் கங்கை முடித்தவனே!

(இ - ள்.) யான் செய்த கன்மங்கள் எல்லாவற்றையும் போக்கினவனே! ஆன்மாவின் சொரூபம் யாதென்று விசாரிக்கும் அறிவுண்டாக்கினவனே! பிரமனும், மாலும் நானே கருத்தாவென்று மையலுற்றவிடத்தில் தழற் பிழம்பாய்த் தோன்றி யவர்கள் அஞ்ஞானத்தைப் போக்கினவனே! தன்னைத் தியானஞ்செய்தவர்கள் உள்ளத்தையு முருகப்பண்ணினவனே! மாதா, பிதா இல்லாதவனே! நானென்னும் அகங்காரத்தையுடைய புல்லியரும் உன்னையல்லாத பிரம விட்டுணுக்களே. தன்னை இகழ்ந்து செய்த தக்கன் யாகத்தை நாசஞ்செய்தவனே! முதிர்ந்த சடாபாரத்திலே கங்கையைத் தரித்தவனே!

(வி - ரை.) அற்பன்-மற்றவன் என்னு மொருமையைப் பன்மையாக்குக. (௬௯)

[கந்தன் துதி யுணர்த்துகின்றார்.]

எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

தமல மற்றிட நேசார் தாய்மனை
தனையர் மற்றையர் தாமா ரேயென
விமல வித்தக வீறார் வேறறு
விதுல சிற்கன தாதா வானவன்
கமலை நற்பதி வேதா வாதியர்
கழுமொ ழுக்கசி யாரூர் காய்வனி
யமல னற்புத ஞானே றேறிதந்
தருள்கு கற்கினி யாளா வாமரோ.

(இ - ள்.) தனக்கன்பானவர்க்குத் தங்களுடைய ஆணவமுதலிய குற்றம் போகவும், அன்பு பொருந்திய தாய் - பெண்டிர்-பிள்ளைகள்-மற்றுமுள்ள பந்துசனங்களை 'இவர்களார்? யாமார்?' என்னும் வெறுப்பு வரவும் மேலாகிய ஞானங் கொடுக்குந் தாதாவுமாய், இலக்குமி நாயகனாகிய திருமால் - பிரமன் முதலான தேவர்கள் வந்து 'விமலனே! வித்தகனே! ஒப்பில்லாதவனே!' என்று தோத்திரஞ் செய்து, தன் சிபாதத்தில் வணங்குவதனால் இரக்க மில்லாதவராகிய வித்தியுன்மாலி முதலியோர் முப்புரத்தினையும் எரித்த வில்லினை யுடையவனும், மலமில்லாதவனும், அதிசயத்தை யுடையவனும், இடபவாகனத்தி லேறிப் பவனி வருபவனுமாயிருக்கின்ற சிவபிரான் அளித்த பிள்ளையாருக்கு, யாமுன்போற் சனனசாகரத்தி லழுந்தாமலினி அடிமைப்படுவோம். (௪00)

[அகத்தியர் துதி யுணர்த்துகின்றார்.]

மருவி யுற்றனை நீயே நீயலை
 மருவு வித்தது மாதா வாருயி
ரிருள றுத்தனை நீயே நீயலை
 யெனவெ னக்கிய லீவா னேயவன்
மரவ முற்றிய வாசார் காரகின்
 மலிய நற்றவர் மாடே நீடிய
வருவ ரைப்பயி லானு மாதவ
 னருள கத்திய னூறு ரகமே.

(இ - ள்.) குங்குமமும் விளைந்து மணம் அமைந்த காரகிலும் நெருங்கி, நல்ல தபோதனர்களும் பக்கத்தில் நெருங்கி, அரிய பொதியிலில் நீங்காதிருக்கு மிக்க தவத்தினை யுடையவனும் - கிருபையை யுடையவனும் - முப்பத்தாறு தத்துவமே சரீரமாக வுடையவனுமாயிருக்கும் அகத்தியனே! இத் தேகத்திற் கிடப்பவனும் நீயேயோ நீயன்று. இத் தேகத்தை யுண்டாக்கினது மாதாவுமல்லள், உடலினாலுண்டாகிய ஆணவத்தை நீக்கினதும் நீயேயோ நீயல்லவென்னும் வாக்கியத்தை எனக்குத் தெரிவித்தவன்.

(வி-ரை.) நீயோ நீயல்லவென்று ஆன்மாவைக் கருதி வினவுவதனாற் கூட்டி முடிப்பான் கருத்தாவென்று கருதிற்று. ஆணமை-விட்டு நீங்காமை. (௪0௧)

எட்டாவது

சனனமரணவியல் முற்றிற்று.

ஒன்பதாவது

# சுவர்க்க நரக சேட வியல்.

[மேல் இவ்வோத் தென்னுதலிற்றோவெனின், ஒத்து நுதலியதூஉ மோத்தினது பெயருரைக்கவே விளங்கும். ஆயின், இவ்வோத் தென்ன பெயர்த்தோ வெனின், சுவர்க்க நரகசேட மனுபவித் தற்கு எடுக்குஞ் சரீரத்தைக் கூறிற்று; ஆகையாற் சுவர்க்க நரக சேட வியலென்னும் பெயர்த்து. முன்னை யியலிற் சனன மரண துக்கங்களைக் கூறிப் பூமியில் இருவினைக் கீடாகச் சுவர்க்கநரக சேடமாகிய சரீரங்களை யெடுக்கு மிலக்கணங் கூறினமையா லதன்பின் னிதனை வைத்தார். இதனுள் இத்தலைச் செய்யுளென் னுதலிற்றோவெனின், நல்வினை தீவினைகளைச் செய்தவர் உயர்ந்தசாதி தாழ்ந்தசாதியிலே தோன்று முறைமையைத் தொகுத் துணர்த்த னுதலிற்று.]

கலிவிருத்தம்

புண்ணியர் விண்ணவர் தம்புரி புக்கே
மண்மறை யோர்குல மாய்வரு மாறும்
பண்ணினர் தீவினை பாதல முற்றே
தண்ணிய ராகையு மின்றுசமைப்பாம்.

(இ - ள்.) அகத்தியமுனிவனே! புண்ணியத்தைச் செய்தவர் கள் சுவர்க்கலோகத்திற் சென்று, அங்குள்ள போகம் புசித்துத் தொலைந்தவாறே பூமியிற் பார்ப்பார் முதலிய நற்குலத்தில் வந்து பிறக்கு முறைமையையும், பாவத்தைச் செய்தவர்கள் நிரயத்தி லழுந்தி யாங்குள்ள துன்பங்களை யனுபவித்துத் தொலைந்தவாறே தாழ்ந்த குலத்தில் வந்து பிறக்கு முறைமையையு மிப்போ துனக்கு யாம் சொல்கின்றோ மதனைக் கேள்! (க)

[நிறுத்தமுறையானே புண்ணியஞ் செய்தவர் பூமியில் வந்து நல்ல குலத்திற் பிறந்து, சற்கன்மத்தை யடைந்து, மோக்ஷமடையு முறைமையை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

வேதக ஞெதிய வேதவி திக்கே
சாதகர் வானவர் தம்புரி புக்கே
மோதக ராயதன் வாழ்வு முடித்தே
வேதிய ராவர்கண் மேதினி மீதே.

(இ - ள்.) ஆன்மாக்களுக்கு அறிவை விளக்கச் சிவபிரானரு ளிச்செய்த வேதாகமத்தின் வழியே யனுட்டித்தவர்கள் சுவர்க்க லோகத்திற் சென்று சந்தோடத்தை யுடையவரா யாங்குள்ள போக ங்களை யனுபவித்திருந்து அப்போகந் தொலைந்தவாறே பூமியிற் பிராமணராய் வந்து பிறப்பார்கள்.

(வி - ரை.) மோதகம்-சந்தோடம். (உ)

முன்னைய நல்வினை வாதனை சூழத்
துன்னுவர் நூல்விதி யான தொடர்ந்தே
யென்னிலர் மண்மிசை நல்வா மீபத்
தன்னிக ரில்லிதன் றூனை தரித்தே.

(இ - ள்.) முற்சனனத்திற் செய்த புண்ணியத்தின் வாசனையா லிச்சனனத்தும் வேதாகமங்களை யோதி யதன் வழியை யறிந் தனுட் டித் தனக்கு நிகரில்லாத சிவபிரானுடைய விபூதி கண்டிகை முத லிய சைவசின்னங்களைத் தரித்துச் சிவார்ச்சனை செய்து பூமியில் எண்வகை ஐசுவரியத்தையு முடையவரா யிருப்பார்க ளாகையால், தண்பால்வந் திரப்பவர்க் கீவதற் கவர்களுக் கேதுதான் குறைவு.

(வி - ரை.) எண்வகை ஐசுவரியமாவன:- இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்பனவாம். (ந)

முற்றுவர் நல்வினை முற்றிய பின்னர்ப்
பற்றுவர் வானுப ரும்பதி பற்றித்
துற்றுவர் போகவி தம்பல துற்றிப்
பற்றுவர் பற்றற வீசன பாதம்.

(இ - ள்.) இவ்வாறு பூமியிற் சற்கன்மத்தையே செய்து கொண்டிருப்பார்கள். பின்னர் அப்புண்ணிய பரிபாகம் பிறந்தவாறே மேலான சிவலோகத்திற் சென்று நானாவிதமாகிய போகங்களைப் புசித்திருப்பார்கள். இவ்வாறதை அனுபவித்து அப்போகத்தில் வயி ராக்கியம் பிறந்தவாறே வேறொன்றிலும் விருப்பமற்றுச் சிவபிரா னுடைய சிபாதகமலங்களையே சேர்வார்கள். (ச)

[மேல், நிறுத்தமுறையானே பாவத்தைச் செய்தவர் நரகத்திற் கிடந் தழுந்தி மீண்டும் பூமியிற் பிறக்கும்போது தாங்கள் செய்த கன்மத்துக் கிடாகிய சரீரங்க ளெடுப்பா ரென்பதை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஈட்டினர் பாவ பேத மிரக்கமி லியம தூதர்
கூட்டிய நரக பேதக் குழிவிழுந் தழுங்கி யாழ்ந்து

விளங்குவதாய், எல்லாப் போகங்களுடனுங் கூடிய மனோவதிபுரி யென்னுங் கொடுமுடியில் பிரமா எழுந்தருளியிருப்பர். அந்த மனோவதியென்னும் புரிக்கு மேற்கே பதினாலாயிரம் யோசனை விரிவையு முயரத்தையு முடைத்தாய், எல்லா இரத்னங்களாலும் விளங்குவதாய், எல்லாப் போகங்களுடனும் வைகுந்தமென்னுங் கொடுமுடியில் மகாவிட்டுணு விருப்பர். அம் மனோவதிக் கீசானதிசையி லிருபதினாயிரம் யோசனை விரிவையு முயரத்தையு முடைத்தாய், வெள்ளிமயமாய் எசோவதியென்னும் பெயர்பெற்றிருக்குங் கொடுமுடியில் ஸ்ரீகண்ட பரமேச னெழுந்தருளியிருப்பன்.

(வி - ரை.) 'எசோவதி' எனினுஞ் சோதிகிரி யெனினு மொக்கும். அச் சிகரத்தைச் சூழ நந்தி முதலிய அட்டகணங்களுஞ் சூழ்ந்திருப்பாரென்க. (௩௪)

[மேருவைச் சுற்றிய திசை நான்கினு முள்ள மலை முதலியவற்றை நான்கு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

இத்தகைய தடவரையி னடிவாரத் தெல்லைதனி
லத்திரிதான் பூருவத்தின் மந்தரமொன் றழுந்தியுறு
மத்திரிதா னுபர்கந்த மாதனந்தென் றிசையமரு
மத்திரிதான் பச்சிமத்தின் விபுலமுறு மழகுறவே.

(இ - ள்.) இவ்வாறு கூறிய மகாமேருவின் அடிவாரம் நான்கு திக்கிலும் அம் மகாமேருவுக் குறுதிநிமித்தமாக விட்கம்பசயிலம் நாலுண்டு. அவையாவன:- கீழ்த்திசையி லைம்பதினாயிரம் யோசனை யுயரமான மந்தர பருவதஞ் சுவேதநிறமாய்ப் பூமிக்கு ளெண்ணாயிரம் யோசனையும், மேலே நாற்பத்தீராயிரம் யோசனை யுயரமு முடைத்தா யிருக்கும். அவ்வளவுடன் தென்றிசையிற் கனகமயமான கந்தமாதனகிரி நிற்கும். அவ்வளவுடன் பொருந்தி நீலநிறம்போன்று மேற்றிசையில் விபுலகிரி நிற்கும். (௩௫)

உத்தரத்திற் பாருசுவ வத்திரியொன் றுற்றழுந்தும்
வைத்தவரை முறையுறவே மரமொருநான் கமருமவை
யுத்தமத்த கதம்பமுக லுயர்நாவ லொளிர்போதி [ருளே.
மொய்த்துறுபத் திரமொளிரு முதுமரமென் மொழிப்பொ

(இ - ள்.) முற்கூறிய அளவுடன் வடதிசையில் மாதளைவித்து நிறம்போல பாருசுவகிரி நிற்கும். அக்கிரி நாலி லொவ்வொரு கிரியின் அடியகல மெண்ணாயிரம் யோசனையு மேலகலம் பதினாயிரம் யோசனை யுயரமுமா யிருக்கும். அம் மலை யுச்சிகளில் நாலு தருக்க ணிற்கும். அவையாவன: கிழக்குமுத லுத்தமமாகிய வுயர்ச்சியை

யுடைய கடம்பு, நாவல், அரசு, நெருங்கிப் பிரகாசத்தை யுடைத்தாய்த் தளிர்த்த ஆலமரம்.

(வி - ரை.) அவைகளி னுயர மொவ்வொன்றுக்கு ஆயிரம் யோசனை. அவைகளின் சாகைக ளைஞ்ஞூறு யோசனை யுயரம். பூக்கள் குடம்போலவும், பழம் யானைபோலவும் பழுத்துதிருமென்க. ()

குணதிசையி லருணமெனுங் குளநிலவுந் தடவரைக்கீழ்
மணமலியு மானதமுந் தென்றிசையின் வாய்த்துளது
தணமருவுஞ் சிதோதம் பச்சிமத்திற் றங்கியுறு
முணவினிய மாமடுவும் வடதிசையி னுற்றிடுமே.

(இ - ள்.) கிழக்கில்: மந்தரமலை யடிவாரத்தில் அருணமென்னுங் குளம் பொருந்தும். அதிற் கடப்பம்பழச் சாற்றினின்றும் ஆறுகள் பறப்பட்டுக் கீழ்திசையிற் பாயும். தென்றிசையில்: கந்தமாதன மலையடிவாரத்திற் கந்தமலிந்து விளங்கும் மானதசரசென்னுங் குளம் பொருந்தும். அதில் நாவற்பழச் சாறு விழுந்து தெற்கே மேருவைச் சூழப் பாயும். மேற்றிசையில்: விபுலமலை யடிவாரத்திற் குளிர்ச்சி பொருந்துகின்ற சிதோதமென்னுங் குளம் பொருந்தும். அதில் அரசமரம் பொருந்திநின்று பால்முதலிய பஞ்சதாரையாகப் பொருந்தி மேற்றிசையிற் பாயும். வடதிசையில்: பாருசுவமலை யடிவாரத்திற் புசித்தற் கினிதாகிய மகாமடுவென்னுங் குளம் பொருந்தும். அதில் ஆலமரத்தின் சாகையினின்று மூண்டாகிய பால், தயிர், நெய், தேன் முதலிய பொருந்தி வடதிசையிற் பாயும். (கூஎ)

சயித்திரக்காப் பூருவத்தி னடிவாரந் தனிற்றழைக்கு
விசித்திரநந் தனவனமுந் தென்றிசையின் விளங்கியிடும்
வசித்திடுநல் வைப்பிரச வனங்குடபான் மன்னியிடு
முதித்ததிரு தாக்கியமும் வடதிசையி லொடுங்கிடுமே.

(இ - ள்.) கிழக்குமலை யடிவாரத்திற் சயித்திரக்கா வென்னும் பெயரையுடைய நந்தனவனம் விளங்கும். தெற்கு மலையடிவாரத்தில் விசித்திரை யென்னும் நந்தனவனம் விளங்கும். மேற்கு மலையடிவாரத்தில் வசிக்கத் தகுந்த நல்ல வைப்பிராசை யென்னும் நந்தனவனம் பொருந்தும். வடக்கு மலையடிவாரத்தில் திருதாக்கிய மென்னும் நந்தனவனம் உண்டாம்.

(வி-ரை.) இப் பூந்தோப்புகளி னடுவே நான்கு ஓடைகளுண்டு. அவையாவன: கிழக்கு சயித்திரக்கா நடுவில் அனேகத்தாமரைப் பூவுட

னுங் கூடிய தாகமென்னும் ஓடையும், தெற்கில் விசித்திரக்கா நடுவில் அனேகங் குமுதோற்பலங்களுடன் கூடிய மானதசரசென் னும் ஓடையும், மேற்கு வைப்பிரச நடுவில் செந்தாமரைகளுடன் கூடிய விமலோதகமென்னும் ஓடையும், வடக்குத் திருதாக்கிய நடு வில் அநேக நீலோற்பலங்களுடன் கூடிய மனோரதமென்னும் ஓடை யும் என்க. இவை "வந்ததுகொண்டு வாராதது முடித்தல்" என்னுந் தந்திர வுத்தியாற் கூறியவாறென்க. (௩அ)

[முற்கூறிய நாவல் மரத்தின் தன்மையை யிரண்டு செய்யுளாலும் உணர்த்துகின்றார்.]

நறவனைய கனியுதிரு நன்னுவ லெக்நாளு
முறுதியுற வுயிர்க்கெல்லாந் தென்கிரியி லோங்குதலாற்
பெறுநவகண் டமும்பெரிய நாவலந்தி வெனும்பெயரை
மறுவறுமக் கனித்திநீர் வரையதனை வலம்வருமே.

(இ - ள்.) தெற்கு மலையில் நிற்கும் நாவல் எந்நாளுந் தேன் போன்ற இனிமையையுடைய பழம் சொரிந்து தன் சாற்றைப் பரு கின ஆன்மாக்களுக்கெல்லாம் பலமுண்டாக்கி நிற்கையால் நவ கண்டங்களு நாவலந்தீவெனப் பெயர்பெறும். குற்றமற்ற இனிமை யுடைய அக்கனியின் சாறு பொன்மயமாய் மேருவை வலமாகவந்து அந்நாவல் மூலத்திற் திரும்பவந் தடையும்.

(வி - ரை.) 'நன்னுவல்' எனச் சிறப்பித்தமையால் அதில் ஒவ் வொரு பழத்துக்குப் பதினெண்கலச்சாறு உண்டாயிருக்கு மென்க. அச்சாறு நாற்றிசையும் வளையப் பெருகுகையால் நாவலந்திவெனப் பெயர் பெற்றதென்க. 'மறுவறும்' என்பதனுல் அச்சாறு பொன் மய மென்பதனை யறிவித்து நின்றது. (௩௧)

மேருவினை வலமாகி மேவியிடு மந்நீரை
யாருமவர் கனகநிற மாவரயு தாயுளுறச்
சாரமொரு மூன்றுடனுந் தங்கியவா யிரந்தழைக்க
ஆருமுயிர் மற்றையவு முண்டதனை யொளியுறுமே.

(இ - ள்.) மகாமேருவை வலமாக வரும் நாவற்பழச்சாற்றை யருந்தினவர் எல்லோரும் பொன்னிறமாய்ப் பதின்மூவாயிரம் வய துடனே பொருந்தியிருப்பர். அவர்மட்டோ அல்ல. அதனைப் பானம் பண்ணினுல் ஊர்வன, பறப்பன, நடப்பன, தத்துவன, தவழ்வன, கொடி செடி முதலியவும் பொன்மயமா யிருக்கும். (௩0)

[அட்டகுல பருவதத்தின் தன்மைகளை யிரண்டு செய்யுளாலும் உணர்த்துகின்றார்.]

தடவரையின் றென்றிசையிற் றங்கியிடு மொருசயிலங்
கூடகடலைக் கூடவொரு தலைகூடக் குணகடலை
யிட்டமுடையவிதன் றென்பாலித்தகைத்தோர் வரையிசையுந்
திட்டமுறமுன் முறைதிகழு மிமையகிரி யதன்றென்பால்.

(இ - ள்.) மகாமேருவுக் கடுத்த தெற்குப் பதுமராக நிறம் போன்ற நிடதமலை கிழக்கு மேற்குஞ் சமுத்திரத்தையுற நூறாயிரம் யோசனை நீளமாயிருக்கும். அதற்குத் தெற்காகப் பொன்மயமான ஏமகூடமலை மேற்குங் கிழக்குஞ் சமுத்திரத்தையுறத் தொண்ணூ றாயிரம் யோசனை நீளமாயிருக்கும். அதற்குத்தெற்காகக்கடினமாய்ப் பனி நிறம்போன்ற இமயமலை எண்பதினாயிரம் யோசனை நீளமா யிருக்கும். (சக)

வடபாகத் தொருகிரிமுன் வகுத்தபடி வதியுமதன்
வடபாலு மொருகிரிமுன் வகுத்தபடி வதியுமதன்
வடபாலு மொருகிரிமுன் வகுத்தபடி வதியுமினிக்
குடபாலிற் குணபாலி லொவ்வொன்று குறுக்குறுமே.

(இ - ள்.) மேருவுக்கு வடக்கு இரத்ன நிறம்போன்ற நீலகிரி கிழக்கு மேற்குச் சமுத்திரத்தையுற நூறாயிரம் யோசனை நீளமா யிருக்கும். அந் நீலகிரிக்கு வடக்காகச் சந்திரப் பிரகாசம்போன்ற சுவேதகிரி கிழக்கு மேற்குச் சமுத்திரத்தையுறத் தொண்ணூறாயிரம் யோசனை நீளமாயிருக்கும். அச் சுவேதகிரிக்கு வடக்காகச் சந்திர காந்த நிறம்போன்ற சிருங்ககிரி யெண்பதினாயிரம் யோசனை நீளமா யிருக்கும். இனி, மகாமேருவுக்கு மேற்காக வடக்கில் நீலகிரியையுந் தெற்கில் நிடதமலையையுமுறத் தெற்கு வடக்காக நீலநிறமான கந்த மாதனமலை முப்பத்திநாலாயிரம் யோசனை நீளமாயிருக்கும். மேரு வுக்குக் கிழக்காக நீலகிரியையு நிடதமலையையுமுறத் தெற்கு வடக் காகப் பொன்னிறமான மாலியவானென்னுமலை முப்பத்திநாலாயிரம் யோசனை நீளமாயிருக்கும். (சஉ)

[நவகண்டத்துள் பாரத கண்டத்தின் தன்மையை ஆறு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அட்டகுல பருப்பதங்க ளமரவிடை நவகண்டம்
பட்டபடி பார்க்கவிம கிரித்தென்பாற் பாரதத்தை
யொட்டிமுத லுரைத்திடுவா மதனையொழிந் தனவெல்லாங்
கட்டமறு மமருலகத் திணையெனவே கருதுகவே.

(இ - ள்.) இவ்வாறு கூறிய அட்டகுல பருவதங்களினுடைய இடையிடையினுள்ள தேசங்களை நவகண்டமென்று அறிக! இமய மலைக்குத் தெற்காய்த் தென் சமுத்திரத்துக்கு வடக்காய் நடுவா யிருக்கிற பாரதகண்டத்தை முதலாகத் தொடுத்துச் சொல்வாம். அப் பாரதகண்ட மொன்றையு மொழிந்த எட்டுக் கண்டங்களுந் துக்க மின்றிச் சுகத்தை யுடைத்தாயிருக்கும். அது எவ்வாறெனில், தேவ லோகத்துக்குச் சமானமான போகங்களுடன் பொருந்துமெனக் கருதுக! (சக.)

பாரதமு நவதீவ பாகமுறு மவற்றுள்ளுஞ்
சீரியது குமரியெனுந் தீவதனிற் சிறந்திருப்ப
ராரியரா மந்தணரு மல்லாரு மருமறையின்
காரியமு முறுமதனி லின்னுமுள கழறிடுவாம்.

(இ - ள்.) அப் பாரதகண்டம் இந்திரதீவு முதலான வொன் பது தீவாகப் பிரியும். அவ்வொன்பது தீவினுள்ளுங் குமரித்தீவே சிறப்புடைத்து. அக் குமரித்தீவிற் பூச்சியராயிருக்கிற பிராமணரும், அவரல்லாத மற்றவர்களுஞ் சிறந்திருப்பார்கள். அதுவல்லாமல் அத் தீவில் வேதங்களின் காரியமான யாகாதிகளும் பொருந்தும். அது வல்லாமல் இன்னு முள்ளவற்றைச் சொல்வாம்.

(வி - ரை.) 'அந்தணரும்' என்கிற வும்மையா லொருவர்க்சொ ருவர் தாழ்ச்சியான அரசரும், வைசியரும், சூத்திரருமென்க. அல் லாதா ரென்பது அனுலோமர், பிரதிலோமர், விராத்தியர், அந்தரா ளரை யென்க. இதனை,

சூத்திரம்

பார்ப்பா ரரசர் வணிகர் வேளாளர் நாற்குலத்துவரூஉந் தங்கு ளிடையிடையினு, முயர்ந்த வாணினு மிழிந்த பெண்ணினும் வியந்த கூட்டத்தவ ரனுலோமர், இழிந்தவாணினு முயர்ந்த பெண்ணினும் பெயர்ந்த கூட்டத்தவர் பிரதிலோமர், அனுலோமர் குலத்தாணினு மவ்வழி பிரதிலோம குலப்பெண்ணினு முயர்ந்த கூட்டத்தாரே யந்தராளர், பிரதிலோம குலத்தாணினும் பின்னிலை யனுலோமகுலப் பெண்ணினும் வியந்த கூட்டத்தவரே விராத்தியராகும்.''

என்பதனலறிக.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே."

என்பதனல் இருக்குமுதலிய நான்கு வேதமும், மந்திரமுதலிய ஆறங்கமும், மனுமுதலிய பதினெட்டுத் தருமசாத்திரமும், காமிக

முதலிய இருபத்தெட்டு ஆகமங்களும், பிரமமுதலிய பதினெண் புராணமும், மகாபாரத மிதிகாச முதலியவும், நியாய வைசேடிக முதலிய சாத்திரங்களும் வழக்குமென்க. (சச)

கங்கைமுத னதிபலவுங் காசிமுதற் பதிபலவும்
பொங்குமயேந் திரம்பொதிய முதன்மலையும் பொருந்தியிடு
மங்கதற்கு யோசனையோ ராயிர முண் டெனவறிக
வெங்கொடிய மிலேச்சரிட மெட்டினுமெண் ணாயிரமே.

(இ - ள்.) கங்கை முதலிய அறுபத்து நான்குகோடி தீர்த்தமும், காசிமுதலிய ஆயிரங்கோடி புண்ணிய தலங்களும், சிறந்த மயேந்திரமலை பொதியமலை முதலிய சத்தகுல பருவதங்களும் பொருந்தும் அக்குமரித் தீவினுடைய விஸ்தாரம் ஆயிரம்யோசனை யுண்டெனக. மற்ற இந்திரதீவு முதலிய எட்டுத் தீவுகளும் ஒவ்வொரு தீவுக்காயிரம் யோசனையாக எண்ணாயிரம் யோசனை பொருந்தும். அவைகளிற் கொடுமைகளையுடைய மிலேச்ச ரிருப்பர்.

(வி - ரை.) இவ்வாறு கூறிய அறுபத்து நான்குகோடி தீர்த்தங்களுள் ஐஞ்னூறு தீர்த்தஞ் சிறப்புடையன. ஆயிரங்கோடி புண்ணிய தலங்களுள் அறுபத்தெட்டு தலஞ் சிறப்புடையன. (சடு)

இந்திரமே சேருகமே தாமிரமே யெழிற்கபத்தி
சந்துமலி நாகமதே சவுமியமே காந்திருவ
மந்தமலி வாருணமே யெனவெட்டு மதித்திடுக
விந்தவள வெனைநிலத்துங் கிரிவிரிவீ ராயிரமே.

(இ - ள்.) இந்திரத்தீவு, சேருகத்தீவு, தாமிரத்தீவு, அழகையுடைய கபத்தித்தீவு, நாகத்தீவு, சவுமியத்தீவு, காந்திருவத்தீவு, வருணத்தீவு ஆக எட்டுத்தீவுமுண்டெனக. இப்பாரத கண்டத்தளவு ஒன்பதினாயிரமும், ஒழிந்த இரமிய கண்டமுதலிய எட்டுக்கும் ஒவ்வொன்றுக்குஒன்பதினாயிரம் யோசனை விரிவெனக. இமயமலைமுதற்சிருங்கிகிரி யீறாகக் கிரி ஆறுக்கு மொவ்வொன்றுக் குயரமு மகலமு மிரண்டாயிரம் யோசனையும், கந்தமாதனம்-மாலியவா னிவ்விரண்டு கிரிக்கு முயரமும் அகலமு மாயிரம் யோசனையும் உண்டு.

(வி - ரை.) இமயமலை முதலிய கிரிகளின் உயர்வு அகலத்தை ஆண்டுக்கூறு தீண்டுக்கூறிய தென்னெனின், "தலைதடுமாற்றம்" என்னுந் தந்திர உத்தியாமெனக. (சசு)

உன்னதத்தென் மயேந்திரமே யுபர்மலயஞ் சையகிரி
வின்னவினுஞ் சத்திகமே யிருக்கருமுயர் விந்தியமே

பன்னுபுகழ் மிகுபாரி யாத்திரமே யெனப்பகர்ந்த
வின்னகிரி யேழுமுதற் குமரிதலத் திசைந்தனவே.

(இ - ள்.) தெற்குமுதல் வடக்கீறாக மிகவும் உயரத்தைப் பொருந்திய மயேந்திரகிரி, மிகவும் உயரத்தைப் பொருந்திய பொதிய மலை, சையகிரி, சுத்திகாசலம், இருக்ககிரி, உயர்ந்த விந்தியமலை, மிகுந்த புகழுடையதென்று சொல்லப்பட்ட பாரியாத்திர பருவதம், இவ்வேழுங் குமரித்தீவிற் பொருந்தும். (சஎ)

அங்கமெதிர் நிரனிறையாற் சமாக்கியமு மணிமலையுஞ்
சங்கமுந்தண் குமுதமுநல் வாரமெனுந் தலந்தானுந்
துங்கமலி பொதித்தென்பாற் றொடர்ந்தவடி வாரத்தி
னங்கனக விலங்கையுமேழ் வரைச்சார லடித்தேசம்.

(இ - ள்.) வடக்கே தொடுத்து எதிர் நிரனிறையாகப் பாரி யாத்திர மலையடிவாரத்தில் அங்கமென்னுந் தேசமும், விந்தியகிரி யடிவாரத்திற் சமாக்கியமென்னுந் தேசமும், இருக்க பருவதத்தின் அடிவாரத்தில் அணிமலையென்னுந்தேசமும், சுத்திகாசலத் தடிவார த்திற் சங்கமென்னுந் தேசமும், சையமலை யடிவாரத்தில் தண்மை பொருந்திய குமுதமென்னுந் தேசமும், மலயமலை யடிவாரத்தில் நன்மையினையுடைய வாரகமென்னுந் தேசமும், மிகவும் உயர்ந்திருக் கிற பொதியமலைக்குத் தெற்காகிய மயேந்திரகிரியி னடிவாரத் தில் அழகிய பொன்மயமாகிய இலங்கையென்னுந் தேசமும் பொருந் தும்.

(வி - ரை.) கனகமய்மான இலங்கையென்னுந் தேசம் இரத்ன பூமியுடன்கூடி யைஞ்ஞூறு யோசனை சமுத்திரத்துக் குட்புகுந் திரு க்குமென்க. அவ்விலங்கை யொழிந்த தேசமாறும் உபத்தியெனப் பெறும். (சஅ)

[கயிலையின் சிறப்பு இரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

இமையகிரி வடகுணபா லிமையவர்க டொழுதேத்த
வுமையுடனே பசுபதிதா னுறைவதொரு கிரிமிதையிற்
றமையுணர்ந்த தபோதனருந் தங்குவரச் சயிலத்திற்
கமையுடையா ரதன்பெயரைக் கயிலையெனக் கழறுவரே.

(இ - ள்.) மேற்கூறிய இமயமலைக் கீசானத்திற் றேவர்கள் வணங்கி யேத்தும்படி பார்வதியுடன் பசுபதியாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற மலையினிடத்து அதிற் றம்மையறி ந்த தபோதனர்கள் தங்கியிருப்பார்கள். அம் மலையின் பெயரைப்

பொறுமையையுடைய பெரியோர்கள் கயிலைமலையென்று சொல்லு வார்கள். (சக)

ஆகமங்க ளனைத்தினையு மருமறைக ளொருநான்கு
மோகமற முனிவர்க்கு மொழிந்தருள வொழிந்தனவு
மாகருபோ மாலயனு மலர்தூவித் தலைவணங்க
வேகனிறை யதன்மிசையு மிருக்கவிரும் பினனினிதே.

(இ - ள்.) இமயத்துக்கு வடகிழக்காகக் கிம்புருட கண்டத்தில் வெள்ளிமயமாய்ப் பலவகையான சிகரங்களுட னிருக்கும் அக் கயிலையிலும் தேவர்களும் பிரமனும் விட்டுணுவும் மலரா லருச்சித்துத் தலையால் வணங்க ஏகனாகிய சிவபெருமான் இனிதாக எழுந்தருளியிருக்கும். அது எனெனிற், சனகர் முதலிய முனிவர்களுக்குக் காமிகமுதலான இருபத்தெட்டு ஆகமங்களையும், இருக்கு முதலிய நான்கு வேதங்களையு மற்றவைகளையு முணர்த்தி யாணவாதி மலங்களைப் போக்கிச் சிவசாயுச்சியத்தை யடைவிக்கும்பொருட்டு. ()

[நவகண்டங்களின் பெயர்களும் அவைகளிருக்கு மிடங்களு மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

இமகிரிக்குந் தென்கடற்கு மிடைப்பாகம் பாரதமே
யிமகிரியிற் றேமகிரி யிடைப்பாகங் கிம்புருட
மமைநிலவு நிடதகிரித் தென்பாக மரிவருட
மிமையவரு மிருந்தபெரு வரைச்சார லிளாவிருதம்.

(இ-ள்.) தென் சமுத்திரத்துக்கும் இமையமலைக்கும் நடுப் பாரத கண்டம். இமையமலைக்கு வடக்கு ஏமகிரிக்குத் தெற்குக் கிம்புருட கண்டம். ஏமகிரிக்கு வடக்கு நிடதகிரிக்குத் தெற்குப் பொறுமையைப் பெற்ற அரிவருட கண்டம். மகாமேருவைச் சூழ்ந்த தேவர்களிருக்குமிடம் இளாவிருத கண்டம் எனப் பெயர்பெறும்.

(வி-ரை.) 'இமையவரும்' என்ற வும்மையாற் சித்தர்-கந்தருவர்-இராக்கதர்-வேதாளகணங்கள் முதலிய கொள்க. (இக)

நீலகிரி வடதேச மிரமியமே யெனநினைக
பாலனைய கிரிவடபா லிரணியமே யெனப்பகர்க
சீலமுளார் சிருங்ககிரி வடபாலைத் தென்பாலை
யோலமிடு முத்திக்குக் குருவெனவே யுன்னுகவே.

(இ - ள்.) மேருவுக்கு வடக்காயிருக்கிற நீலகிரிக்குஞ் சுவேத கிரிக்கும் நடு இரமியகண்டம். சுவேதகிரிக்கு வடக்குச் சிருங்க கிரிக்குத் தெற்கு இரணியகண்டம். சிருங்ககிரிக்கு ஆரவாரத்தை யுடைய வடகடலுக்குத் தெற்கு நற்குணமே சுபாவமாக வுடையவர்க ளிருக்குங் குருகண்டம் என்க. (கஉ)

குடகடற்குக் கீழ்க்கேது மாலமெனக் குறித்திடுக
மிடனுடைய வியன்கந்த மாதனத்தின் மேற்கதுதா
னிடமுடைய மாலியவா னெனுங்கிரிக்குக் கீழ்பாற்கீழ்க்
கடலினுக்கு மேல்பாகம் பத்திரமாக் கருதுகவே.

(இ - ள்.) மேற்சமுத்திரத்துக்குக் கிழக்குப் பலமுள்ள கந்த மாதனகிரிக்கு மேற்கு கேதுமாலகண்டம். விரிவையுடைய மாலிய வான்கிரிக்குக் கிழக்குக் கீழ்ச்சமுத்திரத்துக்கு மேற்குப் பத்திராசுவ கண்டம் எனப் பெயர்பெறும். (கங)

[பாரதகண்ட மொழிந்த எட்டுக் கண்டத் திருப்பவருக் குணவு
முதலியவற்றை யெட்டுச் செய்யுளா
லுணர்த்துகின்றார்.]

உண்டிடுவர் கருங்குவளை யுருவமதி பனையரி
கண்டமதிற் கலந்திருப்பர் காலமுமோ ராயுகமா
கண்டகியின் கனியுணவு கருங்குவளை நிறமாயு
வுண்டயுத முபர்கேது மாலத்தி லுறைவார்க்கே.

(இ - ள்.) அப் பத்திராசுவ கண்டத்தி லிருப்பவர்கள் செய்தற் பூவைப் புசித்துச் சந்திரப் பிரகாசம்போன்ற நிறம் பெற்றுப் பதினா யிரம் வயதுடையரா யிருப்பார்கள். கேதுமால கண்டத்தி லிருக்கிற வர்கள் வருக்கைப் பலாப்பழம் புசித்து நீலநிறமுடையராய்ப் பதினாயி ரம் வயதுடையவரா யிருப்பார்கள்.

(வி - ரை.) 'அரிகண்டம்' எனினும் பத்திராசுவகண்ட மெனி னு மொக்கும். (கச)

ஆயுங்காற் குருகண்டத் தமர்வார்க டமக்கெல்லா
மாயுவுமூ வாயிரமு மயுதமும்வே ணடிபகனியுண்
டேயுமுடற் பச்சைநிறஞ் சிறுவருள ரிருவரவ [வார்.
ராயுதரத் தொருபொழுதி லுமிணைப்பெண் ணெனவமர்

(இ - ள்.) குருகண்டத்தி லிருக்கிறவர்கள் சொரூபத்தை விசா ரித்தாற் பதின்மூவாயிரம் வயதுடையவராய் எப்பொழுதும் எவ்வண

ராய்ப் பொற்கொன்றை நிறமுடையாராய்த் தம் கருத்துக்கு வேண்டிய மரத்தின் பழம் புசித்திருப்பார்கள். அவர்களுக்கொரு பொழுதுக்குள்ளே கருப்பந் தரித்து ஆண் பெண்ணென இரண்டு பிள்ளைகள் பிறந்திருப்பார்கள். (௫௫)

அத்தகைய குருகண்ட வடபாக மதுதன்னிற்
சித்தரொடு முனிவாருஞ் சாரணருஞ் செறிந்திருப்பர்
துய்ப்பதுவு மூலபலஞ் சோமனெனத் துளங்கொளியா
ருத்தமத்த சந்திரதீ வெனும்பெயரு முளததற்கே.

(இ - ள்.) முற்கூறிய குருகண்டத்தின் வடக்குச் சமுத்திரத்துக்குள்ளே யெண்ணூயிரம் யோசனையுள்ள தீவிற் சித்தர்களு முனிவர்களுந் திகம்பரர்களு நெருங்கி யிருப்பார்கள். அவர்கள் புசிப்பது கிழங்குங் கனியும். அவர்கள் சந்திரனைப்போலும் விளங்கும் பிரகாசமுடையார். அத்தீவு உத்தமமான சந்திரதீவெனப் பெயர்பெறும். ()

ஆயுவயு தத்துடன்மூ வாயிரமு மவர்க்குண்டு
வாயுதிசை தனிற்பத்தி ராகரமே வாய்த்தபெயர்
தேயமுமுண் டதிற்றிகழ்வார் சித்தருநன் முனிகணமு
மாயுமியற் சாரணருங் கனிமூல மருந்துவரே.

(இ - ள்.) அச்சந்திர தீவி லிருப்பவர்க்குப் பதின்மூவாயிரம் வயதுண்டு. முற்கூறிய குருகண்டத்தின் வாயுதிக்கில் வடக்குச் சமுத்திரத்துக்குள்ளே நாலாயிரம் யோசனைக் கப்புறத்திற் பதினாயிரம்யோசனை விரிவையுடைய பத்திராகர தேசமென்றொரு தீவுண்டு. அதிற் சித்தர்களு மிருடிகளு மியலே யாராயும் திகம்பரர்களுந் திவ்யமான மரத்தின் கனிகளையுங் கிழங்குகளையும் புசித்துக்கொண்டிருப்பார்கள். (௫௭)

செங்கமல நிறமுடையர் திகழ்மூவா யிரவயுதந்
தங்கிடுவ ரிரணியத்திற் றங்குநர்நல் விருசபல
நுங்கிடுவர் மதியனைய நிறமுடையர் நுவலுங்கா
லங்கயுத மைஞ்ஞூறீ ராயிரமு மவர்கிலேயே.

(இ - ள்.) முற்கூறிய பத்திராகரத் தீவி லிருக்கிறவர்கள் செந்தாமரை போன்ற நிறமுடையராய்ப் பதின்மூவாயிரம் வயதும் உடையரா யிருப்பார்கள். இரணிய கண்டத்தி லிருக்கிறவர்கள் நல்ல நாவுமிச்சம்பழம் புசித்திருப்பார்கள். அவர்களுடைய நிறத்தைச்

சொல்லுமிடத்துச் சந்திரப்பிரகாசம்போன் றிருப்பார்கள். அவர்க ளுக்குப் பன்னீராயிரத்தைஞ்ஞூறு வயதுண்டு. (௫௮)

உற்றிடுவார்க் கிரமியத்தி லொளிகரிய குவளைநிறந்
துற்றுவதா லின்கனியே தொடர்வருட மவர்க்கயுத
மற்றுமிரண் டாயிரமுண் டிரிவருட மருவினர்க்குப்
பற்றியமெய் யொளிவெள்ளி பானமுந்தீங் கரும்பாமே.

(இ - ள்.) இரமிய கண்டத்தி லிருக்கிறவர்களுக்கு நெய்தற் பூப்போன்ற நிறம்; அவர்களுக்குப் புசிப்பு ஆலம்பழம்; அவர்களுக்கு வயது பன்னீராயிரம். இரிவருட கண்டத்தில் வசிக்கு மவர்களுக் குப் பன்னீராயிரம் வயது; அவர்கள் தேகத்திற் பிரகாசம் வெள்ளி நிறம்போன்றிருக்கும்; அவர்கள் புசிப்பு இனிய கருப்பஞ்சாறும். ()

பொன்னுருவர் கிம்புருடர் புசிப்பிறலிப் புன்கனியே
மன்னுமயு தாயுவுளர் மனக்கவலை தனையில்லார்
கின்னமிலர் நரைதிரையுங் கிளருடலிற் பிணிபிணையு
மின்னமுறை மற்றையவேழ் கண்டத்து மென்னுகவே.

(இ - ள்.) கிம்புருடகண்டத்தி லிருக்கிறவர்கள் பொன்னிற மாயிருப்பார்கள்; அவர்கள் புசிப்பு இத்திக்கனி; அவர்களுக்கு நிலை பெற்ற வயது பதினாயிரம்; அவர்கள் மனக்கவலையுமின்றி, அத்தி யான்மிக முதலிய துக்கத்திரையங்களும் நரைதிரையு மின்றி மிக வுஞ் சந்தோஷத்துடன் கூடியிருப்பார்கள். அக் கிம்புருட கண்டத் துக்குற்றபடி மற்றை யேழுகண்டத்தி லிருப்பவர்களுக்கும் பொரு ந்துமெனக் கருதுக. (௬௦)

ஈங்குரைத்த விருநான்கு கண்டத்து ளெல்லோர்க்கு
மோங்கியிடுங் கிருதயுகம் போலொழிந்த யுகமெல்லா
நீங்கரிய நன்மையினை நிறுத்தியிடு நிறையறிவு
தாங்கிடுவ ரவருடலி னாமாதி தன்னையுமே.

(இ - ள்.) வெளி. (௬௧)

[பாரதகண்டத்தி லிருக்கிறவர்கள் தன்மையை இரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அறிவுவலி யாயுளுரு வாகார மனைவெல்லாந்
செறியுமுகத் தினுக்கிசையப் பாரதத்துட் டிகழ்வார்கட்
குறுமுணவு புலத்துழலா லுழுவதுமின் றியுமுண்டு
பெறுபல்முந் தைவிகமா தியமூன்றிற் பிறழாவே.

(இ - ள்.) பாரத கண்டத்தி லிருக்கிறவர்களுக்கு அறிவும் பல முஞ் சரீரமுங் கிருதயுகம்போலாம்; மற்றை யுகங்கட்குத் தக்கபடி பேதமாகப் பொருந்தும்; அவர்கட்கு வயலுழவு முதலிய தொழில் களினு லுண்டாகியதே புசிப்பு; அதுவல்லாமல் உழுது விரையாமற் றானே யுண்டாகிய குளச்செந்நெல், புல்லரிசி, காட்டிலுள்ள காய் கனி முதலிய புசிப்புகளு முண்டு; அவர்கள் அத்தியாத்மிகம், ஆதி தைவிகம், ஆதிபௌதிகம் எனக் கூறப்பட்ட துக்கத்திரையங்களையு மொழியாம லனுபவிப்பார்கள்.

(வி - ரை.) துக்கத்திரையமாவன-தேவர்களால் வருந்துன்பம் ஆதிதைவிகம். பிருதிவி முதலிய பூதங்களால் வருந் துன்பம் ஆதி பௌதிகம். அரசர், மிருகம், பசு, பக்ஷி முதலியவற்றால் வருந் துன் பம் அத்தியாத்மிகம். என்னை,

நேரிசை வெண்பா

"கருவிற் றுயர்செனிக்குங் காலைத் துயர்மெய்
திரைநரைமூப் பிற்றிளைத்துச் செத்து—நரகத்தின்
ஆழுந் துயர்புவியை யாளின்ப மாதியெலாம்
ஊழுதவு தைவிகமென் றோர்." (க)

"பனியா லிடியாற் படர்வா டையினுந்
துனிதென் றலினுஞ் சுகமுந்—தனையனைய
நீரினு மின்பின் னலுநெருப்பி னுந்துயரின்
போரிற் பவுதிக மாகும்." (உ)

"தன்னாற் பிறராற் றனக்குவருந் தீங்குநல
மின்னு விலங்காவந் தேளெறும்பு—சென்முதனீ
ரட்டையல வன்முதலை மீனரவ மாதியினுங்
கட்டமுமிங் காத்மிகமே காண்." (ங) (௬௨)

மற்றையநற் றலமெவற்றும் வாழ்வார்கள் பாரதத்தைப்
பற்றிவினை நலம்பயின்றோர் முற்பலத்தி லெனப்பகர்க
முற்றியுற வினைபலவு முளைத்ததல மிதுவதனுன்
முற்றவினை யனைவருமிவ் விடமதனுண் முயல்வாரே.

(இ - ள்.) பாரதகண்டங் கன்மபூமி யாகையான் முற்சனனங் களி லியற்றிய கன்மபலத்தை யாண்டனுபவித்து அவ்வக் கன்ம பலத்தால் கிம்புருட முதலிய எட்டுக்கண்டங்களி லுண்டாகிய போக வகைகளை யாண்டாண்டு புசித்திருப்பார்களென்க. ஒரு கருமஞ் செய்தவன் அவ்வத்தலத்திலே யிருந்து அவ்வப் பலத்தைப் புசியா

மல் வேறோர் தலத்திலே யப்பலம் புசிக்குமாறுபோல இப் பாரத கண்டத்திலே கன்ம பரிபாகமானவாறே மற்றைக் கண்டங்களை யடைந்திருந்து போகங்களைப் புசித்துத் தொலைந்தவாறே பின்பு இப் பாரத கண்டத்தை வந்தடைந்து எல்லாருஞ் சற்கன்மங்களையே பண்ணுவார்கள். (சுஉ)

[நவகண்டத்தின் யோசனையளவை யுணர்த்துகின்றார்.]

தென்றிசைப்பா ரதமாதி சிறந்தபெரு வரைவடபாற்
குன்றமொரு மூன்றினுக்கு மப்பாலைக் குருவந்தத்
தோன்றிவிடும் யோசனையு மொருநூறு யிரமுண்டு
நின்றகுணக் கொடுகுடக்கு மிவ்வளவே நிகழ்த்துங்கால்.

(இ - ள்.) தெற்குப் பாரதகண்டமுதல் மேருவுக்கு வடக்கா யுள்ள நீலகிரி முதலிய மூன்று கிரிக்கு மப்பாலிருக்கிற குருகண்ட மீறாகப் பொருந்தப்பட்ட யோசனை நூறாயிரம் என்க. மற்றைக் கிழக்கு மேற்கு நூறாயிரம் யோசனை விரிவுண்டு.

(வி - ரை.) அவை வருமாறு :—பாரதகண்டம்: ஒன்பதினாயிரம்; கிம்புருடகண்டம்: ஒன்பதினாயிரம்; அரிவருடகண்டம்: ஒன்பதினாயிரம்; இளாவிரதகண்டம்: பதினெண்ணாயிரம்; மகாமேரு: பதினாயிரம; இரமியகண்டம்: ஒன்பதினாயிரம்; இரணியகண்டம்: ஒன்பதினாயிரம்; குருகண்டம்: ஒன்பதினாயிரம்; சிருங்ககிரி முதலியமலை யீறாக மலை யாறுக்கும் பன்னீராயிரம்; ஆகத் தெற்கு வடக்குத் தொகையானே நூறாயிரம் யோசனை யென்க. பத்திராசுவகண்டம்: முப்பத்தீராயிரம்; மாலியவான்கிரி: ஆயிரம்; இளாவிரதகண்டம்: பதினெண்ணாயிரம்; மகாமேரு: பதினாறாயிரம்; மேற்குக் கந்தமாதனகிரி: ஆயிரம்; கேதுமாலகண்டம்: முப்பத்தீராயிரம்; ஆகக் கிழக்கு மேற்கும் நூறாயிரம் யோசனை யுண்டென்க. (சுச)

[நவகண்டத்தின் பெயர்க் காரணம் உணர்த்துகின்றார்.]

மனுகுலத்துள் வருமங்கி னேத்திரனு மன்னவன்றன்
றனையர்பா தனாமுதலோர் சவுரியரோர் பதின்மருளர்
இனையவர்க ளாண்டமையா லெய்தியபே ரெனவிவற்றை
நினைகபா தனுக்குரிமை பாரதமே நிகழ்த்துங்கால்.

(இ - ள்.) இக் நாவலந்தீவில் மனுகுலத்தில் வந்த அரசர் அக்கினி னேத்திரன். அவனுக்குப் பாதன், கிம்புருடன், அரி, இளாவிரதன், பத்திராசு, கேதுமாலி, இரமியன், இரணியன், குரு என வீரப்பாட்டையுடைய புத்திர ரொன்பதின்மருளர். இக் கண்டங்களை

யொவ்வொருவராக வொன்பதின்மரும் பிரித்தாண்டமையா லவ ரவர்க பெயரால் அக்கண்டங்களின் பெயராயிற்று. அதில் பரத னென்னுமரச னிக்கண்டத்தை யுரிமையாக ஆண்டமையால் பாரத கண்டமெனப் பெயராயிற்று.

(வி - ரை.) ஏகாரம்-தேற்றம். அது என்போலெனிற், பாண் டியன் சோழன் ஆண்ட தேசத்தைப் பாண்டிமண்டலஞ் சோழமண் டல மென்றாற்போ லென்க. சுவாயம்புவென்னு மனுவின் புதல் வன் பிரியாவிரதன். அப் பிரியாவிரதன் புத்திரர்கள் பதின்மருளர். அப் பதின்மருள் மேதா, அக்கினி, வாகு என்னும் மூவரும் வயி ராக்கியத்தாலே சந்நியாசமா யிருந்தார்கள். மற்ற அக்கினிநேத்தி ரன் முதலிய எழுவருஞ் சம்புத்தீவு முதலிய எழுதீவையு மொவ் வொருவராகப் பிரித்தாண்டார்களென்க. (சுடு)

[எழு தீவினளவும், எழு கடலினளவு நான்கு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

என்ணுகயோ சனையிலக்க மென்றிணைய நாவலந்தீ
வெண்ணிடுக விதன்புடைசூ ழுவரிவிரி விப்படியென்
றெண்ணிடுக விதற்கப்பாற் சாகமிரண் டிலக்கமெனக்
கண்ணிடுக வதற்கப்பாற் பாற்கடலு மக்கணக்கால்.

(இ - ள்.) இந் நாவலந்தீவை நூறாயிரம் யோசனை நீளமென்று கருதுக! இந் நாவலந்தீவைச் சூழ்ந்த வுப்புக்கடல் நூறாயிரம் யோ சனை யென்று கருதுக! இவ் வுப்புச் சமுத்திரத்துக்கப்பாற் சாகத் தீவு இரண்டு நூறாயிரம் யோசனையாம். அச் சாகத்தீவுக்கப்பாற் பாற்கட லிரண்டுநூறாயிரம் யோசனை தூரமாம்.

(வி - ரை.) முற்காலத்திற் பருவதங்க ளெல்லாஞ் சிறகுடனே கூடப் பறந்து ஒரு தேசத்திற் போயிருக்கிறபொழுது அதிலிருக் கிற பிராணிகளுக்கு மிகவும் பீடை வருகையால் தேவர்களெல்லா ருந் துக்கித்து இந்திரனுக்கு முறையிட, அப்பொழுது இந்திரன் அப் பருவதங்களின் சிறகைச் சேதித்தபோது பயப்பட்டு இலவண சமுத்திரத்திற், பன்னிரண்டு கிரிகள் பறந்துவந்து கிழக்கு முதலிய திக்குகளில் விழுந்தன. அவையாவன:—கிழக்குச் சமுத்திரத்தில்: இடபகிரி, துந்துபிகிரி, தூமிரகிரி என்னு மூன்றும்; தெற்குச் சமுத்திரத்தில்: சக்கரகிரி, மைநாககிரி, வலாககிரி யென்னு மூன் றும்; மேலைச் சமுத்திரத்தில்: சோககிரி, வராககிரி, நந்தனகிரி என்னு மூன்றும்; வடக்குச் சமுத்திரத்தில்: கங்ககிரி, சந்திரகிரி, துரோண கிரி என மூன்றுமாகப் பன்னிரண்டுமென்க. அவற்றிற் சக்கரகிரி

க்கு மைநாக்கிரிக்கும் நடுவே குதிரைமுகம்போன்ற வடவாமுகாக்கினியெப்போதுஞ் சொலித்துக்கொண்டு நிற்குமென்க. இரண்டாவதாகிய சாகத்தீவுக்கு அரசன் மேதாதிதி. அவ்வரசனுக்குப் புத்திரர்க ளெழுவருளர். அவர்கள் யாரெனில்: சாந்தன், அபையன், சிரமுகன், அனந்தன், சிவன், க்ஷேமன், துருவனென எழுவரையும் அபிடேகம் பண்ணி யவரவர் பெயரா லத்தீவை யேழாகப் பிரித்துக் கொடுத்தான். அச் சாகத்தீவிற் கொடுமேதகம், சந்திரசம்சயகம், நாரதம், மந்தாம், சோமகம், இடபம், வைப்பிராசம் என்ற மலைகளேழுமுண்டு. அம் மலைகளினின்றும் அகிருதை முதலிய நதிகளேழும் புறப்பட்டுப் பாற்கடலிற்போய் விழும். அத் தீவிலிருக்கிறவர்க்குப் புசிப்புப் பால். அவர்கள் நிறஞ் சந்திரப்பிரபையாம். அத்தீவில் சாகமென்னு மரம் நிற்கையாற் சாகத்தீவெனப் பெயர் பெற்றதென்க. அப் பாற்கடலில் வடக்கே சுவேதத்தீவில் நடுவே வைகுந்தம். அதில் அநேகங் கோபுரமும் பிராகாரமு முண்டு. அவ்விடத்திற் கமலையாருடன் கூடித் திருமா லாதிசேடன்மேல் சயனிப்பரென்க. (௬௬)

எண்ணிடுக வதற்கப்பாற் குசைத்தலநான் கிலக்கமென
வெண்ணிடுக வதற்கப்பாற் றதியுததி யீரிலக்கத்
தெண்ணிடுக வதற்கப்பாற் கிரவுஞ்ச மெட்டிலக்க
மெண்ணிடுக வதற்கப்பா னெய்க்கடலு மெட்டெனவே.

(இ - ள்.) முற்கூறிய பாற்கடலுக் கப்பாற் குசைத்தீவு நான்கு நூறுயிரம் யோசனை; அக் குசைத்தீவுக் கப்பாற் றயிர்க்கடல் நான்கு நூறுயிரம் யோசனை. அத் தயிர்க்கடலுக்கப்பாற் கிரவுஞ்சத்தீவு எட்டு நூறுயிரம் யோசனை. அக் கிரவுஞ்சத்தீவுக் கப்பால் நெய்க்கடலு மெட்டு நூறுயிரம் யோசனை விரிவாம்.

(வி - ரை.) அக் குசைத்தீவிற் பொன்மயமான குசை நிற்கையால் அப்பெயர் பெற்றது. அக் குசைத்தீவுக்கு அரசன் வசு. அவ்வசுவென்னு மரசனுக்குப் புத்திரர்க ளெழுவர். அவர் யாரெனில்: சுவேதன், லோகிதன், சீமுதன், அரிதன், விபுத்தியுதன், மானசன், சுப்பிரதன் என்க. அவ்வெழுவர்களும் பிரித்தாண்டமையால் அவரவர் பெயரால் அத்தீவு எழுபிரிவாயிற்று. அவ்வேழு தீவுக்கும் ஏழு கிரியுண்டு. அவை: குமுதகிரி, ஊதகிரி, வராககிரி, துரோணகிரி, கங்கைகிரி, மயிடகிரி, குமுதவானகிரி என்க. அக்கிரிகளினின்றுஞ் சுவேததோயநதி முதலிய எழு நதிகளும் புறப்பட்டுத் தயிர்க்கடலிற் போய் விழும். அதிலிருப்பவர்க்குப் புசிப்புத் தயிர். அதுவல்லாமல் பலங்க ளமிர்த மிவற்றையும் புசித்திருப்பார்கள். இனி அக்கிரவுஞ்சத்

தீவுக்கு அரசன் சோதிமான். அவ்வரசனுக்கு எழு புத்திரர்களுண்டு அவர் யாரெனில்: உற்பிதன், வேணு, மண்டலன், இந்தகாரகன் திருதிமான், சுப்பிரபாகன், கபிலன் என்க. அவ்வேழு புதல்வர்களும் பிரித்தாண்டமையால், அவரவர் பெயரால் அத்தீவு எழுபிரிவாயிற்று. அவ்வேழு தீவுக்கு மேழு கிரியுண்டு. அவை: வித்துருமகிரி, எமநாமகிரி, திருதிகிரி, புட்பதந்தகிரி, குசலகிரி, லோகிதகிரி, மந்தாகிரி யென்க. அவ்வேழு கிரிகளினின்றும் மகிபாபாவென்னு நதிகள் முதலிய எழும் புறப்பட்டு நெய்க்கடலிற் போய்விழும். அத்தீவி லிருப்பவர்கள் நெய்மயமாயிருக்கிற அமிர்தபல சாரங்களைப் புசித் திருப்பார்கள். அவர்களுக்கு நிற முற்கூறியதே. அக் கிரவுஞ்சத்தீவில் எமநாமகிரியில் கிரவுஞ்சனென்னு மசுரன் சிலநாள் ஆண்டுகொண் டிருந்து குமாரசுவாமியுடன் போர்செய்து மரிக்கையால் அது கிர வுஞ்சமெனப் பெயர்பெற்றதென்க. (கஎ)

எண்ணிடுக வதற்கப்பாற் சான்மலியெண் ணிரண்டிலக்க
மெண்ணிடுக வதற்கப்பா லிக்கிரத முற்படியே
யெண்ணிடுக வதற்கப்பாற் கோமேத மெண்ணென்கெ
னெண்ணிடுக வதற்கப்பான் மதுக்கடலு முனேயெண்ணல்.

(இ - ள்.) முற்கூறிய நெய்க்கடலுக்கு அப்பாற் சான்மலித் தீவு பதினறு நூறுயிரம் யோசனே. அச் சான்மலித் தீவுக்கப்பாற் கருப்பஞ்சாற்றுக்கடல் பதினறு நூறுயிரம் யோசனே. அக் கருப்பஞ் சாற்றுக் கடலுக்கப்பாற் கோமேதத்தீவு முப்பத்திரண்டு நூறுயிரம் யோசனே. அக் கோமேதத் தீவுக்கப்பாற் சுரைக்கடல் முப்பத்திரண்டு நூறுயிரம் யோசனே விரிவு.

(வி - ரை.) அச்சான்மலித் தீவுக்கு அரசன் கந்தமான். அவ் வரசனுக்குப் புத்திரர்கள் எழுவர். அவர் யாவரெனில்: நமோதுர்க் கன், தனுசுமான், பாகவன், அந்தகாரன், முனி, துந்துமி, குசலன் என்க. அவ்வெழுவர்களும் பிரித்தாண்டமையால் அவரவர் பெயரால் அத்தீவு எழு பிரிவாயிற்று. அவற்றிற் கிரிக ளேழாவன: கிரவுஞ்ச கிரி, வாமனகிரி, அந்தகாரகிரி, திவாகிருதகிரி, தீவிபிந்துகிரி, புண் டரீககிரி, துந்துபிகிரியென்க. அவைகளினின்றும் புண்டரீகமுதலிய நதிகளேழும் புறப்பட்டுக் கருப்பஞ்சாற்றுக் கடலிற்போய் விழும். அதிலிருப்பவர்களுக்குப் புசிப்பு கருப்பஞ்சாறு. அத்தீவில் ஆயிரம் யோசனே யுயரத்தையு முடைத்தாய்க் கனகமயமான ஆகித்தப்பிரபை போன்றிருக்கும் இலவமா நிற்கையாற் சான்மலித் தீவெனப் பெயர் பெற்றதென்க.

இனி கோமேதகத்தீவுக்கு அரசன் அவ்வியவாகனன். அவ்வரசனுக்குப் புத்திரர்கள் எழுவர். அவர் யாவரெனில்: சலதன், குமாரன், சரித்தகன், குமுதன், கந்தனன், மகாமத்திரன், சுகுமாரன் என்க. அவ்வெழுவர்களும் பிரித்தாண்டமையால் அவரவர் பெயரால் அத்தீவு எழு பிரிவாயிற்று. அவற்றிற் கிரிகள் எழாவன: கேசரகிரி, சேடககிரி, சாதவதகிரி, அம்பிகிரி, கெயோபகிரி, மேககிரி, சிங்ககிரியென்க. அவைகளினின்றுங் கபத்திமான் முதலிய எழு நதிகள் புறப்பட்டு மறுக்கடலிற் போய்விழும். அத்தீவில் இருப்பவர்களுக்குப் புசிப்புச் சுவாதுபலங்கள்.

கோமேதகத்தீவு எனப் பெயர் பெற்றது யாதெனில், மனுகுலத்திற் கோபதியென்னும் பெயரையுடைய அரசன் கோசலனென்னும் பெயரையுடைய யாகநிமித்தமாக இந்திரனுடைய யாகத்துக் கதிபதியா யிருக்கிற பிருகு இருடியை வரிக்கையால், கௌதமர் 'இந்திரனுடைய யாகத்துக்கு வந்திருக்கும் இவரை வரிக்கலாமோ?' என்று அவ்வரசனைக் கோபத்தாற் சபிக்க, அவ்வரசனும் அவ் யாக நிமித்தம் வந்திருக்கிற பசுக்களும் நாசத்தை யடைந்து அப் பசுக்களுடைய நிணம் இத்தீவை மறைக்கையால் இதற்குக் கோமேதத்தீவெனப் பெயராயிற்று. (கூஅ)

என்னுகமோ சனையெட்டெட் டிலக்கமென வதற்கப்பா
லண்ணியபுட் கரணிதலத் தகலத்தை யதற்கப்பா
லண்ணியசுத் தோதகத்தி னகலமுமுன் னறைந்தபடி
திண்ணியமால் வரையுமினி யிவற்றினுக்குத் தெரிப்பாமே.

(இ - ள்.) முற்கூறிய சுரைக்கடலுக் கப்பாற் புட்கரணி தலத்தகலத்தை யறுபத்துநான்கு நூறாயிரம் யோசனையெனக் கருதுக! அப் புட்கரணித் தீவுக்கு அப்பால் நன்னீர்க் கடலின் அகலம் அறுபத்து நான்கு நூறாயிரம் யோசனை. சாகமுதலிய தீவிற் கடினமாய்ப் பருத்திருக்கு மலைகளைத் தொகுத்துச் சொல்வாம்.

(வி - ரை.) அப் புட்கரணித் தீவுக்கு அரசன் அசன். அவ்வரசனுக்குப் புத்திரர்கள் இருவர். அவர் யாரெனில்: தாக்கியன், மத்தியனென்க. அவ்விருவரும் பிரித்து ஆண்டமையால் அவரவர் பெயரால் அத்தீவு இரண்டு பிரிவாயிற்று. அவற்றிற் கிரிகள் இரண்டாவன: மந்தரகிரி, உத்தரகிரி யென்க. அக்கிரிகள் இரண்டும் ஐம்பது யோசனை யுயரமும், இருபத்தைந்து யோசனை விரிவுமா யிருக்குமென்க. (கூகூ)

[சாகத்தீவு முதலிய தீவின் மலைகளினதளவை உணர்த்துகின்றார்.]

சாற்றியிடுஞ் சாகமுத லைந்தினுக்குந் தடவரையு
மூற்றமிகு மெவ்வேழுன் மொருகிரிசக் கரம்போல
மாற்றறவே புட்கரணி தலத்தைவல மாய்வதியுந்
தேற்றுததி முடிவிடத்துந் திகழுமொரு வரையதுபோல்.

(இ-ள்.) சாகத்தீவுமுதலிய வைந்துதீவினும் ஒவ்வொன்றுக்கு எவ்வேழாக முப்பத்தைந்து மலைகளுண்டு. அதுவல்லாமல் புட்கரணித் தீவிலிருக்கும் ஒப்பற்ற மானதகிரி அத்தீவைச் சக்கரம்போ லிடைவிடாமல் வலமாகச் சூழ்ந்திருக்கும். அதுவல்லாமல் சுத்தோதக சமுத்திரத்தைச் சூழ இடைவிடாமல் சக்கரவாளகிரி விளங்கும்.

(வி - ரை.) 'ஐந்தினுக்கும்' என்ற வும்மையாற் புட்கரணித் தீவில் மலைகள் இரண்டிருக்கின்றன. ஆகத் தீவு ஆறுக்குக் குல மலைகள் முப்பத்தேழென்க. 'தடவரையும்' என்ற வும்மையாற் சாக முதலிய ஐந்து தீவினுள்ளு முப்பத்தைந்து நதிகளும் உண்டென்க. புட்கரணித் தீவிலிருக்கு மானதகிரியிற் கிழக்குமுதலிய நான்கு திக்கினு மூலகபாலர் நால்வர்க்கு நான்கு புரியுண்டு. அவை: இந்திரனுக்கு விசுவோகசானு புரியும், இயமனுக்குச் சங்யமனி புரியும், வருணனுக்குச் சுத்தவதி புரியும், சோமனுக்கு விபாவதி புரியுமென்க. தேவபூசை நிமித்தமாகச் சொன்னமயமான தாமரைப்பூ அத்தீவின்க ணுண்டாயிருக்கையால் அத்தீவு புட்கரணித் தீவெனப் பெயர் பெற்றது. மலைகளையும் நதிகளையு மீண்டுக் கூறியிருக்க, ஆண்டுக் கூறிய தென்னையெனின், ஈண்டாசிரியர் தொகுத்தமையால் ஆண்டு "ஒப்பின் முடித்தல்" என்னுந் தந்திர வுத்தியாற் கூறியதென்க. ()

[சாகமுதலிய தீவிலிருப்பவர்கள் தன்மையை உணர்த்துகின்றார்.]

சாகமுத லிருமூன்றிற் றங்குநர்க டமக்கெல்லாஞ்
சோகமிலை யெந்நாளுந் துய்த்திருப்பர் சுகமவர்தம்
மாகமதி னரையுமிலைத் திரையுமயு தாயுவுளர்
மோகமிலர் கலியுகத்துங் கிம்புருடர் முறைபெறுவார்.

(இ - ள்.) சாகத்தீவுமுத லாறுதீவினு மிருப்பவர்கள், சம்புத்தீவினுட் குமரிகண்டத்தி லிருப்பவர்களைப்போல் எப்பொழுதுஞ் சுகதுக்க முறாமல் சுகவாசியாய் நரை திரை மூப்பில்லாமல் நித்திய யௌவனமுடையாராய்ப் பதினாயிரம் வயதுடையரா யிருப்பார்கள். அதுவல்லாமல் இக் கலியுகத்து மோகமில்லாதவராய்க் கிம்புருட கண்டத்தி லிருப்பவர்களுக்கு ஒத்திருப்பார்கள். (எக)

[பூலோகத்தைத் தொகுத்துணர்த்துகின்றார்.]

எழுதீவு மெழுகடலு மீழமய மெனுநிலனுந்
தழல்போலு மொளியிப்பாற் றமபப்பாற் றகுமலையுங்
குழுவாய பேரிருளு மதற்கப்பாற் குரைகடலு
மழகாய வண்டகடா காந்தமும்பூ தலமாமே.

(இ - ள்.) சம்புத்தீவு முதலிய எழு தீவும், இலவணசமுத்திர முதலிய எழு கடலும், பொன்மயமான பூமியும், அக்கினியைப் போலு மொளி முற்பாகத்திலும் இருள் பிற்பாகத்திலு முடைய லோகாலோக்கியமென்னும் பெயர் பெற்ற சக்கரவாளகிரியும், அந்தகாரபூமியும், ஆர்க்கின்ற பெரும்புறக்கடலும், அண்டகடாக முடிவும் ஆகிய இவையெல்லாம் பூலோகமெனப்பெறும். (எஉ)

[சக்கரவாளகிரியின் றன்மையை யுணர்த்துகின்றார்.]

இசைத்தவிதத் திருளொருபா
லொளியொருபா லேய்ந்தகிரி
வசிப்பர்முதற் பாகத்தின்
வடிவியக்க ரிராக்கதரும்
பசுத்தவிராக் கதர்தாம்பை
சாசர்திசைப் பாலகரு
மிசைப்பயிலும் விண்ணவர்பொன்
னிலத்துவிளை யாடுவரே.

(இ - ள்.) இவ்வாறு சொல்லப்பட்ட வொளி யொருபாலும் இருளொருபாலு மிருக்கிற சக்கரவாளகிரியில் வடிவையுடைய இயக்கரும், சந்திரனும், பசுமைநிறத்தையுடைய அரக்கரும், பசாசகளும், அட்டதிக்குப் பாலகர்களும், மேலேயிருக்கின்ற தேவர்களும் வாசஞ் செய்வர். அதுவல்லாமல் முற்புறமாகிய கனகமயமான பூமியினிழிந்து சஞ்சரித்து விளையாடிப் பின்பு தங்கடங்க ளெல்லையை யடைந்திருப்பார்கள். (எ௩)

[சக்கரவாளகிரிக் கப்புறத்து இருட்பூமியிலிருப்பாரை யுணர்த்துகின்றார்.]

விதித்தவுரை மரணபலால் விபரீத முறவிதிக்கு
வதைத்தவர்க டமைத்தாமே மையலுற வதிவார்கள்
புதைத்தவிரு ளுலகத்துட் பொருளல்லாப் புல்லியரே
கதத்துமருந் துயரத்துந் தம்முடலைக் களைவாரே.

(இ-ள்.) சிவாகமத்திற் சொல்லியபடி மிருந்த சிவகாரியங் குருகாரியஞ் சங்கமகாரியமாகத் தான் றன்னுடைய தேகவெறுப்பால் தான் புராணாதிகளிற் சொல்லிய பிருகுப் பிரபாதமாதல், கங்கை முதலிய தீர்த்தத்திலாதல் தேகம் விடுதலன்றிச் சாத்திரத்துக்கு விரோதமாகத் தம்முடைய வுடலைத் தாமே விட்டவர்க ளிருட் பூமியாகிய உலகத்தின் மயக்கத்தைப் பொருந்திக் கிடப்பார்கள். ஆதலால், இப்படிப்பட்ட மரணமாகாதென் றறியாமற் கோபத்தினாலும் வியாதிமுதலிய பீடைகளினாலும் வலிய உயிரை விட்டவர்கள் ஒரு பொருளிலுஞ் சேராத கீழ்மக்களாவார்கள். (எச)

[அண்டகடாகமுதல் மகாமேரு கடுவரையிலும் ஐம்பதுகோடி யோசனை தூரம் என்பதை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அழகாய கடாகத்துக் களவுகன மொருகோடி
யெழுநூறு யிரத்துடனே யிருபதுநூ றாயிரத்தைத்
தழுவியுறு மொருகோடி சமுத்திரநா யகத்தளவு
குழுவிருளு மேழைஞ்சுக் கோடியினுங் கூறிடுவாம்.

(இ - ள்.) அழகிய அண்டகடாகவோட்டுக் கனமொருகோடி யோசனை. பெரும்புறக்கடலி னகலங் கோடியே யிருபத்தேழு நூறாயிரம் யோசனை. முற்கூறிய அந்தகார பூமியினகல முப்பத் தைந்து கோடியோசனை. அதுவல்லாமல் இன்னுமதனுடைய அள வையைச் சொல்வாம். (எடு)

இருபதுநூ றாயிரத்தி னொன்றான மிவற்றுடனே
வருவதுதா னாற்பதினா யிரமெனவே மதித்திடுக
விருளொருபா லொளியொருபா லிசைந்தபெரு வரைக்கயுத
மொருபஃது கோடியுறுங் கனகமய வொளிநிலனே.

(இ - ள்.) முற்கூறிய அந்தகார பூமியினளவு முப்பத்தைந்து கோடியுடன் பத்தொன்பது நூறாயிரத்து நாற்பதினாயிரம் யோசனை யுண்டென்க. ஒருபாற் பிரகாசமாயும் ஒருபா லிருளாய் மிருக்கிற பெருமையையுடைய சக்கரவாளகிரி பதினாயிரம் யோசனை விரிவை யுடையதாயிருக்கும். முற்கூறிய கனகபூமி பத்துக்கோடி யோசனை விரிவாம்.

(வி - ரை.) அச் சக்கரவாளகிரி நூறாயிரம் யோசனை யுயரத்தை யுடைத்தா யொருபாற் சூரியன் சஞ்சரித்தலாலும், ஒருபாற் சஞ்சரி யாமையாலு மொருபா லொளியும், ஒருபால் இருளுமாயிற்று.

மண்ணினு மண்டத்துக்கு நடுவே சூரியன் சஞ்சரித்தலால் அவ னுக்கு மார்த்தாண்டனென்னும் பெயராயிற்று. அக்கிரியி லட்டதிக் குப் பாலகரிருந்து தத்தந் திக்கைக் காத்துக்கொண்டிருப்பார்கள். ()

எழுநூறு யிரத்துடனே யிருபதுநூ றுயிரத்தைத்
தழுவியுறு மொருகோடி சத்தசமுத் திரவிரிவு
மெழுநிலமு மைம்பதினு யிரங்குறைய வவ்வளவே
குழுமியுறும் பஞ்சாசத் கோடிபெருங் குன்றிறுவாய்.

(இ - ள்.) முற்கூறிய சத்தசமுத்திரங்களின் விரிவு கோடியே யிருபத்தேழுநூறுயிரம் யோசனை. சம்புத்தீவில் மகாமேரு முதலா கத் தெற்கேழுதீவுங் கோடியே யிருபத்தாறு நூறுயிரத்து ஐம்பதி னுயிரம் யோசனையுண்டென்க. மகாமேரு முதலாகக் கடாகமிறுகத் தொகுத்தறியுமிடத் தைம்பதுகோடி யோசனை விரிவைப் பொருந் தும்.

(வி - ரை.) அதன் வகை: சத்தசமுத்திரமுஞ் சத்தத்தீவுமாக இரண்டுகோடியே யைம்பத்து மூன்று நூறுயிரத் தைம்பதினுயிரம். அதற்குப் புறம்பே கனகமயமான பூமி பத்துக்கோடி. அதற்குப் புறம்பே சக்கரவாளகிரி பதினுயிரம். அதற்குப் புறம்பே யிரு ளுலக முப்பத்தைந்து கோடியே பத்தொன்பது நூறுயிரத்து நாற் பதினுயிரம். அதற்குப் புறம்பே பெரும்புறக்கடல் கோடியே யிரு பத்தெழு நூறுயிரம். அதற்குப் புறம்பே அண்டகடாகங் கோடி; ஆக மகாமேரு நடுநின்றுந் தெற்குப்பாதி ஐம்பதுகோடி யோசனை விரிவுஞ்சரி; மற்றைத் திக்கினுங் காண்க. (எஎ)

[அளவுக்கோர் புறனடை யுணர்த்துகின்றார்.]

தரைத்தலத்துக் கீழ்த்தலங்கள் பேதமுறச் சாற்றியிடுந்
தரைத்தலத்து மேற்றலமுந் தவறுரையா சாத்திரமுந்
தரைத்தலத்தும் பேதமுறச் சாற்றியிடுஞ் சாற்றிடினு
விருத்தமிலைச் சிருட்டிதொறும் பேதமுற விளைதலினல்.

(இ - ள்.) இப் பூமிக்குக் கீழான நரக புவனங்களை யாகமங்க ளிற் பேதமாகக் கூறும். பூமிக்கு மேற்றலங்களையும் பேதித்துக் கூறும். ஆனு லொருபடித் தல்லாமல் பலவாகப் பேதித்துச் சாத்தி ரஞ் சொல்லுமோ வெனிற், சிவபிரான் சருவஞ்ஞ னுகையாற் சாத் திரங்கள் பொய் சொல்லாது. பூலோகத்தினிடத்தும் பேதமாகக் கூறும். ஈசர னெவ்வொரு சிருட்டிகாலங்களி லாகமங்களைப் பேதி த்துக் கூறினுலுங் கடைத்தொகை யளவொத்திருக்கு மாகையால்

அந்நூற்கு மிந்நூற்கும் விரோதமில்லை. ஆதலால் "மாறுகொளக் கூறல்" என்னுங் குற்றமில்லை.

(வி - ரை.) பேதம் யாதெனில், கீழ்முதலடுக்கில் நரகம் பதின் மூன்று. இரண்டாமடுக்கு ஒன்றுக்குப் பத்து. மூன்றாமடுக்கு ஒன்றுக்கு ஒன்பது. ஆக அடுக்கு மூன்றுக்கும் நரகம் மூப்பத்திரண்டு. அதில் ரௌரவம், கும்பீபாகம், அவீசி இம் மூன்று நரகமும் இராசாதிராச நரகம். இதிலொன்றைச் சூழ்ந்த வுபநரகம் ஒன்றுக்கொன் றெவ்வேழாக நரக மிருபத்தொன்று. நீக்கி நரக மிருபத்தொன்பது மொவ்வொன்றை மும்மூன்றாகச் சூழ்ந்த வுபநரகம் எண்பத்தேழு. ஆக நரகம் நூற்று நாற்பதென்று ஆகமங்களிற் பேதித்துக் கூறியவா றுணர்க. (எஅ)

[அண்டங்க ளளவில்லை யென்பதனை யுவமை முகத்தா லுணர்த்துகின்றார்.]

எண்ணரிய வாருயிர்க ளண்டமுமிப் படிதானே
எண்ணரிய வெனுமமல னியலெனின்மற் றோரியவி
னெண்ணியவ ளவிடுத லென்னையெனில் வினைவிதத்தாற்
பண்ணிடுவ னண்டவிதஞ் சிருட்டிதொறும் பலபடியால்.

(இ - ள்.) எப்படி ஆன்மாக்க ளளவிறந்த கோடி யுண்டோ அப்படியே இவ்வண்டவகையு மளவிறந்த கோடியென்க. மலமில் லாத சிவபிரா னருளிச்செய்த திவ்யாகமங்களு மளவிறந்தன. ஆகையா லளவிடுதற்கரிது. ஆனால், அவ னருளிச்செய்த திவ்யாகமங்களிற் காமிகம், பதார்த்தம், யோகசம் இவைகள் நூறுயிரஞ் சுலோக மென்று அளவிட்டுக் கூறுத லென்னையோவெனிற், கேட்கிறவர்க ளுடைய புத்தி தாரதன்மியத்துக் கீடாகப் பெருகவுஞ் சிறுகவுங் கூறினான். அவர்களுக்குப் புத்தி பெருத்துஞ் சிறுத்து மிருப்பான் ஏனெனில், ஆன்மாக்கள் செய்த கன்மானுகுணமாக அவரவர் புத்தி யை யேறக்குறைச்சலாகப் பிரகாசிப்பிப்பன். அதுபோலச் சிருட்டி தோறும் பலபல விதமாக அண்டங்களை யருளிச்செய்வான். (எகூ)

[இந்நூல், இவ்வாகமத்துட் சேர்ந்ததென்பதனை யுணர்த்துகின்றார்.]

ஏகனருள் சிவதருமோத் தரமெனுநா லெண்ணுங்கா
லாகமத்துட் சருமேவாத்தத் துபபேத மதனுலே
யாகமத்துட் படியிதனு எருகிவரு மெனவறிக
ஆகமத்தின் படிமற்றை யியலுள்ளு மடைந்திடுமே.

(இ - ள்.) தனக்கொப் பொருவருமில்லாத சிவபிரா னருளிச் செய்தசிவதருமோத்தரம், மூலாகமமோ உபாகமமோவெனின், மூலாகமத்தி லிருபத்தைந்தாமாகமமாகிய சருவோத்தமென்னுமாகமத்தில், ஈசானம்-சிவதன்மம்-சிவதருமோத்தரம்-திவ்யப்புரோக்தம்-குபேராக்கியம் எனப்பிரிந்த பேதமைந்துள், இச் சிவதருமோத்தரமும் உபாகமமாகையாலே மற்றாகமத்திற் கூறிய பொருள்களு மிதனுளருகி வருமென்க. ஆதலாலிது மிகைபடக் கூறலென்னுங் குற்றமன்று. அதுவல்லாமல் சிவஞானயோக வியலினும் பரிகார வியலினுங் கலந்தும் வரும். (அ0)

[இனிப் புவலோகமுதல் மேல் அண்டகடாகம் வரையுள்ள
உலகங்களும், அவற்றினளவு முதலியனவும் பத்துச்
செய்யுளா லுணர்த்துகின்றார்.]

திரைத்தலமு முனிவரனே! தகைபெறவே தொகையாக்கி
யுரைத்தனமேற் புவலோக முதலாய வுலகினையுந்
தரித்திடுக தொகைசெய்தே சாற்றிடுவார் தவறறவே
விரித்தவுரை விளம்புமவர் வினைவிரைய வீட்டிடவே.

(இ - ள்.) முனிவனே! பூலோகத்தின் சொருபத்தை முறையாகத் தொகுத்துச் சொன்னோம். மேற் புவலோக முதலிய வுலகங்களை யைம்பதுகோடி யளவிற் குறையாமற் றொகுத்துச் சொல்வாமதனையறிக. இவ்வாறு தொகுத்துக் கூறும் அதைக் குற்றமில்லாமல் யாதொருவர் விரித்துக் கூறுவ ரவர்கள் வினை விரைவில் நீங்கிப் போம்படி சொல்வாம். (அக)

கலிவிருத்தம்

தரைக்கு மேற்புவ லோக மதுதனி
லருக்கன் சோம னெனுமிவ ராதிய
ரிருப்பர் தத்தம் பலத்தினை பெய்தியே
பரித்த நீளம் பதினைந் திலக்கமே.

(இ - ள்.) இப் பூமிக்குமேற் புவலோகம். அப் புவலோகத்தில் சூரியன் சந்திரன் ஆதியர் தத்தம் பதங்களிற் சஞ்சரித்திருப்பார்கள். இவரைத் தரிக்கப்பட்ட புவலோகம் பதினைந்துநூறாயிரம் யோசனையுயரமுண்டு.

(வி - ரை.) சஞ்சரித்த லெத்தன்மை யெனில், சூரியன் பதத்துக்குக் கீழாகப் பத்துவாயுவும், ஏழு மேகங்களுங் கூடிச் சஞ்சரிக்கும் வகையாவன:—விதனுவான், ரசேதகன், அக்கினிப்பிரசேதக—

செசனி, அவுத்தன், வச்சிராங்கதன், வயித்தியுதன், இரைவதன், சங்வர்த்தன், விசங்வர்த்தன் என வாயுக்கள் பத்து. இவைகளுக்கு வியாபாரமாவன:—

விதன்னுவான் என்னும் வாயு: பூமிக்குமேலே பதினுயிரம் யோசனை யளவாகச் சஞ்சரித்து, ஓஷதிகளுக்குப் பலங்களையு முண் டாக்கிக், கழுகுமுதலிய பறவைகள் பறப்பதற் காதாரமா யிருக்கும்.

பிரசேதன் என்னும் வாயு: அதற்கு மேலாகப் பதினுயிரம் யோசனை யளவாகச் சஞ்சரித்து, விருக்ஷங்களையும் பயிர்களையும் அவ் வக்காலங்களுக் கிடாக வேதனையும் பண்ணி முறிக்கும்.

அக்கினிப்பிரசேதன் என்னும் வாயு: பதினுயிரம் யோசனை யளவாக வியாபித்து, முற்கூறிய மரங்களையும் பயிர்களையு முலர்த்தி, வீட்டையுஞ் சுட்டுச் சமுத்திர சலத்தினு லதைச் சமிப்பிக்கும். இம் மூன்று வாயு: மேகங்களைப் பொருந்தாமற் றுனே சஞ்சரிக்கும்.

செசனியென்னும் வாயு: சத்துகனென்னு மேகத்துடனே பொருந்தி, மீன் ஆமை தவளை முதலியவெல்லாம் துயருறப் பொல்லா மழையைப் பொழியும்.

அவுத்தன் என்னும் வாயு: ரோதகனென்னு மேகத்துடனே பொருந்திப் பதினுயிரம் யோசனை யளவாக வியாபித்து, விடமாகிய மழையைப் பொழிந்து அதனுல் ஆன்மாக்களை நாசஞ்செய்யும்.

வச்சிராங்கதன் என்னும் வாயு: உபலகனென்னும்மேகத்தைப் பொருந்தி, இரத்தம்-ஆலாங்கட்டி-கற்கள் இவற்றைப் பொழியும்.

வயித்தியுதன் என்னும் வாயு: வயித்தியுதனென்னும் மேகத் த்தைப் பொருந்திப், பதினுயிரம் யோசனை யளவாக மேலே சஞ்சரி த்து, இடி மின் முதலியவற்றை யுண்டாக்கும்.

இரைவதன் என்னும் வாயு: புட்டிவதனென்னு மேகத்தைப் பொருந்திப், பதினுயிரம் யோசனையளவு சஞ்சரித்து, ஆன்மாக்களுக் குபயோகமாகிய நல்ல மழையைப் பொழியும்.

சங்வாதன் என்னும் வாயு: விரோதமென்னும் மேகத்தைப் பொருந்திப், பதினுயிரம் யோசனையளவு வியாபித்து, வியாதியை யுண்டாக்குகிற சலத்தைப் பொழியும்.

விசங்வாதன் என்னும் வாயு: குரோதமென்னும் மேகத்தைப் பொருந்தி, மேற் பதினுயிரம் யோசனையளவு சஞ்சரித்து, ஆன்மாக்க

னுக்கு யுத்தத்தாலும் வியாதிகளாலுஞ் சஞ்சரிக்கிற மழையாகப் பொழியும்.

ஆக வாயு பத்து. மேகமேழும் பூமிக்குமேலே யொன்றுக்கொன்று பதினாயிரம் யோசனை யளவாக மேன்மேல் சூரியபத மளவாகச் சஞ்சரிக்கும். அம்மேக மேழையு மொவ்வொரு மேகத்தை முப்பதினாயிரம் கோடி மேகஞ் சூழ்ந்து சேவித்திருக்கும். விதன்னுவான் முதலிய வொன்பது வாயுக்கள் பதத்திலு மடைவே யிருப்பார்கள். யாவரெனில்: சித்தர்களும், சத்தமாதர்களும், சித்தசாரணரும், நாராசஞ்சங்கமுதலிய ஆயுத தேவதைகளும், அயிராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபமென்னும் அட்டகஜங்களும், பக்ஷி ராசனுகிய கருடனும், ஆகாசகங்கையும், தரும சொரூபமாயிருக்கிற இடபதேவரும், தக்ஷப்பிரசாபதியுமென்க. பத்தாம் வாயுவாகிய விசங்வர்த்தனில் ஆதித்தர் பன்னிருவர், அசுவனிதேவ ரிருவர், உருத்திரர் பதினொருவர், எண்வகை வசுக்களாவார், ஆகிய முப்பத்து மூவரும் வசித்திருப்பார்கள்.

ஆதித்தர் பன்னிருவராவார்: வைகர்த்தனன், விபச்சுரன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, உலோகப்பிரகாசன், உலோகசாக்ஷி, திரிவிக்கிரமன், ஆதித்தியன், சூரியன், அங்குமாலி, திவாகரன் என்க.

உருத்திரர்கள் பதினொருவராவார்: மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசையன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் என்க.

அட்டவசுக்களாவார்: அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் என்க. இதனை

"நால்வே றியற்கைப் பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்"

என்புழி நச்சினார்க்கினியர் கூறுதலானு முணர்க. (அஉ)

ஓரி லக்க மருக்க னுலகமே
லோரி லக்க முடுபதி லோகமே
லோரி லக்க முடுக்க ளுலகமே
லீரி லக்கம் புதனுல கேயுமே.

(இ - ள்.) முற்கூறிய பத்தாம் வாயுவில் நூறாயிரம் யோசனையுயரத்தில் யாகமயமா யிருக்கிற வோராழியையும், எழிசைமயமாயிருக்கிற ஏழு பரிகளையும், நாகங்களான வடத்தையும், அருண

ஞனை தேர்ப்பாகனையும் பெற்று, அமிர்தத்திற் றோன்றித்,திவ்யமயமா யிருக்கிற தேரின்மேல் ஒன்பதினாயிரம் யோசனை யுயரமுடைய சூரியர்கள் எழுந்தருளியிருந்து சிவாக்கினையினாற் றொழினடத்த வேண்டி மகாமேருவை வலமாக வருவர். ஆனால், சூரியர் பன்னிரு வர்களு மெக்காலத்து மொவ்வொருவராகச் சஞ்சரிப்பர்களோ அல் லாமல் பன்னிருவருங் கூடிச் சஞ்சரிப்பர்களோவெனிற், சித்திரை மாதமுதற் பன்னிரண்டு மாதமும் வைகர்த்தனர்முதற் பன்னிருவ ரும் அத்தேரிலேறிச் சஞ்சரிப்பர்களென்க. அச் சூரியர் பதத்துக்கு மேலே யிருபத்தேழு நாளுக்கும் நாயகனாகிய சோமனுலகு நூறா யிரம் யோசனை யுயரம் பொருந்தும். அச் சோமனுலகுக்கு மேலே நூறாயிரம் யோசனை யுயரத்தில் நக்ஷத்திர மண்டலங்களு மிராசி மண்டலங்களும் பொருந்தும். அந் நக்ஷத்திர மண்டலத்துக்குமேல் இரண்டுநூறாயிரம் யோசனை யுயரத்திற் புதனுலகம் பொருந்தும். ()

ஈரி லக்கமொண் சுக்கிர னெல்லைமே
வீரி லக்கமங் காரக னெல்லைமே
வீரி லக்கஞ் சுரர்குரு வெல்லைமே
வீரி லக்கஞ் சனியுல கேயுமே.

(இ - ள்.) முற்கூறிய புதனுலகத்துக்குமே லிரண்டுநூறாயிரம் யோசனை யுயரஞ் சுக்கிரனுலகம் பொருந்தும். அச் சுக்கிரனுலகத் துக்குமே லிரண்டுநூறாயிரம் யோசனை யுயரஞ் செவ்வா யுலகம் பொருந்தும். அச் செவ்வாயுலகத்துக்குமே லிரண்டுநூறாயிரம் யோ சனை யுயரந் தேவகுருவாகிய வியாழபகவானுலகம் பொருந்தும். அக் குருவுலகத்துக்குமே லிரண்டுநூறாயிரம் யோசனை யுயரம் சனி பகவா னுலகம் பொருந்தும். (அச)

ஓரி லக்கமேழ் மாதவ ரூர்மிசை
யோரி லக்கந் துருவ னுலகுயர்
பாரின் மீது பதினைந் திலக்கமுஞ்
சேரு மேபுவ லோகஞ் சிறக்குமே.

(இ - ள்.) அச் சனி யுலகத்துக்குமேல் அத்திரி, வசிட்டர், புலத்தியர், புலகர், பிருகு, அங்கிரா, மரீசி ஆக இவ்வேழு விருடி களு மிருக்கு முலகம் நூறாயிரம் யோசனை யுயரம் பொருந்தும். அவ் விருடிகள் பதத்துக்கு மேலாகத் துருவபதம் நூறாயிரம் யோசனை யுயரம் பொருந்தும். அத் துருவன் பதினாலுலகங்களுடன் கூடி யிருப்பன். முற்கூறிய நக்ஷத்திரங்களெல்லா மித்துருவ னுதாரமாகிச்

கட்டப்பட்டுக்கொண்டிருந்து சஞ்சரிக்கும். அவற்றுக் துருவனென்னும் பெயர் பெற்றது எக்காரணத்தாலென்னிற், சிவசத்தியதிட்டித் தலையாமற் பண்ணுகையாலென்க. ஆகப் பூமிக்குமேலே சிறப்பினையுடைய புவலோகம் பதினைந்து நூறாயிரம் யோசனை யுயரமென்க.()

அதற்கு மேலம ரேச னரும்புரி
யதற்கு நீள மசீதியு மைந்துயா
மதற்கு மேன்மக லோக மதுதனில்
வதிப்பர் மாதவ ராதி மரீசியும்.

(இ - ள்.) அப் புவலோகத்துக்கு மேற் சுவர்க்கலோகம் எண்பத்தஞ்சுநூறாயிரம் யோசனை யுயரம் பொருந்தும். அதற்கு அரசன் இந்திரன். அவனைத் தேவர்களு மிருடிகளுந் தேவஸ்திரிகளுஞ் சேவித்திருப்பார்கள். அதில் அக்கினிட்டோம முதலிய யாகங்களைப் புரிந்தவர்களும், தீர்த்த யாத்திரை பண்ணினவர்களும், தான மாவிரத முதலியவற்றைப் பண்ணினவர்களு மந்தலோகத்தை யடைந்திருந்து அதிலுண்டான போகங்களைப் புசித்துத் தொலைந்தவாறே பூலோகத்தில் வந்து நல்ல மானிடராய்ப் பிறப்பர்கள். அச் சுவர்க்கத்துக்குமேல் மகலோகம். அதிலிருப்பார் மரீசி, மார்க்கண்டர், சித்தர்கள் முதலானோர். (அசு)

உபரந் தானிரு கோடி யுறுமதற்
குயரு மெல்லை சனதல முன்னத
முயரு நாவிரு கோடியென் றுன்னுக
வுயரு மாபிதிர் தேவ ருறைவரே.

(இ - ள்.) முற்கூறிய மகலோகம் இரண்டுகோடி யோசனை யுயரம் பொருந்தும். அம் மகலோகத்துக்குமேல் சனலோகம் எட்டுக்கோடி யோசனை யுயரம் பொருந்தும். அதில் கவ்வியவாகனர், அனலர், சோமர், யமர், அரியமணர், அக்கினிவாக்கர், பொரக்கிஷ், ஆசியபர், சோமபா என்று சொல்லப்பட்ட பிதிர்தேவர் பதின்மரும்; சங்கரிஷணர், வாசுதேவர், பிரத்தியும்னர், நிருத்தர் இந்நால்வரும்; அத்தசீயசாரமும்மதன முதலானோரு மிருப்பார்கள். (அஎ)

அதற்கு மேறறவ லோக மருந்தவ
ரதற்குள் வாழ்வர் சனகனை யாதிய
ரதற்கு நீளமு மாறிரு கோடியா
மதற்கு மேலயன் றேசமென் றுய்கவே.

(இ - ள்.) அச் செனலோகத்துக்குமேற் றவலோகம் பன்னிரண்டுகோடி யோசனை யுயரம் பொருந்தும். அதிலிருப்பவர்கள் சனகர், சனந்தர், சனாதர், சனற்குமாரர், சங்கு, திரிசங்கு, இருபு இவ்விருடிக ளெழுவரும் அரிதாகிய தவஞ்செய்து அதைவந் தடைந்திருப்பார்கள். அத் தவலோகத்துக்கு மேற் சத்தியலோகமென்றறிக. ()

அதற்கு நீளமு மாறுடன் பத்துறு
மதற்கு மேலரி தேசமென் றுய்கவே
யதற்கு நீணாற் கோடியென் றுய்கவே
யதற்கு மேற்சிவ லோகமோ ராறுறும்.

(இ - ள்.) அச் சத்தியலோகம் பதினாறுகோடி யோசனை யுயரத்தைப் பொருந்தும். அதி னடுவே பிரமனிருப்பன். கிழக்கே யிந்திரநீல நிறம்போன்ற வடிவையுடைய இருக்குவேத மிருக்கும். மேற்கே பதுமராக நிறம்போன்ற சாமவேத மிருக்கும். தெற்கே மைநிறம்போன்ற அதர்வணவேதமிருக்கும். மற்றுமுள்ள இதிகாச புராண மீமாம்சமுதலிய சாத்திரங்களுஞ், சாவித்திரியும் அங்கே யிருக்கும். அப் பிரமலோகத்துக்குமேல் அரியினுடைய லோகமென்க. அது நாலுகோடி யோசனையாம். அதில் மாயனிருந்து பிராணிகளைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருப்பன். அதி லவனை வழிபட்ட பத்தர்கள் அடைந்திருப்பர்கள். அவ்வுலகத்துக்குமேற் சிவலோகம் ஆறுகோடி யோசனை யுயரத்தைப் பொருந்தும். அச் சிவலோகத்தின் வளத்தை விரித்துக் கூறுதற்கரிது. அதிற் பார்வதியாருடன் விட்டுணு பிரமன் முதலிய தேவர்கள் சேவிக்க உருத்திரமூர்த்தி யெழுந்தருளியிருப்பர். (அக)

அதற்கு மேலுறு மண்டக டாகமொய்ம்
பதற்க னந்தனைக் கோடியென் றுய்கவே
மதித்த வைம்பது கோடியும் வாய்த்தமை
கதித்த வண்ட மெலைக்கடா கத்தொடும்.

(இ - ள்.) அச் சிவலோகத்தின் மேல் நெருங்கிய அண்டகடாகத்தி னுயரங் கோடியோசனை யென்க. ஆகப் பூமிக்குமே லுயர்ந்த அண்டகடாகம்வரை யைம்பது கோடியோசனை யுயரமென்க.

(வி - ரை.) அதன்வகை: புவலோகம் பதினைந்து நூறாயிரம், சுவலோகம் எண்பத்தைந்து நூறாயிரம், மகாலோகம் இரண்டுகோடி, செனலோகம் எட்டுக்கோடி, தவலோகம் பன்னிரண்டுகோடி, சத்தியலோகம் பதினாறுகோடி, விட்டுணுலோகம் நாலுகோடி, உருத்திர

லோகம் ஆறுகோடி, அண்டகடாகங் கோடி; ஆக ஐம்பது கோடி யென்க. (௬0)

[கோபுர மிருக்குந் தலத்தை யுணர்த்துகின்றார்.]

வேறு

உரைத்தவித வுலகத்து ளொப்பிலிமுப் புரத்தினையு
மெரித்தவிறை யெரியாகி யிருவருறு மிகலினையும்
மரித்தருள்செ யமலனெலை நந்தைமுத லைந்தினையு
தரித்திணையைத் தரியாத தலமுடிவிற் றங்கியதே.

(இ - ள்.) இத் தன்மையாய்ச் சொல்லிய சிவலோகத்தில் ஒப்பில்லாதவனுந், திரிபுரத்தை யெரித்த இறைவனும், அழலுருவாகி யயனு மரியுந் தம்மிற் பொருந்து மாணவமாகிய மாறுபாட்டைக் கெடுத்து அவர்க்கருள் செய்யு நின்மலனுமாகிய சிவபெருமானுடைய திருக்கோயிலுள் முடிவிடத்தில் நந்தைமுதலிய ஐந்து பசுக்களையுந் தாங்கி யொப்பற்ற கோபுரம் விளங்கும்.

(வி - ரை.) கோபுரம் - பசுப்புரை. (௬௧)

[சிவலோகத்தின் தன்மையைப் பதினெட்டுச் செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஒப்பரியன் புரிவளமு முரைவிரியி னடங்காது
செப்பரிய வதன்வளத்திற் சிறுதுரைப்பஞ் சிந்தைசெய்க
எப்பொருளுந் தானேயா யாவையினுந் தோயாத
வப்பொருளை யழுக்கொழிய வகத்துணர்ந்த வருந்தவனே.

(இ - ள்.) எல்லாப் பொருள்களுந் தானேயா யவற்றிற் சேராத அச்சிவத்தை மும்மலவழுக்கு நீங்க வுள்ளத்தி னுணர்ந்தவனே! ஒப்புரைத்தற்கரிய அவனது சிவலோகத்தின் வளங்களும் விரித்துச் சொல்லினும் அடங்காது. ஆயினுஞ் சொல்லுதற்கரிய அச் சிவலோகத்திற் சிறிது சொல்லுவாஞ் சிந்தைசெய்க!

(வி - ரை) உம்மை விகாரத்தாற் றொக்கது. (௬௨)

எண்சீர்க்கழிநெடிலாசிரியச் சந்தவிருத்தம்

இரவியை நிகர்பல விரதமு மொருபா
லெழின்மட வரலிய ரியலிசை யொருபாற்
பரதமு முறைமுறை பயிலுந ரொருபாற்
படகமு முதலிய பறையொலி யொருபான்

மருமலர் விரவிய மரநிரை யொருபான்
மறைபயில் விரதியர் வளவன மொருபாற்
புரைவரை விரவிய புரிசைகள் பலபாற்
பொருவிலி வரைவிலி மருவிய புரமே.

(இ - ள்.) ஒப்பில்லாதவனும் மேருவை வில்லாகவுடைய இவனெழுந்தருளிய சிவலோகத்திற் சூரியப் பிரகாசம்போன்ற பல தேவர்க ளொருபாலும், அழகிய அரம்பையர்கள் பாடு மியலிசைக ளொருபாலும், பாதவிதிப்படி நடனஞ்செய்யு மரம்பையர்க ளொருபாலும், மணமருவிய மலர்களையுடைய மரத்தி னெழுங் கொருபாலும், வேதங்களை யோதும் விரதியர் நிறைந்த வளத்தையுடைய வனங்க ளொருபாலும், மலையையொத்து விளங்கிய மதில்கள் பல பாலிலும் விளங்கின. (கங)

நிலையொரு பதுசத நெடுமட மொருபா
னெடியன கொடுமணி நிகழொளி யொருபால்
விலையில நவமணி விரிதிணை யொருபால்
விழைவினர் விழைவன விளைநிதி யொருபா
லலைமலி புனனதி யணியுற லொருபா
லளிமுரல் குவளைக மலர்சுனை யொருபாற்
பொலன்முடி யமரர்கள் பொதுளிய தொருபாற்
பலியுரி யரையினன் மருவிய புரமே.

(இ - ள்.) புலித்தோலுடுத்த அரையுடையா னெழுந்தருளிய சிவலோகத்தி லுன்னதமான ஆயிரக்கான் மண்டப மொருபாலும், நீண்ட கொடியிற் கட்டும் விளங்கிய மணியோசை யொருபாலும், விலையில்லாத நவமணி குயிற்றிய திண்ணைக ளொருபாலும், விருப்பினையுடையவர்கள் விரும்புவனவாகிய நவமணிக ணிறைந்த சங்கநிதி பதுமநிதிக ளொருபாலும், அலைமலிந்த புனலையுடைய நதிக ளொருபாலும், வண்டுகண் முழங்கு நீலோற்பலம் விரிந்த தடாகங்க ளொருபாலும், பொன்முடி சூடிய தேவர்கள் கூடுமிடங்க ளொருபாலும் விளங்கின. (கச)

புதுவிரை மலர்கொடு புனைமனை யொருபாற்
பொறிமணி யவைகொடு புனைமனை யொருபான்
மதியென விதிவழி வனைமனை யொருபான்
மரகத வொளியின வனைவனை யொருபாற்
கதிரவ னொளிநிகர் கடிமனை யொருபாற்
கனகநன் மயமுறு கனமனை யொருபாற்

சதிவழி நடமிடு தகைமைய னிமையோர்
தலைமைய னிலவிய தனிநகர் தலமே.

(இ - ள்.) தாளவொத்தின்படி நடனஞ்செய்யும் பெருமையை யுடையவனுந் தேவர்க டேவனுகிய சிவபெருமா னெழுந்தருளிய தனக்குத்தானே யொப்பாகிய சிவலோகத்தின் மணந்தங்கிய அன் றலர்ந்த மலரா லலங்கரிக்கப்பட்ட மாளிகைக ளொருபாலும், தீப் பொறிபோன்ற மாணிக்கங்களா லலங்கரிக்கப்பட்ட மாளிகைக ளொருபாலும், சிற்பநூல் விதிப்படி செய்த சந்திரனைப்போன்ற மாளிகைக ளொருபாலும், ஒளியையுடைய மரகதத்தா லலங்கரிக்கப் பட்ட மாளிகைக ளொருபாலும், சூரியப் பிரகாசம்போன்ற காவலை யுடைய மாளிகைக ளொருபாலும், மாற்றுயர்ந்த பொன்மயமான பெரிய மாளிகைக ளொருபாலும் விளங்கின. (கஒ)

கலிவிருத்தம்

ஒருபா லரிபோ லுடலார் சிலரே
யொருபா லவரே புலிபோ லுடையா
ரொருபா லுடையார் கரிபோ லுடலே
யொருபாற் பரிபோ லவரே யுடையார்.

(இ - ள்.) அச் சிவலோகத்தில் ஒருபாற் சிங்கம்போன்ற உருவ முடைய சிலரே ஒருபாற் புலிபோலவும், ஒருபால் யானைபோல வுருவமுடையவரே யொருபாற் குதிரையைப்போலவும் விளங்கினர்.

ஒருபா லுடலா னெனவே யுடையா
ரொருபா லுழைபோ லவரே யுடையா
ரொருபான் மயில்போ லுடையார் சிலரே
யொருபா லவரே குயில்போ லுடையார்.

(இ - ள்.) அச் சிவலோகத்தில் ஒருபால் ஆவைப்போல வுருவ முடையவரே யொருபான் மான்போல வுருவத்தையுடையவராயும், ஒருபால் மயில்போலுருவமுடைய சிலரே யொருபாற் குயில்போ லுருவமுடையவராயும் விளங்கினர். (கஎ)

சிலரே யொருவான் முகமே செறிவார்
சிலரே பலமா முகமே செறிவார்
சிலரே யொருதா ளுடனே செறிவார்
சிலரே பலதா ளுடனே செறிவார்.

(இ - ள்.) அச் சிவலோகத்திற் சிலர் ஒளியுள்ள வொருமுகமே பொருந்துவார்கள். சிலர் பலமுகமே பொருந்துவார்கள். சிலர் ஒரு காலுடனே பொருந்துவார்கள். சிலர் பலகாலுடனே பொருந்துவார்கள்.

(வி - ரை.) ஏகாரங்கள் இசைநிறை. (கஅ)

சிலரே செவியும் பெரிதே செறிவார்
சிலர்பா லஃது மிலதே சிறிதுஞ்
சிலரே பலவா முருவஞ் செறிவார்
சிலர்தா மியல்பா முறுவஞ் செறிவார்.

(இ - ள்.) சிலர் பெரிய காதுகளையும் பொருந்துவார்கள். சிலரிடத்துச் சிறிதாயினும் அக்காது மிலதாயிற்று. சிலர் பலநிறம்பெறு முருவங்களைப் பொருந்துவார்கள். சில ரியல்பான உருவங்களைப் பொருந்துவார்கள்.

(வி-ரை.) 'செவியும்' என்னு மும்மையான் மற்றவங்கங்களுங் கொள்க. (கக)

விதமே பலவே விளையா டலினு
லிதமே யிதமே யிவர்பா லிவையு
மதிமே தையரே யழியா தவரே
பதமே பணிவார் பரமே சனையே.

(இ - ள்.) பேரறிவினராய் ஒருகாலத்துங் கெடாதவராய்ப் பரமேசன் பதம் பணிபவராதலிற் பலவகையான இவ்வுருவங்கள் யாவும் அப்பரமேசன் திருவிளையாட்டினால் நன்மைக்கெல்லா மேலான நன்மையாகவே அச்சிவலோகத்துள்ளாரிடத்துப் பொருந்தும். (௧00)

திணமே யுடையார் சிவனே வியதே
யெணமே யுடையா ரிடரே துமிலார்
கணமே யிவரே கரிசே துமிலார்
நணமேன் மையரே நலரே நலரே.

(இ-ள்.) பத்திவயிராக்கியத்தின் உறுதியை யுடையாரும், சிவபெருமானருளிய பணிவிடையினிடத்தே கருத்தினை யுடையாரும், மலநோய் சற்றுமில்லாதவரும், ஒரு குற்றமு மில்லாதவரும், யாவருஞ் சேரவிரும்பு மேன்மையினை யுடையாரும், மிகுந்த நலத்தினை யுடையாருமே அச் சிவலோகத்தில் கணங்களாவார். (௧0௧)

படிசேர் பலமே னியரே படருஞ்
சடைமா முடியார் தகுநீ றுடையார்
புடையே புயமு மொருநா லுடையா
ரடியா ரவரே கணநா யகரே.

(இ - ள்.) நற்குணமமைந்த பல திருவுருவங்களை யுடையா நம், படர்ந்த பெரிய சடைமுடியினை யுடையாரும், தகுதியான திரு நீற்றை யுடையாரும், பக்கத்திற் சதுர்ப்புயங்களை யுடையாரும், அடி மைத் தன்மையை யுடையாருமே அச் சிவலோகத்திற் கணநாதராய் விளங்கினர். (கo உ)

உடையார் விழியு மொருமூன் றினையு
முடையார் புலியி னுரியும் மரையி
னுடையார் மழுவு மொளிர்வே லினையு
மடியா ரவரே கணநா யகரே.

(இ - ள்.) மூன்று கண்களையு முடையாரும், அரையிற் புலித் தோலினையு முடையாரும், மழுவினையு மொளிர்கின்ற வேலினையு முடையாரும், அடியாராகியுங் - கணநாதராகியும் அச் சிவலோகத்து விளங்கினர். (கoங)

வேறு

ஆதியு மந்தமு மிலனவ னமரரு
மோதியும் வேதமு முணர்வரும் பெருமையன்
போதகன் வேதகன் பொருவில னிருமலன்
பாதபங் கயமுனு மவர்பலம் பகர்வமே.

(இ - ள்.) முதலுமீறு மில்லாதவன், தேவரும் எவ்வகையாலும் வேதமுமறிதற்கு அருமையான பெருமையினையுடையன், தன்னடி யருக்குத் தோன்றாத துணையாயிருந் துள்ளத்துணர்த்தும் போதகன், அவ்வடியர்களை மலத்தினின்றும் வேறுபடுத்துவோன், ஒப்பில்லாத வன், மலரகிதன், அவனது பாததாமரையைச் சிந்திக்கும் பெரியவ ரது பலத்தினைச் சொல்லுவாங் கேட்பாயாக !

(வி - ரை.) 'ஆதியு மந்தமு மிலன்' என்றார், "ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ் சோதியை" எனத் திருவாதவூரடிகளும் அரு ளிச்செய்தமை நோக்கி. (கoச)

உருவினு லுவமையு மொருவினர் மருவினர்
திருவினு ருருவினர் தெரிவைமார் செறியவே

முரவமே முதலவா மழலையு முரலவே
யிரவியா யிரமுநே ரிரதமே சரதமே.

(இ - ள்.) சிவபெருமான் ஸ்ரீபாதத்தைச் சிந்திக்குஞ் சிவகணங்கள் தங்களுருவத்தினால் ஒப்பற்றவராகித் திருமகளைப்போலும் அழகினையுடையராகிய தெய்வப்பெண்கள் தங்களிடத்து நெருங்கிப் பணிவிடை செய்யவும், முரவமுதலிய வாச்சியங்கள் முழங்கவும், ஆயிரஞ் சூரியர் உதித்தாற்போலும் பிரகாசமுள்ள தேரினிடத்து மெய்ம்மையாகவே மருவி வாழ்ந்தனர்.

(வி - ரை.) மழலை - ஆகுபெயர். (௧0௫)

கொத்துலாங் குழலினார் குழலினேர் மொழியினார்
முத்துலா முறுவலார் முகையுநேர் முலையினார்
சித்தமுங் கவரவே சிலரவர் செயலுகந்
தெத்திறற் குறைவிலேமக் கெனவுமங் கிசைவரே.

(இ - ள்.) பூங்கொத்துலவுங் கூந்தலினை யுடையாரும், குழல்போலு மொழியினை யுடையாரும், முத்தைப்போ லொளிவிடு நகையினை யுடையாரும், அரும்புபோன்ற முலையினை யுடையாருமாகிய சில அரம்பையர் சித்தத்தையுங் கவர்தலினால் அச்செயலை விரும்பி யெமக்கு ஒன்றானுங் குறைவில்லையென்று அவர்கள் சொல்லவும் அச் சிவலோகத்துள்ளார் அவ்வாறு பொருந்துவார்கள். (௧0௬)

ஓதுவார் வேதமுஞ் சிலருரைக் குறுபய
னீதெனா வேதெனா வேகமாய் மோகமுங்
காதுவார் காதுவார் குழையினன் கழலுனும்
போதமே பூதியாய் வேறுளர் போகமே.

(இ - ள்.) காதில் ஒள்ளிய குண்டலத்தையுடைய சிவபெருமான் ஸ்ரீபாதங்களைக் கருதுமறிவே யனுபூதியாய் மற்றைப் போகங்களை நினையாதவர் தனித்திருந்து மோகங்களைக் கெடுப்பார், வேதத்தினும் பொருந்தும் பயன் யாதெனக் கேட்குஞ் சிலர் வினாவிற்குப் பொருந்தும் பயனீதென்றும் விடை கூறுவார். (௧0௭)

முத்தனே முதல்வனே முடையுடற் பொறையறுத்
தத்தனே சிவபுரத் தடியரைச் செறியெனத்
துத்தியஞ் சொன்னமெய்த் தொண்டருந் துரிசறச்
சித்தமுஞ் சிவமுறச் செறிவரங் கரிதெனே.

(இ-ள்.) 'அடியார்க்கு முத்தியைக் கொடுப்பவனே! எப்பொருளுக்கு முதலாயுள்ளவனே! புலானுற்றத்தையுடைய உடற்பாரத்தைக் கெடுத்த அத்தனே! சிவலோகத்தின்க ணடியார்களை இருத்துவாய்' என்று துதிசெய்யு மெய்யடியாரும்: மலக்குற்ற நீங்கவும்,சித்த முஞ் சிவத்தைப் பொருந்தவும், அச் சிவலோகத்தில் வாழ்வார்கள். அவர்களுக் கங்கு அரியது யாது? (கo.௪)

பொன்னிற முடையரும் புயனிற முடையரு
மின்னிற முடையரும் விரைமலர்க் கமலமு
மென்னிற முடையரு மெரிநிற முடையரும்
பன்னிற முடையரும் பவளமே னியருமே.

(இ - ள்.) பொன்போன்ற நிறமுடையாரும், மேகம்போன்ற நிறமுடையாரும், மின்போன்ற நிறமுடையாரும், மணம் விரிந்த வெண்டாமரை - செந்தாமரைபோன்ற நிறமுடையாரும், சூரியன் போன்ற நிறமுடையாரும், அக்கினிபோன்ற நிறமுடையாரும், பல நிறமுடையாரும், பவளம்போன்ற நிறமுடையாரும் அச் சிவலோகத்தில் வாழ்வார்கள்.

(வி - ரை.) என்னிறம் - இருள் நிறமென் றுரைப்பினும் அமையும். (கoரு)

[அச் சிவலோகத்திற் சிவபெருமான் எழுந்தருளுந் திருக்கோயிலின் தன்மையை ஆறுசெய்யுளா லுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்

இத்தகைய விதமுறவே யெழிலுடைய சிவபுரிநள்
ளெல்லை வட்டம்
வித்தகற்கு விடையேறும் வேதியற்கு மந்திரந்தான்
வியந்த துங்கஞ்
சுத்தவொளிப் படிகமயஞ் சுடர்மணியாற் றமனியத்தாற்
றோரா ணுதி
யெத்தகைய வுறுப்பினையு மியற்றியிட விசைந்தவெழி
லியம்ப லாமே.

(இ - ள்.) இத்தன்மையான குணங்கள் பொருந்தும் அழகையுடைய சிவலோகத்தில் வட்டமாகிய நடுவெல்லையில் ஞானமே திருமேனியாக வுடையானும், இடபமேறும் வேதியனுமாகிய சிவனுக்கு யாவராலும் வியக்கப்பட்ட உயரமும் பரிசுத்த வொளியினையுடைய பளிங்குமயமும் பெற ஒள்ளிய நவமணிகளாலும், பொன்னினாலும்,

தோரணமுதலிய எல்லா அங்கங்களையுஞ் செய்வது தானே யமைந் திருக்கோயில் விளங்கிற்று. அதனழகு சொல்லு மளவன்று. (ககo

சுத்தவொளிப் படிகமயந் துளங்குமிளம் பிறைவிளங்கச்
சூடிச் சுடு
மத்தமலர்ச் சடைமுடியர் வரமுடையர் திரிநயனம்
வாய்த்து ளார்தங்
கைத்தலங்க ளொருநான்கிற் கனன்மழுவுந் திரிசிகையுங்
கதையும் வாளும்
வைத்துடைய கணநாதர் வரதனுக்குக் குணதிசைச்சந்
நிதியின் வாய்த்தார்.

(இ - ள்.) அச் சிவலோகத்தி லெழுந்தருளும் வரதனுக்குக் கீழ்த்திசைச் சந்நிதியில் பரிசுத்தமான வொளியினையுடைய பளிங்கு மயமாய் விளங்கும் இளம்பிறையை யொளிவிடச் சூடி ஊமத்தமலரை யணிந்த சடைமுடியாரும், வரங்கொடுக்குந் தகைமையுடையாரும், மூன்று கண்களை யுடையாரும், கரங்கள் நான்கினுங் கனல்போன்ற மழுவையுஞ்-சூலத்தையுந்-தண்டத்தையும் - வாளினையுந் தரித்தவரு மாகிய கணநாதர்கள் வாழ்ந்து பணிசெய்வார்கள். (கசக)

பரமசிவ மயமுணர்ந்த பாசுபதர் சைவர்கா
பாலர் பான்மை
விரதியர்மெய்த் தவரென்னு மவர்தாமு மேலுரைத்த
மேனி மேவி
விரவுவரத் திசைதன்னில் வியன்கமலத் தயன்றென்பால்
விரவ மெய்மைச்
சரசுவதி முனிவரர்க்குத் தலைமையவங் கிரரிவருஞ்
சார்வ ரங்கே.

(இ - ள்.) மேலாகிய சிவபெருமான் றன்மையை யுணர்ந்த பாசுபதரும், சைவரும், காபாலரும், முறைமையினையுடைய மாவிர தியரும், மெய்ம்மையான தவத்தினை யுடையருமான அவர்களு முன் சொன்ன சொரூபம் பெற்று அக் கீழ்த்திசைவாயிற் சந்நிதியிலிருந்து பணிசெய்வார்கள். தென்றிசைவாயிற் சந்நிதியிற் பெரிய தாமரை யில் வாழும் பிரமனிருந்து பணிசெய்ய அவனுடனுண்மைச் சரசு வதியு முனிவரர்க்குள் தலைமையான அங்கிராவும் அத்திசையிலிருந்து பணிசெய்வார்கள்.
(ககஉ)

செப்பியவத் தென்றிசையிற் கபிலாதி சித்தருமோ
செறிவர் யோக
தற்பரநற் சனகசனந் தரசெழுவா யெழுவருமெய்த்
தவருஞ் சார்வார்
மெய்ப்பொருளுக் கொப்பாகி வேந்தருமாய் மாயைக்கு
வினையை வென்று
பொய்ப்பொருளை மதியாத பூதேச ராதியர்மேல்
புடையிற் சார்வார்.

(இ - ள்.) சொல்லிய அத்தென்றிசையிற் கபிலராதியான சித்தர்களுங்கூடிப் பணிசெய்வர். அதுவல்லாமல் நன்மையான தற்பர யோகத்தையுடைய சனகர் சனந்தராதியான சத்தவிருடிகளு முன் மையான தவத்தினரும் பணிசெய்வர். சாரூபத்தைப் பெறலாம் மெய்ம்மைப்பொருளுக்கொப்பாகி மாயாவினைதங்கட்காசா யிருவினை யொப்புவந்து பொய்யாகிய உலகை மதியாத பூதங்கட் கதிபர் மேற் றிசைவாயிற் சந்நிதியிற் சார்ந்து பணிசெய்வர். (கக௫

அத்திசையிற் பிராமிதனை யாதியரே ழணங்கினரு
மவர்க ளோடே
பத்திரையைப் பார்ப்பதியை யெழுவாய வெண்மருமோ
படைக்க வல்ல
சத்திதரிக் குஞ்சண்டப் பிரசண்ட வயிரவர்க
டாமே லோரு
முத்தரத்திற் றிருமாலு முருத்திரரும் பருதியரு
முள்ளா ரன்றே.

(இ-ள்.) அம் மேற்றிசையில் அபிராமி முதலான சத்தமாதர்களும், அவர்களுடன் பத்திரை பார்ப்பதி முதலான அட்டகன்னியரும், எப்பொழுதும் படைக்கவல்ல ... சத்தியையுடைய சண்ட பிரசண்ட வயிரவராகிய மேலோரும் பணிசெய்வார்கள். வடதிசை வாயிற் சந்நிதியில் திருமாலும், பதினொருகோடி ருத்திரரும், பன்னிரண்டுகோடி சூரியரும் பணி செய்வார்கள். (க

அத்திசையி லெண்வசுக்க ளரமகளிர் காந்திருவ
ரியக்க ரல்லாச்
சித்தரியல் வித்தைதரர் சிறப்புடைய குய்யரழற்
சேடரென்னு
மித்தொகைய ரேயிசைவ ரின்னுமுள ரிணையிலியை
யிறைவன் றன்னை

வித்தகனை யுளத்திருத்தி விட்டாருந் தொட்டதுயர்
வேட்கை யெல்லாம்.

(இ - ள்.) அவ் வடதிசையில் அட்டவசுக்களும், தெய்வமகளிரும், கந்திருவரும், இயக்கரும், அவர்களல்லாத சித்தர்களும், நல்லொழுக்கமுள்ள வித்தியாதாருஞ், சிறப்பினையுடைய குய்யகரும், அழல்போன்ற சேடருமாகிய இத்தொகுதியரும் பொருந்திப் பணி செய்வார்கள். அவரல்லாமல் ஒப்பில்லாதவனும், எப்பொருட்குமிறைவனுமான ஞானமூர்த்தியை யுள்ளத்தில் வைத்துத் தொன்றுதொட்டு வந்த சஞ்சித முதலிய துன்பங்களையும் ஆசைகளெல்லாவற்றையும் விட்ட பெரியவரு மவ்விடத்துள்ளார். (கசடு)

[சிவலோகத்திற் சிவபெருமா னெழுந்தருளியிருக்குந் தன்மையை
இந்து செய்யுளா லுணர்த்துகின்றார்.]

இத்தகையோர் தொழுதேத்த வாயிரக்கான் மண்டபத்து
ளிணையி லீசன்
முத்தனொரு முதலாகி மூவுலகாய்த் தழைத்தெழுந்து
மூவா மூர்த்தி
யத்தனா னணிகிளரு மரிபரித்த வாதனத்தி
னலரின் மீதே
வித்தகவே தகியுடனும் வீற்றிருப்பன் வினைப்பயனை
விளைக்க வேதான்.

(இ - ள்.) இப்பண்பினையுடையார் வணங்கித் துதிக்க ஆயிரக்கான் மண்டபத்து நடுவில் அழகினையுடைய சிங்கங்கள் தாங்கும் ஆசனத்து ஆயிர மிதழையுடைய தாமரைமலரின்மேல் முத்தனாகியும், ஒப்பற்ற முதன்மையாய் மூன்றுலகமாய்த் தழைத்தெழுந்து கெடாத மூர்த்தியாகிய அத்தனாகியும், அரனாகியும் விளங்கிய ஒப்பற்ற பரமேசன் அடியரைப் பக்குவப்படுத்துந் தன்மையையுடைய வேதகியாகிய பெருமாட்டியுடன் எழுந்தருளியிருப்பான் எவ்வுயிரு மிருவினைப்பயனை யனுபவிக்க. (கசசு)

கண்டகனுக்குக் காட்டாய கதிருதய மொருகோடி
கலந்த தென்ன
வெண்டனுக்குக் காட்டாய வெழிலுருவ மிசைந்திலங்க
விரைக்கு நீரும்
விண்டனுக்கு விளக்காய வெண்மதியும் விரவுசடை
முடிதன் மீதே

பண்டனுக்குப் பாடல்பயில் பறவையுறு மிதழிமுதற்
பரிக்க பாங்கால்.

(இ - ள்.) கட்பொறிக்கு விடயமாகிய உருவமனைத்தினையுங் காட்டும் சூரியன் ஒருங்கே ஒருகோடி கலந்து உதயமானாற்போல மேலுமேலுஞ் சொல்லு மெண்களுக் கெடுத்துக்காட்டாகிய அழகினையுடைய திருவுருவம் பொருத்தமாய் விளங்கவும், மணமாகிய கங்கையும் ஆகாயவிளக்காகிய வெள்ளைமதியுங் கலந்த சடைமுடிமேற் பண்களுக்கொத்த இசைப்பாட்டைப் பாடும் வண்டுகள் பொருந்துங் கொன்றை முதலிய மலர்களைப் பாங்காய்த் தரிக்கவும். (கசஎ)

சுடர்மூன்றுங் கண்மூன்றாய்த் தொடர்ந்திலங்கக் குழை
துலங்கக் காதி [னோடு
விடர்மூன்று மிழித்தருளு மிளமுறுவன் முகமலரி
னிலங்க வெய்திற்
கடலுமிழும் விடமிடற்றிற் கலந்திலங்க மறிமழுவுங்
கையில் வைத்த
வடியடைவா ரிடாகல வமைத்தகரம் வரதகர
மபய வாங்கே.

(இ - ள்.) சூரியன், சந்திரன், அக்கினியாகிய முச்சுடரு முக்கண்ணா யமைந்து விளங்கவும், காதிற் குண்டலமுந் தோடும் விளங்கவுஞ், சஞ்சிதம்-பிராரத்தம்-ஆகாமியமாகிய முத்துயரமுங் கெடுத்தருளு மிளமையான புன்சிரிப்புத் திருமுகத்தாமரையில் விளங்கவும், கொடிதாய்க் கடலினின்றெழுந்த ஆலகாலவிடங் கண்டத்திற் சேர்ந்து விளங்கவும், திருக்காத்தின் மானு மழுவு மடியார்களுடைய பிறவிப் பிணி நீங்க அமைத்த அபயமும் வாதமும் பொருந்தவும். ()

[* இது முதல் மூன்று செய்யுளும் குளகம்.]

குங்குமத்தின் சந்தனத்தின் குழம்பேயோ திருநீற்றின்
கோல மல்கத்
துங்கவரை யிரண்டனைய தோளகலத் தலர்குவளைத்
தொடைய லேயோ
பங்கயத்திற் பயில்வானும் பாற்கடலிற் றுயில்வானும்
பழுத்த நாளின்
மங்கியிட வவரங்க மாலைகளுங் கண்டிகையும்
மலிய வாய்த்தே.

---

* "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பர் தண்டியாசிரியரும், தனித்தனி முடிவது முத்தகம் - முத்தகச் செய்யுட் டனிநின்று முடியும்.

(இ - ள்.) குங்குமத்தாலுஞ் சந்தனத்தாலுஞ் சமைத்த குழம்பு தானோ வென்ன திருநீற்றுக்காப்பினழகு பெருகவும், உயர்ந்த இரண்டு மலையையொத்த தோட்பரப்பில் அணிந்த குவளைப் பூமாலை யோவென்ன தாமரையிலிருக்கும் பிரமனும்-பாற்கடலிற் பள்ளி கொண்ட விட்டுணுவும் தன்னை னியமித்து முடித்தநா ளிறுதியில் அழிந்துவிட அவர் முழுவெலும்பாகிய அங்கமாலைகளும்-கண்டிகை மாலைகளும் மிகுந்து பெருகவும். (கககூ)

திருவரையிற் புலியதளுஞ் சிறந்திலங்க வுடைவாளுஞ்
செறிந்த கச்சும்
பரிபுரமு மிருவினையும் பறித்தருளென் றிருபதமும்
பற்றி யொற்றப்
பொருகழலுந் திருவடியிற் பொலிந்திலங்கப் புடைதொழு
புலன்க டம்மைப் [வார்
பருகியவ ருளத்தரிய பரமபல மளித்தொத்துப்
பாச மெல்லாம்.

(இ - ள்.) அரையினிடத்துப் புலித்தோலும் உடைவாளு நெருங்கிய வீரக்கச்சுஞ் சிறந்து விளங்கவும், நின்பால் வணங்குவார் ஐம்புலன்களைத் தன் வசப்படுத்தி அவருள்ளத்து அரியனவென் றெண்ணும் மேலான பலத்தைக் கொடுத்து எல்லாப் பாசங்களையும் கெடுத்து இருவினையு நீக்கி யருளென்று இரப்பனபோற் பரிபுரமும் பரல்கள் பொருகின்ற வீரக்கழலும் இரண்டு பாதங்களினும் பற்றி யொற்றவும் பொலிந்து விளங்கவும். (கஉ0)

[நந்தைமுதலிய பசுக்களின் தோற்றமுதலியவற்றை
எட்டுச் செய்யுளா லுணர்த்துகின்றார்.]

வீற்றிருக்கும் விமலனது சந்நிதியில் வெள்விடையும்
விளங்கு மந்த
வேற்றினய னந்தைமுத லிசைந்துறையு முயிர்க்கிரக்க
மெய்த்தி யீசன்
றேற்றுவிக்கப் பூதலத்திற் றேன்றியெழிற் பாற்கடலிற்
றுயரந் தன்னை
மாற்றிநிலன் வாழ்வார்க்கும் வரங்கொடுக்கும் பரமனருள்
வழியி னாலே.

(இ - ள்.) எழுந்தருளியிருக்கும் விமலனாகிய சிவபெருமான் சந்நிதியில் வெள்ளிய விடையேறும் விளங்கியிருக்கும்; அவ்விடை யேற்றின் பக்கத்தில் நந்தை முதலிய பசுக்கள் விரும்பியிருக்கும்;

அவைகளைச் சிவபெருமான் சிற்றுயிர்க்கிரங்கிப் பிறக்கும்படி செய்த லால் அழகினையுடைய பாற்கடலிற் பிறந் திவ்வுலகத்தில் வாழ்வார்க் குப் பரமனருளின்படி துன்பங்களைக் கெடுத்து வரங்களைக் கொடுக் கும். (௧௨௧)

நந்தைசுபத் திரைசுரபி நற்சுசிலை சுமனையென
நவின்ற நாம
மைந்தினுக்கு மறிகநிறங் காபிலமே கரிபவுரு
வணிகொள் வெண்மை
சுந்தரத்த தூமிரமே தாமிரமே யெனத்துணிந்து
நாமஞ் சொல்லி
வந்தனைசெய் தவற்றுதித்த விருமூன்று மாட்டிடுக
வரதற் கென்றும்.

(இ - ள்.) மேற்கூறிய பசுக்களைந்துக்கு நந்தை யென்றும், சுபத்திரை யென்றும், சுரபியென்றும், நல்ல சுசீலையென்றும், சுமனை யென்று நாமத்தை யறிக! அவற்றுள் நந்தை கபிலநிறம், சுபத்திரை கருமைநிறம், சுரபி அழகிய வெண்மைநிறம், சுசீலை சுந்தரமான தூமிரநிறம், சுமனை தாமிரநிறம் என்று நிச்சயித்து, அத னதன் பெயரைச் சொல்லிப் பூசைசெய்து அவற்றிலுண்டான பால், தயிர், நெய், கோமயம், கோசலம், கோரோசனையாகிய ஆறு பொருளை யும் வரதனாகிய சிவபெருமானுக்கு என்றும் அபிடேகஞ் செய்க! ()

வேதாவுங் கரியவனு மாவினது கோட்டடியின்
விளங்கி வாழ்வர்
கோதாவி முதற்றீர்த்தங் கோட்டினுதிச் சராசரமுங்
கூடி நிற்கு
மீதான சிரத்தமலன் விமலையத னடுநெற்றி
விசாக ஞெசி
மீதானந் தனிலதனுள் ஞசிதனி ஞகேசர்
விளங்கு வாரே.

(இ - ள்.) பிரமனும் திருமாலும் அப்பசுக்களின் கொம்பி னடியில் விளங்கி வாழ்வர்; கோதாவிரி முதலிய தீர்த்தங்களும், இயங்குதிணை நிலைத்திணையாகிய வுயிர்களுங் கொம்பு நுனியிற் கூடி நிற்கும்; மேலான சிரத்திற் சிவபெருமானும், நெற்றி நடுவிற் சத்தி யும், மூக்கு நுனியிற் சண்முகனும் மூக்குக்குள் இந்திரன் முதலிய தேவர்களும் விளங்கி வாழ்வர்.

(வி-ரை.) கோதாவிரி என்பது இடைக்குறைந்து நின்றது. ()

ஆசகல விருகன்ன நாப்பணச்சு வினிதேவ
ரமர்ந்து வாழ்வர்
தேசுடைய பரிதிமதி நயனத்திற் றந்தத்திற்
செறியும் வாயு
ஓசையுறு நாவதனில் வருணனுரை மகளோங்கூங்
கார நெஞ்சி
னேசமுற யமனியக்கர் கெண்டதலத் தெக்காளு
நிலவு வாரே.

(இ - ள்.) குற்ற நீங்கவே இரண்டு கன்ன நடுவில் அச்சுவினி தேவர்கள் விரும்பி வாழ்வார்கள். இரண்டு கண்களிடத் தொளியினை யுடைய சூரியனும் சந்திரனும், தந்தத்தில் வாயுவும் பொருந்தும். ஒலியுள்ள நாவில் வருணனும், உன்னதமான ஊங்காரத்தையுடைய நெஞ்சிற் கலைமகளும், மணிகளினிடத்தில் எமனு மியக்கரு மெக்கா லமும் அன்புடன் வாழ்வார்கள். (கஉச)

ஓட்டத்தி னுதயாத்த மனசந்தி யிவையுறையு
முறைவன் கண்டத்
திட்டுடைய விந்திரனே யிமிலிருப்ப ரருக்கரென
வியம்புந் தேவர்
வாட்டமிலாச் சாத்தியரே வாழ்வார்க ளுரமதனி
லனில வாயு
நீட்டியதா ளொருநான்கின் மருத்தென்பர் முழந்தாளி
னிலவு வாரே.

(இ - ள்.) உதட்டி னுதயாத்தமனத்துக்குரிய சந்தி தேவதை தங்கும். கழுத்திற் பெருமையுடைய இந்திர னிருப்பான். முரிப்பி லருக்க ரிருப்பர். மார்பிற் சோர்வில்லாத சாத்தியர் வாழ்வார்கள். நீட்டுகின்ற நான்கு காலி லனிலனுகிய வாயுவும், முழந்தாளில் மருத் துவரும் வாழ்வார்கள். (கஉ௫)

குரத்தினுதிப் பன்னகரே குடிகொள்வர் காந்திருவர்
குரத்தி னுப்ப
ணிருப்பரா மகளிர்கண மிவரெல்லா மேற்குரத்தின்
முதுகி னெல்லை
யுருத்திரரே சந்துதொறு முறைவார்கள் வசுதேவர்
பிதிர்க்க ளோங்கிப்
பருத்தவரைப் பலகைதனிற் பகத்துறைவ ரெழுமாதர்
பரிவு கூர்ந்தே.

(இ - ள்.) காற்குளம்பு நுனியில் நாகர்கள் குடியாக வாழ்வார்கள். அக் குளம்பு நடுவிற் கந்திருவர் தங்குவார்கள். அக் குளம்பின் மேலிடத்தி லரம்பையரும், முதுகிடத்தி லுருத்திரருஞ், சந்துகடோறும் அட்டவசுக்களுந் தங்குவார்கள். உயர்ந்து பருத்த வரைப் பரப்பிற் பிதிர்தேவதைகளும், யோனியிற் சத்தமாதர்களு மின்பமிகுந்து வாழ்வார்கள். (கஉசு)

திருமகளே யபானத்தி னுகேச ரடிவாலிற்
சிறந்து வாழ்வ
ரிரவியொளி வாலின்மயி ரிலங்கியிடுஞ் சுரநதிதா
னேயு நீரின்
வரமுடைய யமுனைமய மதுதன்னின் மாதவர்க
ளுரோமம் வாழ்வ
ருரமுடைய பூதேவி யுதரத்திற் பயோதரத்தி
னுததி யெல்லாம்.

(இ - ள்.) குதமாகிய அபானத்திற் றிருமகளும், வாலில் நாகாதிபரும் சிறந்து வாழ்வார்கள். பூளியுள்ள வாலுரோமத்தி லாதித்கன் விளங்கியிருப்பன். கோசலத்தி லாகாயகங்கை பொருந்தும். கோமயத்திற் பெருமையுடைய யமுனாநதி பொருந்தும். உரோமங்களில் மாதவர்கள் வாழ்வார்கள். வயிற்றி லாற்றலுள்ள பூமிதேவியுங், கொங்கையி லெல்லாக் கடலும் பொருந்தும்.

(வி-ரை.) கோமயமென்பது முதற்குறைந்து நின்றது. (கஉஎ)

சடாத்தி னிதயத்திற் றழைத்தமுக மதுதன்னிற்
றங்கு மங்கி
கடனுடனே காருகபத் தியமெழுவா யொருமூன்றுங்
கடின வேள்வி
யுடலுறுசுக் கிலந்தனினு முறையுமக வினையனைத்து
முறுப்புத் தோறுந்
திடமுறுகற் புடைமடவார் செறிந்திருப்ப ரிம்முறையைச்
சிந்தை செய்தே.

(இ - ள்.) வயிற்றில் - காருகபத்தியமும், இதயத்தில் - ஆகவனீயமும், முகத்தில் - தக்கணாக்கினியுமாகிய மூன்று அக்கினியும் பொருந்தும். கடினமான எலும்பினிடத்து முடலுட் பொருந்திய சுக்கிலத்தினிடத்தும் யாகத்தொழிலின் முழுமையும் பொருந்தும். எல்லா அங்கங்கடோறும் கலங்கா நிலைமையுள்ள கற்புடைய் மட-

வார்கள் பொருந்தி யிருப்பார்கள். ஆதலா லிம்முறைமையைத் தியா னஞ் செய்து.

(வி-ரை.) 'அங்கி, கடனுடனே காருகபத் தியமெழுவா யொரு மூன்றும்' என்பதை "மூன்றுவகைக் குறித்த மூத்தீ" என்புழி நச்சி னார்க்கினியர் கூறலானு முணர்க. (கஉஅ)

[பசுக்களை யோம்பலால் வரும் நன்மையையும், ஓம்பாமையால் வருந் தீமையையும் எழு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்

ஆக்கடமை யியக்கிடினு மார்வங் கூர்ந்தே
யங்கையினிற் பலாசந்தண் டாலே மெல்ல
வோக்கியுடற் கொறுப்பறவே யொற்றி யொற்றிக்
கெச்சநெறி கெச்சநெறி யென்றே யோதும்
வாக்கியரே சிவபுரியின் வரத்தை யுற்று
மலரிரதத் தமலனென மகிழ்ந்து வாழ்வர்
தீக்குழியைச் சேறிவார்கள் கருணை யின்றிச்
சினத்ததட்டி யடித்தொறுக்குஞ் சிறியார் தாமே.

(இ - ள்.) அப் பசுக்களை மேய்க்கினும் ஆசைமிகுந்த அழகிய கையிலுள்ள புனமுருக்கங் கோலால் வருத்தநீங்க மெல்ல வொற்றி யொற்றிப் பொருந்தாம லெறிந்து கெச்சநெறி கெச்சநெறி யென்று சொல்லு மேன்மைச்சொல்லை யுடையவரே சிவலோகத்திற் சிறப் பினைப் பொருந்தி மலரானிறைந்த விமானத்தில் நின்மலனைப்போல மகிழ்ச்சியாக வாழ்வார்கள். அதுவல்லாமல் இரக்கமில்லாமற் கோபி த்து வன்சொல்லா லதட்டி யடித்து வருத்து மறிவில்லாத சிறி யோர் தீக்குழியாகிய நரகத்திற் றங்குவார்கள். (கஉகூ)

கலிவிருத்தம்

அரனரி யொருமுவ ரமரேசன் மருமானு
மொருவாம லுறைவார்க ளுமையாதி மடவாரு
மரிதாய மறையோர்க ளுடலாவி னுடலர்வ
மொருவாது வழிபாடு புரிவார்க ளுயர்வாரே.

(இ - ள்.) அரன் - அரி - அயன் ஆகிய முத்தேவரும் இந்திர னும், அவன்வழித் தோன்று மற்றைத் தேவரும், உமாதேவி முத லான பெண்களும், அருமையான அந்தணர்களும் அப்பசுவின் உட லில் நீங்காமல் வாசஞ் செய்வார்கள். ஆதலால், அப்பசுவி னுடலி லாசையால் நீங்காமற் பூசை செய்வோர்கள் உயர்வா யிருப்பார்கள்.

பரியாது பகையாளர் பணியாது பழியாள
ரெரிவாய நிரைவீழு மெளியார்க ளரியார்கள்
பரிவார்கள் பணிவார்கள் பதமீது பரமான
வரிதாய சிவலோக மெளிதாக வடைவாரே.

(இ - ள்.) அப்பசுக்களை யோம்பாமலுந் தொழாமலு மிருக்கிற பழியாளராகிய பகையாளர்கள் தீவாய்நரகத்தில் விழுதற் கெளியராயும், அந்நரகத்தினின்றுங் கரையேறுதற் கரியராயும் பொருந்துவர். அவற்றை யோம்புவோரும், பாதங்களிற் றொழுவோர்களு மேலான அருமையாகிய சிவலோகத்தை யெளிதாகப் பொருந்துவர்.

வேறு

வலஞ்செய் தாக்களை வாழ்த்தி வணங்கியே
நலஞ்செய் தார்புல்லு நாவிற் கொடுத்துடல்
விலங்கை விட்டும் விமலன் புரத்துளே
இலங்கிச் சுற்றத் தொடுமிருப் பார்களே.

(இ - ள்.) அப் பசுக்கட்குப் புற்களை நாவிற் கொடுத்து வலஞ்செய்து வாழ்த்தி வணங்கிப் பூசை செய்வோர் யாக்கைக்கு விலங்காகிய இருவினைகளை நீங்கியும், அச் சிவலோகத்திற் சுற்றத்தாரோடும் விளங்கி யிருப்பார். (கக௨)

பருகி னார்கபி லைத்திகழ் பாலினை
எரிவ ரேயெரி வாய்நிர யத்தெழிற்
பரம னுக்கபி டேகமும் பண்ணினர்
விரவு வார்கள் விமலன் புரத்துளே.

(இ - ள்.) அப் பசுக்களின் விளங்கிய பாலினைப் புசித்தோர் தீவாய் நரகத் தெரிவர். அப் பாலை யழகாகிய சிவபெருமானுக்கு அபிடேகமுஞ் செய்தோர் அத் திருமல னுலகத்தினுட் சேர்வர். (ககக)

தீண்டப் பாவங்க டேய்ந்தறு நல்வினை
ஈண்டும் புற்றனை யீய விரங்கியே
வேண்டு நற்பொருள் வேறிலை யானலாற்
காண்ட கைப்பொரு டானுங் கருதினே.

(இ - ள்.) அப் பசுக்களை கையாற் றீண்டினவுடன் எல்லாப் பாவங்களுங் குறைந்து கெடும். மனமிரங்கிப் புல்லைக் கொடுத்தவுடன் நல்வினையாலாகிய புண்ணியங்க ளெல்லாம் பொருந்தும். ஆதலா லெண்ணுங் காலத்தில் யாவரும் விரும்பும் நன்மையான

பொருளுங், காணுந் தகுதியையுடைய பொருளும் அப் பசுக்க ளல்லது வேறில்லை. (கடச)

இங்கு மின்சுவை யீயு மிறைஞ்சுவார்க்
கங்கு மின்ப மடைகைக்குக் காரணம்
பொங்கு தண்புன லுண்டுபுற் றின்றுநன்
மங்க லந்தருங் கோவெனும் வான்பொருள்.

(இ - ள்.) பொலிவாகிய குளிர்ச்சியினையுடைய நீரைப் பருகிப் புல்லைத் தின்று யாவருக்கு நல்ல மங்களங்களைக் கொடுக்கும் பசுக்களென்று சொல்லப்படும் பெருமையினையுடைய பொருள் தொழுது பூசிப்போர்க் கிவ்வுலகில் இனிமையான சுவையையுடைய பால் முதலியவற்றைக் கொடுக்கும்; அவை யல்லாமல் அச் சிவலோகத்தில் நித்தியானந்தம் பெறுகைக்குங் காரணமாகும். (கடரு)

[பசுக்கள் வசிக்குங் கொட்டில் கட்டி யலங்கரிக்குந் தன்மையை ஒன்பது செய்யுளால் உணர்த்துகின்றார்.]

இட்டி காதியிற் சாலை யியற்றுக
விட்டு வாய்தனும் பூருவ மேவவே
குட்டி கைப்புற நான்கினுங் கோலுக
விட்ட தேவர்க் கிசைந்த விடங்களே.

(இ - ள்.) கீழ்த்திசையில் வாயில் பொருந்தவிட்டுச் செங்கல் முதலியவற்றா லான் கொட்டிலாகிய கோபுரத்தைச் செய்க! அக் கொட்டிலிற் சிறிய சுவர்ப்புறத்து நாற்றிசையிலும் பொருத்தமான தேவர்கட் கிசைந்த இடங்களை வளைக்க! (கடசு)

கொற்ற வைக்குறு கோட்டமும் பூருவஞ்
சொற்ற வைந்திற்குந் தொக்கிடந் தக்கண
மொற்றைக் கொம்பனுக் குன்னத மேற்றிசை
பற்றைச் சோமற்கு நந்திக்கு மற்றிடம்.

(இ - ள்.) கோபுரமாகிய ஆன்கொட்டிற்குக் கீழ்த்திசையில் துர்க்கைக்குப் பொருந்திய கோயிலும், தென்திசையின் முன் சொல்லிய வைந்திற்குந் தொகுத்த இடமும், மேற்றிசையிற் கணபதிக் குன்னதமான கோயிலும், வடதிசையிற் சந்திரனுக்கு நந்திக்குங் கோயிலுஞ் செய்க!

(வி - ரை.) முன்சொல்லிய ஐந்தாவன: பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்க. இப்பெற்றி நோக்கியே ஆளுடைய அரசும் 'ஆவினுக்கருங்கல மரனஞ்சாடுதல்' என்றருளிச் செய்வர்.

பூர்வ வாய்தற் புறத்திரு பாகத்து
மார்வங் கூர விருவரை யாக்குக
வார பாலகர் நந்திமா காளரை
யேரு றச்செய்க மீதுவெள் ளேற்றையே.

(இ - ள்.) கீழை வாய்தலிற் கடுத்த இருபக்கத்திலு நந்தி மாகாளரென்று சொல்லுந் துவாரபால ரிருவரையு மனவிருப்ப மிகும்படி பிரதிட்டை செய்க! திருமதிலின்மேல் வெள்ளிய இடங்களை யழகாகச் செய்க! (கந-அ)

உத்த மத்த நதியின்மண் ணோடைமண்
வித்த கத்தநல் வில்லத் தடியின்மண்
பொத்தைப் புற்றின்மண் போதியின் கிழ்மணொன்
றித்த கைத்தநற் கவ்வியத் தேய்க்கவே.

(இ - ள்.) உத்தமமான நதி மிருத்திகை, ஓடைமிருத்திகை, வித்தகத்தன்மையையுடைய நல்ல வில்வத்தடி மிருத்திகை, மலையை யொத்த புற்று மிருத்திகை, அரசடி மிருத்திகை என்று சொல்லும் இத்தகுதியையுடையனவற்றை நல்ல கௌவியத்தா லிசைவிக்க! ()

குயிற்றி முன்சொன்ன கோல மனைத்தையும்
பயிற்றி யாங்கவர்க் கெய்தநற் பால்களின்
முயற்சி யோடய னரியர் மூவர்க்கு
மயர்ச்சி தீரவுள் ளர்ச்சனை யாக்கவே.

(இ - ள்.) முன்சொன்ன மிருத்திகையாலும் கௌவியத்தா லும் எல்லா அழகும் பொருந்த அவ்வான்கொட்டிலைச் செய்து, விதிப்படி அயன்-அரி-அரனாகிய முத்தேவருக்கும் அவரவர்க்குரியபடி நல்ல இடங்களிலே தாபித்துச் சோர்வு பொருந்தாமல் அருச்சிக்க! ()

கற்றி னங்களுந் தங்கிடங் கட்டுக
மற்றி டங்குழக் கன்றுகள் வைகவு
முற்ற நோய்க ளொடுங்கு மிடங்களு
முற்று மாசெய்க முற்று முயற்சியால்.

(இ - ள்.) ஆகமத்திற் சொல்லி முடிந்த வழப்பால் முதிர்ந்த கன்றுக் கூட்டங்கள் தங்கு மிடங்களுங் கட்டுக! இளங்கன்றுகள் தங் கும் வேறிடங்களும், அப் பசுக்கள் முதலியவற்றைப் பொருந்திய நோய்கள் நீங்கு மிடங்களுங் குறைவின்றிச் செய்க!

(வி - ரை.) 'முற்றுமா' என்புழி றுவ்வீறு தொகுத்தல் பெற் றது; இதனைக் "கற்றவாகடவேன்" என்புழிக் கற்றவாறு எனப்

பொருள் கொண்டு றவ்வீறு தொகுத்தலாகக் கொள்வர் பேராசிரிய ரும். (கசக)

செய்க வேறிடஞ் சீர்மைய தாகவே
வெய்ய நோய்கள் விரவிடி லாக்களைப்
பைய வங்க ணுறுகணைப் பாற்றுக
மைய நீர மருந்து மருத்தியே.

(இ - ள்.) அப் பசுக்களைக் கொடுமையான நோய் பொருந்தினு வழலாக வேறிடத்தைச் செய்து அதிற் கட்டுக ! அப் பசுக்களின் மயக்க நோய்தீர மருந்து கொடுத்து விரைவில்லாமல் அவ்விடத்துப் பொருந்து நோய் தீர்க்க ! (கசஉ)

கண்ணி வாய்தனு நாற்றிசை காணவே
பண்ணிக் கோமயம் பற்றுக நீற்றினாற்
றிண்ணி தாகவுஞ் சோதனை செய்தபி
னண்ணி டாமன் மசகமு நாடொறும்.

(இ - ள்.) நோய் தீரச் செய்த ஆன்கொட்டிற்கு நாற்றிசையி லும் வாயில்கள் விதிப்படி கருதிச்செய்து, சுண்ணநீற்று லழகாக நீவுதல் செய்து, அதன்பின்பு தினந்தோறுங் கொசுகுகளும் பொ ருந்தாமற் கோமயங்களை நீக்குக !

(வி - ரை.) 'மசகமும்' என்ற வும்மையாற் புழுவும் ஈயுமா மென்க. (கசங)

தூபந் தன்னைத் துதைக்க துலங்கவே
தீபந் தானுஞ் சிறக்கச் செறிக்கநற்
பூவி னாற்றொடை யெங்கணும் பூட்டுக
கோவி னைப்புகச் செய்க குறிப்பொடே.

(இ-ள்.) அக் கொட்டிலில் அகிற் றூபங்களை விளங்க நிறைக்க! தீபங்களையும் விளங்க நிறைக்க! மங்கல மலராற் கட்டிய மாலைகளை யெவ்விடத்துந் தூக்குக! பின்பு எண்ணத்துட னப்பசுக்களை யுட் புகுத்துக! (கசச)

[பசுவைக் கொட்டிலிற் புகுவிக்குந் தன்மையை யுணர்த்துகின்றார்.]

சொல்லி மெல்லச் சுவத்தி யெனுஞ்சொலை
மெல்ல மெல்லச் செலுத்துக மேவிட

வல்லி தாம்வளைப் பாயலும் வாய்க்கவே
நல்ல புல்லுங் கொடுக்க நயத்தொடே.

(இ - ள்.) 'சுவத்தி' என்று சொல்லும் வாக்கியத்தை மெல்லச் சொல்லிக் கொட்டிலிற் பையப் பையப் போக்குக! வலிமையான வள்ளைக்கொடியாற் செய்த பாயும் தகுதியாகச் செய்க! அன்புடனல்ல அறுகம்புல்லையு மிசைவிக்க!

(வி - ரை.) 'சுவத்தி' என்பது மங்கலமொழி; வடசொல். ()

[பசுவைப் பூசிக்கு முறையை யுணர்த்துகின்றார்.]

ஆட்டி மஞ்சன மட்டமி தோறும்பூச்
சூட்டி யோதன மாதியுந் தோயமு
மூட்டி யாக்களை யோகை யுறுத்துக
காட்டித் தூபமுந் தீபமுங் காதலால்.

(இ - ள்.) ஆதரவா லட்டமிதோறு மஞ்சனங்கொண் டபிடேகஞ் செய்து, பூவா லருச்சித்துத், தூபமுந் தீபமுங் காட்டி, அன்ன முதலிய நிவேதனமுந் தண்ணீரு மூட்டி, அப் பசுக்களை யுவகை பொருத்துக! (கசுசு)

[பசுக்கள் வசிக்குங் கொட்டில் கட்டினவர் பெறும் பயனை நான்கு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

சாலை யானினந் தங்கச் சமைத்தவர்
கால காலன் புரத்தைக் கலப்பர்தா
மேல வேண்டிய யாவையு மின்புறும்
வேலை வெங்கதி ரோற்கும் விதித்ததே.

(இ - ள்.) பசுவினினம் வசிக்கக் கொட்டிலைச் செய்தவர்கள்: வெவ்விய சூரியனுக்கு விதித்த காலம் வரையு மின்பம் பொருந்து மெல்லாப் போகங்களும் விரும்பியபடி புசிக்கச் சிவலோகத்திற் சேர்வார்கள். (கசுஎ)

முடிய நாளு முகுந்தன் புரத்தினை
யடைவர் மற்றைய நாளும் புரிகளும்
வடவ ரைக்கண் மருவிக் குருவெனும்
படியைப் பற்றிப்பின் பாரதம் பற்றுவார்.

(இ - ள்.) முன் வரையறுத்த நாளு முடிவாகப் பின்பு திருமால் பிரம னிந்திரன் முதலியோ ருலகத்தில் அப்போகந் துய்த்துப்,

பின்பு மேருவரையைச் சேர்ந்து குருகண்டத்தில் வந்து அப்பயன் நுகர்ந்து, பின்பு பாரத கண்டத்திற் பிறப்பார்கள். (கசஅ)

பண்டை வாதனைப் பாங்குற வோங்கிப்
மண்ட பத்தை வகுப்பர் வரமுற
மண்டு காதலி ஞானினம் வைகவே
யண்டர் நாயகற் கர்ச்சனை யாகவே.

(இ - ள்.) பழைய வாசனையி னுரிமை பொருந்த நிறைந்த ஆதரவால் அப் பாரத கண்டத்திற் கோவினங்கள் தங்கவுந் தேவதேவனாகிய சிவபெருமானுக் கருச்சனை நடக்கவு முன்னதமான மண்டபங்களை மேன்மையாகப் பொருத்துக! (கசக)

ஆட்டிப் பான்முத லேந்து மரன்முடிக்
கூட்டிப் பாயத மன்பர்க்கு மோகையி
னூட்டி முன்னைய வூன முலகினுட்
டோட்ட றச்சிவ மாகத் தெருள்வரே.

(இ - ள்.) சிவபெருமான் திருமுடிக்குப் பசுவின் பால் முதலியவற்றை யபிடேகஞ் செய்து, உவகையினு லடியார்களுக்குப் பாயசத்துட னமுதூட்டிப், பழைய சஞ்சித முதலிய குற்றங்களை யோட்டி, உலகினுள்ள வாஞ்சை நீங்கச் சிவசாயுச்சியம் பெற்று விளங்குவர். (கரு0)

[பசுவைக் காக்கும்படி செய்த அரச னடையும் பலத்தை யுணர்த்துகின்றார்.]

ஆக்க டம்மை யருமறை நான்முறை
காக்க காக்கி லாரையக் காசினி
காக்குங் காவலன் காய்ந்துகாப் பித்திடி
னேக்கி யேசிவ லோகத் துறைவனே.

(இ - ள்.) அப் பசுக்களை யரிய வேதநூல் விதிப்படி யுலகினுள்ளார் காக்கக்கடவர்! அப்படிக் காவாதவர்களை யவ்வுலகத்தைக் காக்கு மரசன் கோபித்துக் காக்கும்படி செய்தாற் சிவலோகத் துயர்ந்து வாழ்வான். (கருக)

[அரசன் தண்டியாலுற் பசுவைக் காவாதா ரடையும் பலத்தை யுணர்த்துகின்றார்.]

காக்கி லாரையுங் காக்கு மவரையு
நோக்கு நாடொறு நோக்கில ளுகினுங்

காக்கி லாரைக் கடிகில னாகினுந்
தீக்குக் காட்ட மெனக்கனல் சேர்வனே.

(இ - ள்.) பசுவைக் காவாதவரையுங் காப்பவரையு மீசன் காடோறும் பார்ப்பான். அபபடிப் பாராதவனா யிருந்தாலும், அப்பசுவைக் காவாதாரைத் தண்டியாதவனாயிருந்தாலும், அக்கினிக்கு விறகு பொருத்தமா யிருப்பதுபோல் தீக்குழி நரகத்திற்குப் பொருத்தமாய்ச் சேர்வான். (கடு)

[பசுவைக் கால மறிந்து காக்குந் திற மிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

தழைத்த சோலைத் தடத்தி னடத்துக
பழுத்த வேனிற் பருவத்தி லாக்களை
மழைக்கு மாமலைச் சாரல் வனத்திடை
யொழிக்க வச்ச முறுத்து முழுவையே.

(இ - ள்.) அப் பசுக்களை முதுவேனிற் காலத்திற் குளிர்ச்சியுள்ள பெரியமலைப் பக்கமாகிய காட்டினிடத்துத் தழைத்திருக்குஞ் சோலைப் பரப்பில் மேய்க்க! அதுவல்லாமல் அவற்றைக் கொல்ல வரும் புலியைக் கெடுக்க!

(வி-ரை.) முதுவேனில் என்பது ஆனி, ஆடி எனக் கொள்க.

இமத்தில் வெய்யில் வெளியி லியக்குக
அமைக்க மற்றும் பருவத் தலலறத்
தமக்கு நல்லன தாமறி வார்கடாஞ்
சமைக்க நல்லன சாருந் தகையெலாம்.

(இ - ள்.) தமக்கு நல்வினை யிவையென் றறியு மறிவுடையோர்கள் அப் பசுக்களை முன்பனி பின்பனியாகிய காலத்திற் சூரிய கிரணம் பரந்த வெளிப்பரப்பில் மேய்க்க! மற்றைக் கார்காலமுதலிய காலங்களிலுந் துன்ப நீங்கத்தக்க இடங்களில் மேய்க்க! அதுவல்லாமல் நன்மை பொருந்துந் தகுதியான தொழில்களை யெல்லாஞ் செய்க! (கடுச)

[பசுவைக் காப்பாரும், காவாதாரும் அடையும் பலனை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஆக்க டம்மை யலலற வன்புடன்
காக்குங் காவலர் செய்த கடுவினை
போக்கித் தேசன் புரத்தி லிருந்துவர்
வாக்கி னுரை யாத மகிழ்ச்சியே.

(இ-ள்.) அப் பசுக்களைத் துன்ப நீக்க ஆதரவோடு காத்தளிக்கும் அரசர் தாங்கள் செய்த தீவினைகளைக் கெடுத்துச் சிவலோகத்தில் வாக்கினாற் சொல்லவொண்ணாத ஆனந்த மனுபவிப்பார்கள்.

ஆக்க எல்ல லறவளி யார்களும்
பூக்க ளாற்புரி யார்களும் பூசனை
காக்கி லாருங் கசிந்து கடும்பிணி
தீக்குக் காட்ட மெனக்கனல் சேர்வரே.

(இ-ள்.) அப் பசுக்களைத் துன்பம் நீங்கக் காவாதவரும், மலரால் அருச்சனை செய்யாதவரும், கடுமையான நோய் வந்தால் உள்ளமுருகித் தீராதவரும், அக்கினிக்கு விறகு உரிமைபோல் தீக்குழியான நரகத்துக் குரிமை யாவார்கள். (கஙுசு)

[ஆவுரிஞ்சுதறி நட்டவரும், கோதானஞ் செய்தவரும் அடையும் பலனை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஆவு ரிஞ்சுகன் றூட்டிய வன்பினர்
கோவி னைப்பர மற்குக் கொடுத்தவர்
தேவ தேவன் புரத்திற் றிளைப்பர்கள்
நாவி னாலுரை யாத நலத்தையே.

(இ-ள்.) பசுக்கள் தினவுக்கு உரிஞ்சுங் கற்றூணை மந்தை முதலிய இடங்களில் ஆதரவாய் நட்டவர்களும், பசுக்களைச் சிவபெருமானுக்குத் தானங் கொடுத்தவர்களும், தேவதேவன் வாழும் சிவலோகத்தில் வாக்காற் சொல்லவொண்ணாத நிரதிசயானந்தம் அனுபவிப்பார்கள். (கஙுஎ)

கொடுத்துச் சங்காற் கன்பொடு கோதன
மெடுத்து முய்யக்கொள் ளென்றுமு னேத்தினர்
விடுத்து முன்செய்த தீய வினைவிதம்
விடைக்குப் பாகன் புலத்தினை மேவியே.

(இ-ள்.) சிவபெருமானுக்கு அன்பாய்ப் பசுக்களைக் கொடுத்து 'யானுய்யும்வண்ணம் அங்கீகரித்துக்கொள்' என்று சந்நிதிமுன்பு நின்று துதித்தவர்கள்: முற்காலத்திற் செய்த தீவினையின் திறங்களை நீக்கி விடையி லெழுந்தருளும் அப்பெருமா னுலகத்திற் றங்கி. ()

ஒப்பில் போக மருந்தி யுறைவர்கள்
கற்ப மும்பதி னாயிரங் காணவே

யிப்ப லத்தினை யெய்துவ ரானினைத்
தப்பில் போதகன் பாலளித் தாருமே.

(இ - ள்.) பதினுயிரம் பிரமகற்ப மொப்பில்லாத போகங்களை யனுபவித் துறைவார்கள். குற்றமில்லாத ஆசிரியனிடத்தில் அப் பசுக்களைக் கொடுத்தவர்களு மிக்தப் பலன்களைப் பொருந்துவார்கள்.

[சிவபெருமானுக்கு ஆனேறு தானஞ் செய்தவ ரடையும் பலனை இரண்டு செய்யுளா லுணர்த்துகின்ருர்.]

ஊன மற்ற வுறுப்புறு மொள்ளிய
வான லேற்றை யரனது சந்நிதித்
தானஞ் செய்க சமைத்த வணியுடன்
கான மாடி புரத்துறுங் காதலார்.

(இ-ள்.) மா லயன் மாண்ட மயானத்தி லாடிய சிவபெருமான் உலகத்தில் வாழுங் காதலையுடையவர் அவன் சந்நிதியிற் குற்றமில் லாத அவயவங்களையுடைய நல்ல வொளிபெற்ற ஆனேற்றைத் தானஞ்செய்க! (கசுo)

உற்ற பெற்றத் துரோமத்தி னொன்றற்கு
மற்றைத் தேவர் வருடமொ ராயிரம்
பெற்ற வந்தப் புரத்திற் பெறுவர்கண்
முற்ற வேறறு வாரறு மோகமே.

(இ - ள்.) தானஞ்செய்து பொருந்திய ஆனேற்றின் உரோம மொன்றுக்குத் தான் பெற்ற அச் சிவலோகத்தில் ஆயிரந் தேவவரு டம் போகந் துய்ப்பார்கள். அப்போகந் துய்த்து முடியவே மோக நீங்கி யொப்பில்லாதவ ராவார்கள். (கசுக)

[சிவபெருமானது பசு நிரைகளில் ஆனேறும் பசுவுந் தானஞ் செய்துவிட்டவ ரடையும் பலனை யுணர்த்துகின்ருர்.]

இத்த கைத்த பலத்தினை யெய்துவர்
வித்த கத்த விடையுமோர் தேனுவு
நித்த ளுக்க னிரையி னிறுத்தினு
ருத்த ரப்பிர சைப்பலத் தோடுமே.

(இ - ள்.) சிவபெருமானது பசு நிரைகளில் நல்ல ஆனேறு மொப்பற்ற பசுவுந் தானஞ்செய்து நிறுத்தினவர்கள் மேன்மேலும் புத்திர பவித்திரரோடு இத்தன்மையவென்று முற்கூறிய பலன் களைப் பெறுவார்கள். (கசுஉ)

[ஆனேறு முதலியவற்றிற்கு வருத்தஞ் செய்தவரை அரசன் தண்டஞ் செய்தலாலும் செய்யாமையாலும் வருவன வற்றை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார்.]

இடப மூருந ரெய்துவர் வெய்யதீக்
கடிக மன்னவன் காய்ந்த வரத்தினு
னடைவன் மேலை யமருல கந்தனைத்
தடைசெய் யாமன்னன் றீக்குழிச் சார்வனே.

(இ - ள்.) வாகனமாக ஏறி யிடபங்களைச் செலுத்துகிறவர்கள் வெவ்விய நிரயகத்தைச் சேர்வார்கள். ஆதலால், அவற்றிலேறிச் செலுத்தாது மன்னவ னொறுத்தல் செய்க! அத்தன்மையி னொறுத்த சிறப்பினையுடைய அம் மன்னவன் மேலாகிய தேவலோகத்தினைச் சேர்வான். அவ்விடப மூருதலைத் தடைபடுத்தாத மன்னவன் றீக்குழி நரகத்தைச் சேர்வான். (கசுஙு)

பாவ காரிகள் வந்தைப் பசுவினைச்
சேவு யர்த்த சிவனிட பத்தினைக்
காவு விக்கிற் கனத்தையக் காசினிக்
காவ லாள னவரையுங் காய்கவே.

(இ-ள்.) பாவ ஆன்மாக்கள் மலட்டுப்பசுவையாயினும், விடைக் கொடியையுடைய சிவபெருமானது இடபங்களையாயினும், பாரமான பண்டங்களைச் சுமக்கும்படி செய்வித்தால் அப் பாவிகளையும் அவ் வுலகத் தரசன் தண்டனை செய்க! (கசுச)

காய்ந்த மன்னன் கடிய வினையினைத்
தீர்ந்து சேர்வன் சிவபுரந் திண்ணமே
யோர்ந்தொ றுப்பவர் தம்மை யொறுமனன்
கூர்ந்த தீநிர யக்குழி கூடுவான்.

(இ - ள்.) அப் பாவிகளைத் தண்டஞ் செய்த அரசன் கடுமை யான தீவினைகளை நீங்கி யுறுதியாகவே சிவலோகத்தைச் சேர்வான். அப் பசுக்களை வருத்துவோர்களை வருத்தஞ் செய்யாத அரசன் மிகுந்த தீக்குழி நரகத்தில் வீழுவான். (கசுரு)

[ஆனேற்றிற் பாரங்களை யேற்றிற் பரிகார முணர்த்துகின்றார்.]

பரிப்பித் தாரிட பத்திடைப் பாரத்தை
யரிக்கப் பாவமு மாறுட னேந்துற

வுரத்த வெள்விடை யீசர்க் குதவுக
விரித்த வானினங் காக்கவோர் வற்சரம்.

(இ - ள்.) அவ்விடபத்தின் மேற் பாரங்களைச் சுமத்தினோர் அப் பாவங் கெடச் சிவபெருமானுக்கு வலியினையும் - வெண்மையினையு முடைய பதினொரு இடபங்களைத் தானஞ் செய்க! அதுவு மல்லாமல் நியமித்த பசு நிரையையு மொருவருட மேய்க்க! (கசுசு)

[ஆலயப்பணிக்கு ஆனேறு உதவினோர் பலத்தை யுணர்த்துகின்றார்.]

ஈடு பெற்ற வெருத்தினை யீபவர்
பாடு பெற்ற சகடை பரிக்கவு
மாடுங் கூத்த னமலன் பணிக்கவ
ளூடு பெற்று நலத்தை நவில்வரே.

(இ-ள்.) சிற்சபையி னிருத்தஞ்செய்யும் நின்மலனது ஆலயப் பணிவிடைக்குரிய பெருமை தங்கிய பண்டிகளைச் சுமந் திழுக்கும் படி யாற்றலையுடைய இடபங்களைத் தானஞ்செய்தவ ரவனுலகில் நிரதிசயானந்தம் பெற்று அவனுமங்களைத் துதித்திருப்பர். (கசுஎ)

[இளைத்த பசுவை வளர்த்தவன் பலத்தை யுணர்த்துகின்றார்.]

இளைத்த வாவினைக் கண்டு ளிரங்கியே
தளர்ச்சி தீர்க்கத் தருகென வாங்கியே
வளர்த்த வன்சிவ லோக மருவியே
யுளத்து ளோகை யுறைய வுறையுமே.

(இ - ள்.) உடம்பிளைத்த பசுக்களைப் பார்த்து மனமிரங்கி, 'இவற்றின் மெலிவைத் தீர்க்கத் தா!' என்று கேட்டு வாங்கி யவற்றை வளர்த்தவன் சிவலோகத்தைச் சேர்ந்து உள்ளத்து ளுவகையாக விருப்பான். (கசுஅ)

[பசுவில் பால்கறக்கு முறையை இரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

சேர்வ ராதி சிவபுரங் கன்றினை
யார மாத மிரண்டு மருத்தியே
நீரின் வாய்நுரை நீக்கிக் கறந்திறைக்
கீர நெஞ்சமொ டாட்டின ரெண்ணியே.

(இ - ள்.) கன்றுகட் கிரண்டுமாதம் வயிறுநிறையப்பால் குடிக் கும்படிசெய்து பின்பு அவற்றின் வாய் நுரைகளை நீராற் கழுவிப்

பசுவின்பாலைக் கறந்து சிவபெருமானுக்குக் கருதி யன்பான நெஞ்சோடும் அபிடேகஞ் செய்தோர் சிவலோகத்திற் சேர்வார்கள். (கசுக)

ஆரக் கன்று மருந்தி முலையினைத்
தீரும் வேலை தெரிந்து கறந்தவர்
சேரு மெல்லைமுன் சொன்ன சிவபுரந்
தீரு மெல்லையு மண்ணிது திண்ணமே.

(இ - ள்.) கன்றுகளுந் தாய் முலைப்பாலை வயிறு நிறையக் குடித்து நீங்குங்காலந் தெரிந்து அப்பாலைக் கறந்தவர்க ளுறுதியாகச் சேருமிட மியாதெனின், முற்கூறிய சிவலோகமே; நீங்குமிடமு மியாதெனின், இம்மண்ணுலகே. (கஎ௦)

[கன்றுக்கு வயிறு நிறைய வூட்டாது பால் கறந்தவர் அடையுந் தீங்கை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

உற்ற வாசையிற் கன்றுக் கொறுப்புறப்
பற்றி யான்முலைப் பால்கொளும் பாதகர்
முற்றித் தீயுத ரத்தினு மூளவே
பற்று மின்று நரகிற் படிவரே.

(இ - ள்.) உள்ளத்திற் பொருந்திய ஆசையாற் கன்றுக்குப் பால் குறைவாகப் பசுவைப்பிடித் தப்பாலைக் கறந்துகொள்ளும் பாதகர், வயிற்றினின்றும் பசியாகிய தீ மிகுந்து மூளப் பற்றொன்று மில்லையாய் நரகின் முழுகுவர். (கஎக)

தொலைந்த பின்னுந் தொடுத்த வுடலெலாங்
கலந்து நின்று கடும்பசி காயவே
யுலர்ந்து மானிட யோனியி லுற்பவித்
திலங்க டோறு மிரப்ப ரிளைப்பரே.

(இ - ள்.) நரகத்தின் முழுகுதல் தொலைந்தபின்பும் அப்பாவத்தாற் றொடுத்து வருகின்ற சரீரங்களெல்லாங் கடுமையான பசிப்பிணி சேர்ந்து நின்று வருத்த அதனால் வாடிப் பின்பு மானிடயோனியிற் பிறந்து வீடுகடோறு மிரப்பார்கள்; இரந்தும் பிச்சை கிடையாததனா லுடல் மெலிவார்கள். (கஎஉ)

[ஆன்கோட்டிலிற் புகுஞ் சண்டாளர் தன்மை யுணர்த்துகின்றார்.]

புலைய ரானினச் சாலையுட் புக்கிடி
லெலையில் கால மெரிநிர யக்குழி

தொலைவி லாத்துயர் தொக்குச் சுழல்வர்க
ளிலைய வர்க்குப் பரிகார மெண்ணிலே.

(இ - ள்.) சண்டாளர்கள் ஆனினங்களைக் கட்டுங் கொட்டிலுட் புகுந்தா லளவில்லாதகாலந் தொலைவில்லாத துன்பங்களுடன்கூடித் தீக்குழி நரகத்திற் கலங்குவார்கள். கருதுங்கா லவர்களுக்குப் பரிகாரங்களே யில்லை. (௧௭௩)

[பகைவர் கவரும் பசுக்களைக் காப்பார் தன்மை யுணர்த்துகின்றார்.]

ஆக்க ளைக்கவ ரின்னடை யார்சென்று
காக்க காக்க வரிதெனிற் றம்முயிர்
போக்கி யும்புக ழாக்கிய புண்ணியர்
தேக்கு நீர்ச்சடை யான்புரஞ் சேர்வரே.

(இ - ள்.) பகைவர்கள் வந்து பசுக்களைத் திருடவரின் விரைந்து காக்க! அதுவு மரிதானாற் றங்களுயிரைக் கொடுத்தானலுங் கீர்த்தியை யாக்கின புண்ணியர்: நிறைந்த கங்கையணிந்த சடாமகுடத்தையுடைய சிவபெருமானுலகத்திற் சேர்வார்கள். (௧௭௪)

[புண்ணிய பேதங்களின் வகையும், பலமும் பதினேழு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

இருவிதந் தரும நீதி யெனவறிந் திடுக யார்க்கு
மொருவிதம் புலன்க ளைந்து மொடுக்கியு ளரனை யுன்னல்
பரிவுடன் பசுக்க டம்மைப் பசுபதிக் கன்பர் தம்மை
யுரிமையிற் புரிக பூசை யெனுமிஃதொ ழிந்த வொன்றே.

(இ - ள்.) யார்க்குந் தருமத்தின் முறைமை யிரண்டுவகையென் றறிக! அவற்றுள் ஐம்புலன்களையு முள்ளத்தொடுக்கிச் சிவபெருமானைத் தியானஞ்செய்த லொருவகை; அன்புடன் ஆக்களையும் பசுபதியி னடியார்களையும் விதிப்படி பூசைசெய்கவென்று சொல்லுமிது மற்றொருவகை. (௧௭௫)

ஆதலாற் பசுக்க டம்மை யரனடிக் கன்பர் தம்மைக்
காதலாற் புரிக பூசை கடுவினை களைய வெண்ணின்
மீதுல கடைய வேண்டின் மிடியரு முடலி னாலு [றும்.
மேதெனு மியன்ற தொன்றை யியற்றுதல் கடனே யென்

(இ-ள்.) இவ்விதமாகுதலாற் கடுமையான தீவினைகளை நீக்கக் கருதினாலு மேலுலகைச் சேர விரும்பினாலும் பசுக்களுக்குஞ் சிவ

னடியார்களுக்கும் ஆதாவாற் பூசை செய்க! தரித்திரர்களுந் தங்கள் ஆக்கையினாலும் யாதாயினும் பொருந்தியதொரு பணியை எக்கா முஞ் செய்தல் கடன். (கஎசு)

புலையரே யேனு மீசன் பொலன்கழ லடியிற் புந்தி
நிலையரே லவர்க்குப் பூசை நிகழ்த்துத னெறியே யென்றுா
தலையரே யேனு மீசன் றுமரைத் தாளி னேச
மிலரெனி னியற்றும் பூசைப் பலந்தரு வாரே யாரே.

(இ - ள்.) சண்டாளராலும் சிவபெருமானது பொன்னாற் செய்த வீரக்கழலை யணிந்த சீபாதத்திற் புத்தியை நிறுத்துந் தன் மையராஞல் அவர்க்குப் பூசைசெய்த லொழுங்கேயென்க. எக்கா லமு முதன்மையான சாதியராலும் அச்சிவபெருமானது தாமரை மலர்போன்ற சீபாதத்தில் அன்பிலராஞல் அவர்க்குச் செய்யும் பூசா பலனை யார் தருவார்? ஒருவருமின்று. (கஎஎ)

திருப்பதி வணங்க வென்று சென்றுறுஞ் சிவனே சர்க்கு
மருத்தியாற் கங்கை யாதி யாடிட நாடி னார்க்கு
மருத்துக வன்ன பான மவரவர்க் குபயோ கங்கள்
பொருத்துக வூனைப் போக்கிச் சிவபுரம் புகுவார் தாமே.

(இ - ள்.) ஊனுடலை நீக்கிச் சிவலோகத்திற் சேரும் எண்ண முடையார் திருப்பதியாகிய சிவாலயங்களை வணங்கவேண்டு மென்று சென்று பொருந்துஞ் சிவனடியார்களுக்கும், கங்கைமுதலிய தீர்த் தங்களில் ஆசையுடன் முழுகச் செல்லுகிறவர்க்கும் அமுதுமுதலிய உணவுகளைப்புசிப்பிக்க! மற்றும் வேண்டும் பொருளும் பொருத்துக!

கலிவிருத்தம்

பிரம சாரியைப் பேரற மோம்பிடுங்
கிருக சாரியை யூட்டிய கேண்மையர்
விரவி யேசிவ லோகம் விரும்பிய
பரம போக மனைத்தும் பயில்வரே.

(இ - ள்.) பிரமசரிய விரதம் அனுஷ்டிப்போனையும், பெரிய தருமங்களைக் காத்தல்செய்யும் இல்வாழ்வோனையும், அன்ன முதலிய வற்றை யுண்ணும்படிசெய்த வுரிமையை யுடையவர் சிவலோகத் தைச் சேர்ந்து தாம் விரும்பிய மேலான போகங்களை யெல்லாம் பொருந்துவர். (கஎக)

வனத்தின் வைகிய மாதவ ரங்கையிற்
புனத்திற் காய்கனி யாதி பரிவொடுங்

தினக்கொ டுத்தவர் சேர்ந்து சிவபுர
மனத்தில் வேண்டும் விமானத்தில் வாழ்வரே.

(இ - ள்.) காட்டிற் றங்கிய மாதவராகிய வானப்பிரத்தரது அழகிய கையிற் காட்டிலுண்டான காய் கனி முதலியவைகளை யன்பாய்ப் புசிக்கக் கொடுத்தவர்கள் சிவலோகத்தைச் சேர்ந்து மனத்தில் விரும்பும் விமானங்களில் வாழ்வார்கள். (கஅ௦)

பரிந்து பாசு பதரையும் பண்புற
வருந்து வித்தவர் தாமு மரன்புரி
பொருந்தி வாழ்வர் புரிவுடன் பிச்சையை
யருந்த மாவிர தர்க்களித் தாருமே.

(இ - ள்.) பாசுபத வேடத்தரையும் பண்பாக விரும்பித் திருவமு துண்ணும்படி செய்தவர்களும், மாவிரத வேடத்தருக்கு விரும்பித் திருவமுதுண்ணக் கொடுத்தவர்களும் சிவலோகத்தைச் சேர்ந்து வாழ்வார்கள்.

(வி-ரை.) பாசுபதம், மாவிரதம் என்பன அகச்சமைய மாறினுளமைந்தன என்க. (கஅக)

திகழும் வெண்பிறைச் செஞ்சடைத் தேவர்க்குக்
கமழக் கல்ல வடமிடு வார்களை
மகிழ வூட்டிட வல்லவர் தாழுமண்
புகழ வேசிவ லோகம் புகுவரே.

(இ - ள்.) ஒளிவிடும் வெண்மதியை யணிந்த சிவந்த சடையினையுடைய சிவபெருமானுக்கு வாசனை யுண்டாகக் கல்லவட மிடுவோர்களை யுள்ளமகிழும்வண்ணந் திருவமுது செய்விக்க வல்லவர்களும் மண்ணுலகோர் புகழச் சிவலோகத்தைச் சேர்வார்கள். (கஅஉ)

அனக ரான வருந்தவர் கையுறக்
கனக பாத்திரங் காதலொ டுந்தவ
ரனக லோகத் தமர்வர்கள் கற்பமுஞ்
செனக னுக்கொரு கோடி செறியவே.

(இ - ள்.) பாவச் செய்கை யில்லாத அருந்தவத்தர் கையிற் பொருந்தப் பொற்பாத்திரத்தை யன்புடனே கொடுத்தவர்கள் பிதாவுடன் ஒருகோடி கற்பகாலம் வரையும் சிவலோகத்தி லிருப்பார்கள்.

இத்த கைத்த பலத்தினை யெய்துவர்
பத்த ரங்கைப் பரிக்கப் பலாசுறு

பத்தி ரத்திற் புடகம் பரிவுற
வைத்த வுத்தமர் தாமு மகிழவே.

(இ - ள்.) சிவபத்தர்கள் அழகிய கையிற்றுங்கப் பலாசவிலையி னற் பாத்திரஞ் சமைத்து அன்புடன் கொடுத்த வுத்தமர்கள் மேற் சால்லுந் தகுதியான பலத்தை மகிழும்படி பெறுவார்கள். (கஅச)

நாத்த மும்புற நாதனை நாடொறு
மேத்து வார்கரத் தேந்திடத் தாமிர
பாத்தி ரங்கொடுத் தார்முனைப் பாவமுந்
தீர்த்துச் செஞ்சடை யான்புரி சேர்வரே.

(இ-ள்.) நாள்தோறும் நாவில் தழும்பு பொருந்தும்வண்ணஞ் சிவபெருமானைத் துதிக்கும் அடியார் கையிலேந்தச் செம்புப் பாத்தி ரங்களைக் கொடுத்தவர்கள் முற்பிறப்பி லீட்டிய பாவங்க ணீங்கி அச் சிவலோகத்திற் சேர்வார்கள். (கஅரு)

தெத்தி யோதனம் பாத்திரஞ் சேர்த்தியே
யுத்த மத்தவர் கையி னுதவினர்
வித்த கன்புரி வாழ்வர் விபுதர்க்கு
வைத்த கோடி வருடமும் வாய்க்கவே.

(இ - ள்.) தயிரன்னத்தைப் பாத்திரத்தில் வைத்து முதன்மை யான சிவனடியார் கையிற் கொடுத்தவர்கள் தேவருக்கு நியமித்த கோடிவருடம் வரையும் அச் சிவலோகத்தில் வாழ்வார்கள். (கஅசு)

முற்றக் கால முறையுறப் பாரதம்
பற்றிப் பார்த்திவ ராய்ப்பசு பாசமு
மற்றுச் சங்கர னோடமர் வாரவர்
பெற்ற பேறது பேசப் படுவதே.

(இ - ள்.) கோடி தேவவருட முறைமையாக முடியப் பாரத கண்டத்தில் அரசனாய்ப் பிறந்து, ஆண்டுள்ள போகம் புசித்துப், பசு பாசமுங் கழன்று, சிவபெருமானுடன் கூடி வாழ்வார்கள். அவர்கள் பெற்ற பேறு பேசுந் தரமன்று. (கஅஎ)

இத்த கைத்த பலத்தினை யெய்துவர்
முத்த னைப்பசு பாச முருக்கியைச்
சித்தம் வைத்தவ ரங்கைச் செறித்தவர்
சுத்த தோய காகந் துலங்கவே.

(இ - ள்.) அநாதிமலமுத்தனும் பசுவினது பாசங்களைக் கெடுக்கப்பட்டவனுமாகிய பரமனைச் சித்தத்திற் றியானித்த அடியார்களது அழகிய கையிற் றூயதான நீர்க்கமண்டலம் கொடுத்தவர்க ளித்தன்மையான முற்கூறிய பலத்தைப் பெறுவார்கள். (கஅஅ)

ஊட்டி னூர்க ளுதவிய தேதெனுங்
காட்டு ளாடி கழறங் கருத்தினு
ளூட்டி னுரைத் தமைநலி யும்வினை
யோட்டி யேசிவ லோகத் துறைவரே.

(இ - ள்.) சுடலையி லாடுஞ் சிவபெருமானது சீபாதங்களைத் தங்கள் கருத்தில் இருத்தினோர்க்குத் தம்பா லமைந்த பொருள் யாதொன்றேனும் புசிப்பித்தவர்கள் தங்களை வருத்துந் தீவினைகளையோட்டிச் சிவலோகத்துள் வாழ்வார்கள். (கஅக)

மாத வர்க்குற வற்கலை யீந்தவர்
சீத வாரித வாடையுஞ் சேர்த்தினர்
கோதி லாவசி னுதியுங் கோல்வளை
மாதொர் பாகன் புரத்தினுள் வாழ்ந்தபின்.

(இ - ள்.) மாதவத்தினர்க்குப் பொருந்த மரவுரி கொடுத்தவர்களும், குளிர்ச்சியினையுடைய மேகம்போன்ற வெண்மையான ஆடைகளையு மான்தோல் முதலியவைகளையுங் கொடுத்தவர்களும், தேவிபாகனாகிய சிவபெருமானுடைய உலகில் வாழ்வார்கள்; மேற்கூறியபடி வாழ்ந்த பின்பு; (கக௦)

நண்ணிப் பாரத நான்மறை யாறங்க
மெண்ணிப் பாச விருளறத் தேசிகன்
கண்ணி னூற்கரு தற்கரி தாகிய
உண்மை தன்னொ டிரண்டற வொன்றுவார்.

(இ - ள்.) பாரதகண்டத்தில் தோன்றி நான்கு வேதமும் ஆறு சாஸ்திரமுங் கற்றுணர்ந்து ஆசிரியனது அருட்கண்ணால் இருவினைப் பாசமாகிய மயக்கங்கெட வினைத்தற்கரிய வுண்மையைச் சிவத்துடனிரண்டறப் பொருந்துவார்கள். (கககக)

[மகாசிவலோக முதலியன இருக்குந் தானமு மவற்றையடையுந்தன்மை முதலியனவும் பதினொரு செய்யுளா லுணர்த்துகின்றார்.]

ஆக்க ளெல்லை யறைந்தனு பாடணத்
தாக்க ளெந்து மமலன் றிருமுடிக்

காக்கு மன்பார்க்கும் பூசை யறைந்தினி
மீக்கு ணச்சிவ லோகம் விளம்புவாம்.

(இ - ள்.) பசுக்களுறையு மெல்லையைச் சொல்லிப் பின்பு இனிமையான வசனத்தால் அப்பசுக்களிடத்து உண்டாகிய கௌவி யங்க ளானதையும் நிருமலனது திருமுடிக்கு அபிடேகஞ் செய்யும் அடியார்களுக்குச் செய்யும் பூசையைச் சொல்லி யினி மேலான தன் மையை யுடைய மகா சிவலோகத்தைச் சொல்லுவாம். (கசஉ)

ஐந்து பூதத்து மற்றகங் காரத்தும்
புந்தி தன்னிலு மண்டம் பொருந்திடும்
முந்திச் சொன்ன முறையுறு மூலத்தும்
பந்தித் தெட்டு முறையுறும் பாங்கினல்.

(இ - ள்.) நில முதலாகிய ஐந்து பூதத்திலும், அதற்கு மேலா கிய அகங்கார தத்துவத்திலும், புத்தி தத்துவத்திலும், அண்ட மொன்றுக்கொன்று விரிவுயர்ச்சி பொருந்தும்; அவையல்லாமல் முன்சொன்ன முறையிற் பிரகிருதி தத்துவத்திலும் அண்டங்கள் பொருந்தும்; ஆக இப் பகுப்பிற் சேர்ந்து எட்டுவிதமான அண்டங்க ளும் பொருந்தும்.

(வி - ரை.) அவையாவன:—பூமியிற் காலாக்கினி முதலான புவனம் நூற்றெட்டு. அப்புவில் அமரேசன் முதலிய குய்யாட்டக ரும், தேயுவில் அரிச்சந்திரன் முதலிய குய்யாட்டகரும், வாயுவில் தேவைமுதலிய குய்யாட்டகரும், ஆகாசத்தில் வத்திரபாதாதி முத லிய பவித்திராட்டகரும், அகங்கார தத்துவத்திற் சகலண்டாதி முதலிய தானுவாட்டகரும், புத்தியிற் பைசாசியான அட்டகரும், பிரகிருதியில் அகிருதாதியான புவனட்டகரும், ஆகத் தத்துவம் எட்டிலும் புவனுதிபர்களும் நூற்றறுபத்து நால்வ ரிருப்பார்கள். இப்படி அங்கங்கே யநேககோடி அண்டங்க ளுண்டென வறிக! ()

பேசு மூலப் பிரகிரு திக்குளே
மூசு மண்ட கடாக முகட்டினுள்
ஈசன் றேவி யிளைய னரியயன்
வாச தேசமோ ரைந்தும் வகுப்பபே

(இ - ள்.) அசுத்தமாயா காரணமாகிய மூலப்பகுதியிடத்தில் நெருங்கி யிருக்கின்ற அண்டகடாக முகட்டை அடுத்து அதனுள் பிரமன் முதலிய ஐவர் வசிக்கும் புரத்தை மேற்சொல்வாம். (கசச)

காட வண்ட கடாக முகட்டினுட்
கூடும் வேதற்குக் கோயி லதற்குமேற்
கூடு மாலுக்குங் கோயி லதற்குமேற்
கூடும் வென்றிக் குமரற்குக் கோயிலே.

(இ - ள்.) அம் மூலப்பகுதிக் கிடமாய அண்டகடாகத்தைத் தீண்டியிருக்கின்ற அகிருதைமுதலிய புவனாட்டகத்துக்குமேற்பதும ராக நிறம்போன்ற பிரமலோக மிருக்கும். அதற்குமேல் மாயனுக்கு இந்திர நீல நிறம்போன்று மகத்தாகிய போகங்களினால் அலங்கரிக் கப்பட்டிருக்கின்ற விட்டுணுலோக மிருக்கும். அதற்குமேல் வெற் றிப்பாட்டையுடைய குமாரசுவாமிக்கு முத்தின் பிரபைபோன்று சிறந்த போகங்களுடனுங் கூடியிருக்கின்ற கௌமாரபுரி யிருக்கும்.

அதற்கு மேலுமை யாள்புர மற்புத
மதற்கு மேற்சிவ லோகமென் றுய்கவே
யதற்கு றும்வளம் வாக்கி னடங்கிடா
அதற்குப் புக்கவர் மீள்பவ ரல்லரே.

(இ - ள்.) அக் கௌமார புரிக்குமேல் உமாதேவியினுடைய புரி பலவகை ஆச்சரியத்துடன் பொருந்தும். அதற்குமேற் கோடி சூரியப் பிரகாசம்போன்று அளவிடப்படாத வளத்தையு முடைத்தா யுவமையில்லாததாய் அரிய இரணியகர்ப்பன், அட்டவசுக்கள், உருத் திரர்கள், சூரியர் முதலாயினார்களாலே சேவிக்கப்பட்டுக்கொண்டு சீகண்ட பரமேசுர னெழுந்தருளியிருக்கும் மகாசிவலோகம் பொருந் தும். அச் சிவலோகத்தின் வளத்தை அளவிட் டுரைக்கப்படாது. அப் பிரகிருதிச் சிவலோகத்தை ஞான யோகத்தினாலே அடைந் தவர்கள் மீளார்கள்.

(வி - ரை.) சிலகாலம் ஞான நிட்டையை அனுட்டித் திருந்த வர்கள் உமாதேவி யுலகத்திலே பதினாயிரங் கற்பமடைந்து அங் குள்ள போகம் புசித்துத் தொலைந்தவாறே பிருதிவிச் சிவலோகம் வந்து, பின்பு கிரமத்தில் வந்து பூமியை அடைந்து, சிவயோகியாய் அச் சரீரம் ஒழிந்தவாறே மேலைச் சிவலோகத்தில் உண்டான போகம் புசித்திருப்பார்களென்று அறிக! (கககூ)

விடுத்து வாழ்க்கையை மெய்யுணர்ந் தையமுங்
கொடுக்கு மிற்றொறுஞ் கொண்டுண்டு கோவண
முடுப்புப் பாரி லுறவு பகையிவை
கெடுத்த கேள்விய ரவ்விடங் கிட்டுவார்.

(இ - ள்.) இல்லற வாழ்க்கையை நீங்கி, மெய்ப்பொருளை யுணர்ந்து, இல்லந்தோறுங் கொடுக்கும் பிச்சையையு மேற்றுண்டு, கோவணத்தை யுடுத்துப், பூமியிலுள்ள பொருள்களில் உறவையும் பகையையுங் கெடுத்த கேள்வியினை யுடையவரே அச் சிவலோகத் திற் பொருந்தி வாழ்வார்கள்.

(வி - ரை.) தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. (கக௭)

முற்றக் காலமு முன்னுடல் பின்னிடப்
பெற்று மேற்பதம் பெற்றது மற்றிட
வெற்றிப் பாச விருள்வலி யீடறத்
துற்று வார்கள் சொரூப சுகோதயம்.

(இ - ள்.) அப் பிரகிருதி சிவலோகத்திலிருந்து முந்திய பிரளயமளவாக ஆண்டுள்ள போகங்களைத் திளைத்து, அப் பிரகிருதி சம்பந்தமான சரீரத்தைவிட்டு, மேற்பதமான சுத்ததத்துவ புவனங்களை யடைந்திருந்து ஆண்டுள்ள போகம் புசித்துத் தொலைந்தவாறே மகா சங்கார காலத்திலே வயிந்தவ பாசமாகிய தேகத்தையும் விட்டு, வெற்றிப்பாடுடைய ஆணவாதிகளின் சத்திகெடப் பரமேசுரன் திருக்கண் சாத்தியருள முத்திபதமாகிய சிவனுடைய ஸ்ரீபாதத்தை யடைந்திருந்து தங்களிடத்துண்டாகிய சிவனந்தானுபூதியிற் றிளைப்பார்கள்.

[திரிசிரபுரம் - பண் - நட்டராகம்]

"கோல மாகரி யுரித்தவ னரவொடு மேனக்கொம் பிளவாமை
சாலப் பூண்டுதண் மதியது சூடிய சங்கரனுர் தம்மை
போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர் பொருகடல் விடமுண்ட
நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந் தொழவினை நில்லாவே."

என்னும் ஆளுடையபிள்ளையார் அருளிச்செய்த திருக்கடைக் காப்பானும்,

[சித்தியார் சுபக்ஷம்-எட்டாஞ் சூத்திரம்-கவி - உ௫.]

"தானம் யாகந் தீர்த்த மாச்சிரமந் தவங்கள் சாந்திவிரதங் கன்ம யோகங்கள் சரித்தோ, ரீனமிலாச் சுவர்க்கம்பெற்றிமைப்பளவின் மீள்வ ரீசன் யோகக் கிரியாசரியையினின் முயன்றோ, ரூனமிலா முத்திபதம்பெற் றுலகமெல்லா மொடுக்கும்போதான் முனிலா தொளியி னுற்பவித்து, ஞானநெறி யடைந்திடுவர் சிவனையங்கு காதனை முன்னிற்கி னனுகுவர் நற்றுளே." என்பதனானுமுணர்க.

ஈச னேவ விசைத்த வியற்பொருட்
டேச னார்ந்த வருஞ்செறி வாரங்க

வாச கத்தைமுன் சொன்ன வடிவுற
ஆசை முற்று மறுத்த வளவிலே.

(இ - ள்.) எல்லா ஆசைகளையுங் கெடுத்தகாலத்தி லேறிய தாகு மிவையென்று சிவபெருமா னருளிச்செய்ய அதனால் யான் சொல்லிய அவ் வாகமப்பொருட் டெளிவை அறிந்தவரும் அவ்வாகம வாக்கியத்தின் முன் சொல்லிய சாரூபம் பொருந்த அச் சிவலோகத்தில் வாழ்வார்கள்.

(வி - ரை.) ஐகாரம் சாரியை. (கசுக)

சிறந்த தேசத்துச் சித்திரை மாதமுன்
பிறந்த வாரத்துட் பெற்றுச் சிரத்தையு
நிறைந்த நெய்யினை நின்மலர்க் காட்டிமுன்
கறந்த பான்முதன் மற்றுங் களிப்பொடே.

(இ - ள்.) மூர்த்திவிசேடமுதலிய முச்சிறப்பும் பெற்ற தலங்களிற் சித்திரைமாதம் ஆதிவாரத்தில் அன்பையு முள்ளத்தமைத்துக் களிப்புடன் நின்மலனான சிவபெருமானுக்கு முன் கறந்த பால்வாசனை நிறைந்த நெய் முதலிய கௌவியங்களையும், மற்றுந் திரவியங்களையும் அபிடேகஞ் செய்து. (உ००)

செய்து மற்ற வினைகளுஞ் செய்தபின்
துய்ய பாயத மாதிய சொன்றியு
மூய்ய வாயிரம் பத்தரை யூட்டியுண்
மைய றீர்ந்த பதின்மரும் வாய்க்கவே.

(இ - ள்.) மற்ற உபசாரக் கிரியைகளையுஞ் செய்து அதற்குப் பின்பு உள்ளத்தின் மயக்க நீங்கின ஆயிரம் பத்தர்களுக்கு மாட்சிமையாக பரிசுத்தமான பாயசமுதலிய அன்னங்களையும் படைத்தருத்தி;

(வி-ரை.) 'ஆயிரம்' என்றது இங்குப் பலரையெனக் குறித்து நின்ற தென்க. (உ०க)

அற்றை வாரத் தரனுக்கோ ராயிரம்
பெற்றம் பாதி கருவுட் பிறங்கவே
வெற்றி வெள்விடை பத்தொடும் விட்டவர்
பற்று வாரச் சிவபுரம் பாங்கொடே.

(இ - ள்.) அவ் வாதிவாரத்தில் வெற்றியினையுடைய வெண்மையான ஆனேறு பத்துடன் ஆயிரம் பசுக்களைப் பாதிக் கருப்பம்

